ஓம்.

பரப்ரஹ்மணே நம:.

# யஜுர்வேத ஸந்த்யாவந்தநம் ஸாமவேத ஸந்த்யாவந்தநம் புருஷஸூக்தம் ஸ்ரீஸூக்தம் பூஸூக்தம் நீளாஸூக்தம் நாராயணஸூக்தம்

இவைகள்

ரங்கராமாநுஜஸ்வாமி வித்யாரண்ய ஸ்வாமி மத்வாசாரியர் வைத்திய நாத தீக்ஷிதர் பட்டபாஸ்கரர் கிருஷ்ணபட்டர் முதலானவர்களால் செய்யப்பட்ட

பாஷ்யத்தை ஸம்ஸ்கிருதத்திலிருந்து ப்ரதிபதத்துடன்

உ. வே. வித்வான்

காஞ்சிபுரம்

ஸ்யாமதேஶிக ஸ்ரீசைல

தாதாசாரியரால்

தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு

மதத்ரயவித்வான்களைக்கொண்டு

பரிசோதிக்கப்பட்டு

---

கெ. அனந்தாசாரியரால்

சென்னை:

ஸ்ரீநிகேதந அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1901

விற்கப்பட்ட புஸ்தகம்.

# தசோபநிஷத்பாஷ்யம்.

———:(o):———

சங்கர ராமாநுஜ மத்துவ பாஷியத்தை கிரந்த தெலுங்கு லிபியில் வேதஸ்ருதியும, பதவுரையும் தமிழில் மொழிபெயர்த்து, ஈச அணா.12. கேந அணா.12. கட அணா. 9. பிரச்ந அணா. 7. முண்டக அணா. 6. மாண்டுக்ய அணா 14 கவுடபாதகாரிகை அணா. 15. தைத்திரிய ரூபா.4. அணா.12. ஐத்திரிய அணா.12. ப்ருஹதாரண்ய ரூபா. 4. அணா. 2. சாந்தோக்யோபநிஷத்துகள் ரூபா 4. 50-பவுன் இடமானகாகிதம் ராயல்சயிஸ் 800 - பக்கம் கொண்டது சித்ரவேலைசெய்த கிலிட்பயிண்டுசார்சு உள்பட மொத்தம் ரூபா.16. வி. பி. அணா. 8.

ஷை 45 பவுன் காகிதம் கித்தான் பண்டு புஸ்தகம் ரூ.15. வி.பி. அ. 8.

இவ்வுபநிஷத்து தனித்தனி கொடுக்கப்படமாட்டா.

பகவத்கீதை கிரந்த தமிழ் சுலோகம் மொழிபெயர்ப்பு சங்கர மத்வ ராமாநுஜாய பாஷ்யத்துடன் பயிண்டு அணா. 10. வி. பி. அணா. 3. ஷை ப்ரதிபதத்துடன் அணா. 14. வி. பி. அணா. 4.

| | ரூ. அ. பை. | வி. பி. |
|---|---|---|
| தைத்திரீயோபநிஷத் பயிண்டுடன் | 1—4—0 | 0—5—0 |
| தேசிகப்பிரபந்த வியாக்கியானம் | 3—0—0 | 0—5—0 |
| தென்கலை குருபரம்பரை | 0–12–0 | 0—4—0 |
| நாலாயிரப்ரபந்தம் வடகலை திருமன்காப்பு | 2—0—0 | 0—5—0 |
| ஷை தென்கலை ஷை | 2—0—0 | 0—5—0 |
| கம்பராமாயணம் சுந்தரகாண்டம் உரையுடன் | 2—0—0 | 0—5—0 |
| கல்கிபுராணம் தசாவதாரத்தில் கடசி அவதாரம் கலியுகவிசித்திரம் ஸம்ஸ்கிருதத்திலிருந்து தமிழில் மொழிபெயர்த்து படத்துடன் | 0–12—0 | 0—4—0 |

ஷை புஸ்தகம் தவிர இதர புஸ்தகம் வாங்கி அனுப்பப்படமாட்டா.

இப்புஸ்தகங்கள் வேண்டியவர்கள் சென்னை பெத்துநாயக்கன் பேட்டை பயிராகி மடத்துக்கடுத்த போலீஸ் இராகவாசாரி தெருவு 8 - நெ. வீட்டிலிருக்கும் கெ. அனந்தாசாரியாரவர்களிடம் கிடைக்கும்.



ஹரி: ஓம்.

ஸ்ரீரஸ்து.

ஸ்ரீஹயக்ரீவாய நம:.

# ஸந்த்யாவந்தநபாஷ்யம்.

இது பிராமணர்கள் தினந்தோறும் காலை, நடுப்பகல், மாலை, இந்த மூன்று காலங்களிலும் செய்ய வேண்டியதோர் சடங்கு. இது ஒரு காலம் செய்யப்படாவிட்டாலும் அவன் பதிதனாய்விடுவனென்று தர்ம சாஸ்திரங்கள் முறையிடுகின்றன.

இது க்ஷத்ரிய வைஸ்யர்களுக்கு முரியதே. சூத்திரர்கள் இதைச் செய்தாலும் செய்யாவிட்டாலும் ஒன்றே. ஆனால் அவர்களுக்கு நிர்ப்பந்தமான கடமை வேறு. முறை வேறு.

ருக் - யஜுஸ் - ஸாமம் - என்று வேதம் மூன்றாகையால் அந்தந்த வேத சாகையை அனுசரித்த இச்ஸந்த்யா வந்தனத்தின் முறையும் மூன்று விதமானது. யஜுஸ் ஸந்த்யா வந்தனத்தின் முக்கியமான அம்சங்கள் தவிர சிலவிஷயங்களில் ஸ்மார்த்தர்களுக்கும் வைஷ்ணவர்களுக்கும் பேதமுண்டு.

இந்த ஸந்த்யா வந்தனமானது வேதமந்திரங்களைக் கொண்டு அனுஷ்டிக்க வேண்டினதாகையாலும் அர்த்தம் தெரியாத மந்திரங்களைக்கொண்டு செய்யும் க்ரியைகள் நிஷ்பலங்களென்று ஸ்மிருதிகள் சொல்வதாலும், அம்மந்த்ரங்களுக்கு ஸ்ரீ வைஷ்ணவ மதத்தை அனுஸரித்து ஸ்ரீ அஹோபில மடம் இரண்டாவது பட்டம் ஸ்ரீமந் நாராயண ஸ்வாமி ஒரு வ்யாக்யானமும், அத்வைத மதத்தை அனுஸரித்து க்ருஷ்ண பண்டிதர் ஒரு வ்யாக்யானமும் செய்திருக்கிறார்கள்.

இவை தவிர பட்ட பாஸ்கரர், வித்யாரண்யர், இவர்கள் வேத பாஷ்யம் செய்தவர்களாகையால் இம்மந்த்ரங்களுக்கு அவர்கள் வ்யாக்யானமும் உண்டு.

அல்லாமலும், வைத்ய நாத தீக்ஷிதரும் இவைகளுக்குச் சுருங்கமாக வ்யாக்யானம் செய்திருக்கிறார்.

இவைகளைத் தழுவி எல்லாருக்கும் பயன் படும் படி எளிய தமிழ் நடையில் அம்மந்த்ரங்களுக்கு இவ் வ்யாக்யானம் செய்யப் படுகிறது.

வைதிகங்களான எந்த கர்மங்களையும் ஆரம்பிக்கு முன்னே கால் கைகளை சுத்தி செய்து கொள்ள வேண்டும். அல்லாமலும், ஸ்நாநம் செய்யாமல் ஸந்த்யா வந்தநம் செய்யக் கூடாதாகையால் தர்ம சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட ஏழுவித ஸ்நாநங்களில் தன் சக்திக்கும் தேசகாலங்களுக்கு முரியதொரு ஸ்நாநத்தைச்செய்து உலர்ந்த வஸ்த்ரம் தரித்து நெற்றிக்குத் திலகம் அணிந்துபின் கால் கை அலம்பி ஸந்த்யா வந்தநம் தொடங்க வேண்டும்.

ஏழுவகை ஸ்நாநமாவது—

க. வாருண ஸ்நாநம்— ஜலத்தில் அமிழ்ந்து தலை முழுகுவது.

உ. பார்த்திவ ஸ்நாநம்—"ம்ருத்திகே ஹநமே பாபம்" என்று தொடங்கும் மந்த்ரங்கலால் தேஹமுழுதும் சுத்த மான மண்ணைப் பூசிக்கொள்வது.

ங. ஆக்நேயம்— அக்நி ஹோத்ர பஸ்மத்தை "ஈசாநம்" முதலிய மந்த்ரங்களால் தேஹத்தில் பூசுவது.

ச. வாயவ்யம்— பசுக்களின் குளம்பு தூள்களை கோஸாவித்ரியால் ஜபித்து உடம்பில் பூசிக்கொள்வது.

ரு. திவ்ய ஸ்நாநம்— உத்தராயண மத்யத்தில் வெயிலுடன் கூட மழைபெய்யும்போது அதில் நனைவதேயாம்.

சா. மந்த்ர ஸ்நாநம்— வேதத்தில் சொல்லுகிற "ஆபோ ஹிஷ்டா" என்னும் மந்த்ரத்தில் முறையே ஒவ் வொரு பாதத்தால் கால், தலை, மார்பு, தலை, மார்பு, கால், மார்பு, கால், தலை, இதுகளில் தீர்த்தத்தால் ப்ரோக்ஷித்துக் கொள்வதாம்.

எ. மாநஸம்— சங்கசக்ர தரனும் ஸூர்ய மண்டல மத்யத்தில் ஸுவர்ணாச்சாயையை யுடையவனும் பகவான் எழுந்தருளி யிருப்பதாகவும், அவர் திருவடிப்பெருவிரலில் விருந்து கங்கை ப்ரவஹித்து ப்ரஹ்மரந்த்ரத்தின் வழியாய்த் தன் தே

ஹத்தில் விழுவதாகவும், அதனால் தன் தேஹத்தில் உள்ளும் புறமுமுள்ள யாவத்து மலமும் கழிந்து விட்டதாகவும் த்யாநம் செய்வதேயாம்.

இவைதவிர, இரண்டு கால், இரண்டு கை, முகம் இதுகளை, அலம்புவது பஞ்சாங்க ஸ்நாநமாம். ஈரத் துணியால் உடம்பு முழுவதும் துடைத்துக்கொள்வது காபில ஸ்நாநம். புண்ட்ரம் தரிப்பதும் ஒரு ஸ்நாநமாகச் சொல்லப் பட்டிருக்கிறது. ஈர வஸ்த்ரத்தோடு ஒருகார்யமும் செய்ய லாகாது. வேறு உலர்ந்த வஸ்த்ரம் இல்லா விட்டால் ஈர வஸ்த்ரத்தை ஏழு தடவை காற்றில் உதறி விட்டால் அது உலர்ந்தது போல் பாவிக்கப்படும்.

திலகம் அணியும் விஷயத்தில் தம் தம் பெரியோர் நடந்த முறையே திருமண் கோபி சந்தனம் பஸ்மம் இதுகளினால் திலகமிட வேண்டும். அப்படி செய்யச் சாத்திய மில்லாத போது சுத்த ஜலத்தால் திலக மிட்டுக் கொள்ள வேண்டும்.

எந்த கர்மங்களுக்கும் முதலில் ஆசமநம் செய்யவேண்டும். ஆசமநம் பல ஸ்ம்ருதிகளில் பலவாறு கூறப் பட்டிருக்கிற படியால் அவர் அவர்கள் முன்னோர் உபதேசித்தபடி ஆசமநம் செய்ய வேண்டும்.

பிறகு ப்ராணாயாமம் செய்யவேண்டும். அதாவது—வலது கைப்பவித்திர விரல் கடைவிரல் களினால் இடதுநாசிகையை மூடி மூச்சை வெளிவிட்டு, பெருவிரலினால் வலது நாசிகையைமூடி மூச்சைப் பிடித்துக்கொண்டு ஸப்த வ்யாஹ்ருதிகள் காயத்ரீ காயத்ரீ சிரஸ்ஸு இதுகளை மூன்று தரம் மனஸால் உச்சரித்துப் பின்பு வலது நாசிகையால் மூச்சை வெளி விடுவதாம்.

அப்படி மூன்று ப்ராணாயாமம் செய்தபின் ஸங்கல்பம் செய்து கொள்ள வேணும். அதாவது—ஶ்ரீபகவதாஜ்ஞயா (பகவானது ஆஜ்ஞையினால்) பகவத்ப்ரீத்யர்த்தம் (பகவான் திருவுள்ள முகக் கைக்காக) ப்ராதஸ்ஸந்த்யாமுபாஸிஷ்யே (காலைச்சந்த்யையை உபாஸிக்கிறேன்) என்று அநுஸந்திப்பதாம். இது வடகலையார் அநுஸந்தானமுறை. பகவத்ப்ரீத்யர்த்தம் என்பதற்குப் பதிலாக பகவத்கைங்கர்யரூபம் (பகவானது கைங்கர்ய ரூபமாக) என்று அநுஸந்திப்பது தென்கலையார் முறை. பரமேஶ்வரப்ரீத்யர்த்தம் (பர

மேச்வரனது ப்ரீதிக்காகவும்) உவாத்த ஸமேஸ ஷாநி தகூயஷாரா வஜாவதி ரொகா வாவூலு௰ (நோக்துவிட்ட பாவ மெல்லாம் துலைந்து ப்ரஹ்ம லோகம் பெறுவதற்காகவும்) என்று அநுஸந்திப்பது ஸ்மார்த்தர் முறை. விஷ்ணு சப்தத்தை பரமேச்வர சப்தத்துக்குப் பதிலாக உபயோகிப்பது மாத்வர் முறை.

பின்பு புரமைசாந்திகள் ஸாத்விகத்யாகம் செய்யவேண்டும்.

ஒவ்வொரு மந்த்ரங்களுக்கு ருஷி, சந்தஸ்ஸு, தேவதை; மூன்றும் தெரியவேணும். ருஷியின் பெயரை சிரஸிலும், சந்தஸ்ஸின் பெயரை நாக்கின் முன்றும், தேவதையின் பெயரை ஹ்ருதயத்திலும் ந்யாஸம் செய்ய வேண்டும்.

உ௰॥ ஆபொஹிஷெ்டதி ஒநுஸ்ய ஸிநுதீவ ஜஷிஃ; தெவீ ஹாயத்ரீசுநூஃ; அவொ தெவதாஃ; வொக்ஷணெ விநியொநஃ॥

"ஆபோஹிஷ்டா" முதலாகிய "ஜநயதாசந:" என்பது வரையிலுள்ள மந்த்ரத்துக்கு ஸிந்துத்வீபர் என்பவர் ருஷி. தேவீகாயத்ரீ சந்தஸ்ஸு. அப்புதேவதை. இம்மந்த்ரங்களுக்கு ப்ரோக்ஷணம் செய்து கொள்வதில் விநியோகம்.

விசிஷ்டாத்வைத பாஷ்யம். எல்லா மந்த்ரங்களும் பகவானை ஸ்ரீயஃபதியையே சொல்லும். சிலது காரணப் பெயராக நிற்கும். சிலது இடுகுறியால் வேறொரு தேவதையை உணர்த்த அத்தேவதைகளின் அந்தராத்மாவான நாராயணன் அந்த மந்த்ரங்களுக்கு ப்ரதிபாத்யனாகிறான். ஆவஃ௰உ ஐக்ஷாவஃ அடையப் படுமவை அப்புக்களாம். ஆகையால் எல்லோராலும் மோக்ஷார்த்தம் அடையப்படும் ஸ்ரீயஃபதியே அப்பாகிறான்.

அத்வைத பாஷ்யம். கர்மங்கள் ஜ்ஞாநிக்கு ஆவச்யக மானவைகள் அல்ல. ப்ரஹ்மம் ஒன்றே என்றும் ஜ்ஞாநம் இல்லாதவன் ப்ரபஞ்சம் எல்லாம் உண்மையென்று நினைப்பவனாகையால் அவனுக்கு எல்லாம் உபாஸநீயமே.

மத்வமதம். எல்லாம் விஷ்ணுவின் பரிஜநமாகையால் பகவானது பரிஜநமான ஜலமே உபாஸிக்கப் படலாம்.

௨௯. ஆபோ ஹி ஷ்டா மயோபுவ: | தா ந ஊர்ஜே ததாதந | மஹேரணாய சக்ஷஸே | யோ வ: ஶிவதமோ ரஸ: | தஸ்ய பாஜயதேஹ ந: | உஶதீரிவ மாதர: | தஸ்மா அரங்கமாம வ: | யஸ்ய க்ஷயாய ஜிந்வத | ஆபோ ஜநயதா ச ந: ||௫||

## ப்ரதிபதம்.

| | |
|---|---|
| ஹே ஆப: | ஜலங்களே |
| (யூயம் | நீங்கள்) |
| மயோபுவ: | ஸுகத்துக்குக் காரணமாக |
| ஸ்தாஹி | ஆகிறீர்கள் அல்லவா |
| தா: | அந்த நீங்கள் |
| ந: | எங்களுக்கு |
| மஹே | பெரிதாயும் |
| ரணாய | அழகாயும் இருக்கிற |
| சக்ஷஸே | இந்த்ரியங்களுக்காக |
| ஊர்ஜே | அன்னத்தை |
| ததாதந | கொடுங்கள் |
| வ: | உங்களுக்கு |
| ஶிவதம: | மிகவும் மங்களமாகிய |
| ய: | எந்த |
| ரஸ: | ரஸமானது இருக்கிறதோ |
| இஹ | இந்த லோகத்தில் |
| ந: | எங்களை |
| தஸ்ய | அந்த ரஸத்தை |
| உஶதீ: | ப்ரீதியையுடைய |
| மாதர இவ | தாயார்கள் போல |
| பாஜயத | அடையியுங்கள் |
| யஸ்ய | எந்த ரஸத்தினுடைய |
| க்ஷயாய | நிலையின் பொருட்டு |
| ஜிந்வத | ப்ரீதியையடைகிறீர்களோ |

| | |
|---|---|
| தமெஸ | அந்த ரஸத்துக்காக |
| வ꞉ | உங்களை |
| ஈராம | மிகவும் |
| மஹாய | அடையக்கடவோம் |
| ஹெஹுவ꞉ | ஓஜலங்களே |
| ந꞉ | எங்களை |
| ஜநயய | ஜநிக்தவர்களாகச் செய்யுங்கள் |
| | என்பதாம். |

அத்.— பார்ப்பது, தொடுவது, முழுகுவது, குடிப்பது முத லியவைகளால் ஸந்தோஷத்தை உண்டு பண்ணுவது ஜலங்களே. நல்ல மழைபெய்து அதனால் தான்யங்கள் விளைந்து பூர்ண மான ம்ருஷ் டாந்நம் கிடைக்கும்படி செய்ய வேண்டியவை ஜலங்களே. இந்த் ரிய புஷ்டிக்காக அந்நம் ப்ரார்த்திக்கப்படுகிறது. பூர்ண மான ம்ருஷ்டாஹாரம் கிடைத்தால் தான் எல்லா இந்த்ரியங்களும் (கண் முதலியவை) ஸந்தோஷத்தை யடையும், அதனால் தான் புத்தி பலத்தை யடையும். புத்தியும் இந்த்ரியமும் பலத்தை யடைந்தால் அவை எல்லாக்கர்மங்களையும் அனுஷ்டிக்கும் திறமை யை யுண்டாக்கும். அந்நத்திலும் ரஸத்தோடு கூடிய அந்நமே குணம் கொடுப்பதாகையால் அந்த ரஸத்தைப் ப்ரார்த்திப்பது. தா ய்மார்கள் முலைப்பால் கொடுத்துக் குழந்தைகளை வளர்ப்பது போல் உங்கள் ரஸத்தைத் தந்து எங்களைப் போஷிக்க வேண்டுமென்று ப்ரார்த்திக்கிறது. ஆதரவினால் மறுபடி ப்ரார்த்தனை செய்கிறது மேல். எந்த ரஸம் உங்களுக்கே ஸந்தோஷத்தைக் கொடுக்கிற தோ, அந்த ரஸத்தை எங்களுக்குத் தரவேணும். அதனால் நாங் கள் ஸந்தாநத்தை யுண்டுபண்ணும் சக்தியை யடையும்படி செய் யவேண்டும். நாங்கள் பிறந்ததும் அந்த ரஸத்தாலேயே; அந்தரஸ மே எல்லா ப்ராணிகளின் ஜன்மத்துக்கும் காரண மென்று வேத ங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

வித்யாரண்ய பாஷ்யம்.— தாநஊர்ஜேததாதந- உங்கள் ரஸ த்தை அனுபவிக்கும்படி எங்களை நிலைநிறுத்துங்கள். மஹேரணாய சக்ஷஸேததாதந- பரதத்வ ஸாக்ஷாத் காரத்துக்கு எங்களை யோக் யராகச்செய்க, (சக்ஷஸே- பார்க்கத் தக்கதான.) இஹ- இந்த கார் யத்தில், க்ஷயாய- வாஸத்தினாலே.

விசிஷ்டாத்வைத பாஷ்யம்— மோக்ஷம் வேண்டு மென்று கோரும் பரமைகாந்திக்கும் உபாய பூர்த்தி வரையில் ஜ்ஞாநவிகாஸமும் அதற்காக தேஹாந்த்ரிய ஸௌக்யமும் வேண்டுமாகையால் அதற்குக் காரணமாக இங்கு இவன் அந்நத்தைப் ப்ரார்த்திக்கக்கூடும். ப்ரஹ்ம லோகம் முதலியவை நச்வர மாகையாலும் கைவல்யம் அல்ப ஸுக மாகையாலும் மிகவும் மங்கள மான ரஸமாவது- பரமாத்மாநுபவமே. அதுவே ஸம் ஸாரத்துக்கு மருந்து. அடுத்த ஜந்மம் இவ்வாறென்ற றியக்கூடாமையால் இந்த ஜந்மத்திலேயே மோக்ஷ ஸாதந மான பக்தியை யுண்டுபண்ண வேண்டு மென்று ப்ரார்த்திக்கை முக்யார்த்தம். "ரஸோவைஸ:" என்று உபநிஷத்தில் சொல்லுகையாலே இங்கும் ரஸ மென்று பரமாத்மாவையே சொல்லுகிற தென்றும் சொல்லலாம். உபாஸந தசையில் ஸாக்ஷாத்காரம் ஸுகரூபமா யிருக்கு மாகையால் அப்படிப்பட்ட ஸாக்ஷாத்காரத்தைக் கொடுத்து இந்த ஜந்மத்தில் போஷிக்கவேண்டும். மோக்ஷத்திலும் அந்த ஸாக்ஷாத் காரமே. பரப்ரஹ்மத்துக்கு ஸ்வாநுபவமும் ப்ரியமானது. ப்ரஹ்மவித்யையுடைய ஜந்மத்தையே முக்ய ஜந்ம மாகச் சொல்லப்பட்டிருப்பதால் ப்ரஹ்மவித்யையைப் பெறும்படி செய்வதே ஜநிக்கும்படி செய்வதாமென்று தாத்பர்யம். எல்லா வஸ்துக்களுக்கும் ஈச்வரன் அந்தராத்மாவென்று சொல்லப் பட்டிருப்பதால் இங்கு அப்சப்தம் அதன் அந்தர்யாமியான நாராயணனைச் சொல்லுகிறது. நித்ய பஹுவசநம் அப்சப்தம். ஸர்வ கர்மங்களுக்கும் பலத்தைக் கொடுக்க வேண்டியவன் நாராயணனே யாகையாலும், ஸாதாரண மான ஜலங்களுக்கு இவ்வளவு பலங்கொடுக்கச் சக்தி கிடையாதாகையாலும் அப்சப்தத்தால் சொல்லப்படும் பரமாத்மாவே ஐஹிகா முஷ்மிக பலங்களைக் கொடுக்கிறானென்பது ஸம்ப்ரதாயம்.

விநியோகம்— "பஸ்யக்ஷயாயஜிந்வத" என்னும் பாதத்தால் கால்களில் ஜலத்தை ப்ரோக்ஷிக்க. மற்ற முன் பின் பாதங்களால் மந்த்ரமுறையே சிரஸ்ஸில ஜலத்தை ப்ரோக்ஷித்துக் கொள்க. பின்பு வ்யாஹ்ருதித்ரயத்தால் ஜலத்தால் ப்ரதக்ஷிணமாகத் தன்னைச் சுற்றிக்கொள்க. வ்யாஹ்ருதி த்ரயம என்பது "ஓம் பூர் புவஸ்ஸுவ:" என்பதாம். இதற்கு அர்த்தம் மேலே சொல்லப்படும்.

௨௩. 𑌸𑍂𑌰𑍍𑌯𑌶𑍍𑌚𑍇𑌤𑍍𑌯𑌨𑍁𑌵𑌾𑌕𑌸𑍍𑌯𑌾𑌗𑍍𑌨𑌿𑌰𑍍𑌋𑌷𑌿𑌃; 𑌦𑍇𑌵𑍀 𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍀
𑌛𑌨𑍍𑌦𑌃; 𑌸𑍂𑌰𑍍𑌯𑍋 𑌦𑍇𑌵𑌤𑌾; 𑌅𑌪𑌾𑌂
𑌪𑍍𑌰𑌾𑌶𑌨𑍇 𑌵𑌿𑌨𑌿𑌯𑍋𑌗𑌃॥

ஸூர்யஶ்ச என்றும் அநுவாகத்துக்கு அக்னி ருஷி; தேவி காயத்ரீச் சந்தஸ்ஸு; ஸூர்யன் தேவதை; ஆத்மசுத்திக்காக ஜலத்தை புஜிக்க இந்த மந்த்ரம் உபயோகிக்கப்படும்.

௨௪. 𑌸𑍂𑌰𑍍𑌯𑌶𑍍𑌚 𑌮𑌾 𑌮𑌨𑍍𑌯𑍁𑌶𑍍𑌚 𑌮𑌨𑍍𑌯𑍁𑌪𑌤𑌯𑌶𑍍𑌚 𑌮𑌨𑍍𑌯𑍁𑌕𑍃𑌤𑍇𑌭𑍍𑌯𑌃।
𑌪𑌾𑌪𑍇𑌭𑍍𑌯𑍋 𑌰𑌕𑍍𑌷𑌨𑍍𑌤𑌾𑌮𑍍। 𑌯𑌦𑍍𑌰𑌾𑌤𑍍𑌰𑍍𑌯𑌾 𑌪𑌾𑌪𑌮𑌕𑌾𑌰𑍍𑌷𑌮𑍍।
𑌮𑌨𑌸𑌾 𑌵𑌾𑌚𑌾 𑌹𑌸𑍍𑌤𑌾𑌭𑍍𑌯𑌾𑌮𑍍। 𑌪𑌦𑍍𑌭𑍍𑌯𑌾𑌮𑍁𑌦𑌰𑍇𑌣 𑌶𑌿𑌶𑍍𑌨𑌾।
𑌰𑌾𑌤𑍍𑌰𑌿𑌸𑍍𑌤𑌦𑌵𑌲𑍁𑌮𑍍𑌪𑌤𑍁। 𑌯𑌤𑍍𑌕𑌿𑌞𑍍𑌚 𑌦𑍁𑌰𑌿𑌤𑌂 𑌮𑌯𑌿। 𑌇𑌦𑌮𑌹𑌂
𑌮𑌾𑌮𑌮𑍃𑌤𑌯𑍋𑌨𑍌। 𑌸𑍂𑌰𑍍𑌯𑍇 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌷𑌿 𑌜𑍁𑌹𑍋𑌮𑌿
𑌸𑍍𑌵𑌾𑌹𑌾॥

| | |
|---|---|
| 𑌸𑍂𑌰𑍍𑌯𑌶𑍍𑌚 | ஸூர்யனும் |
| 𑌮𑌨𑍍𑌯𑍁𑌶𑍍𑌚 | கோபமும் |
| 𑌮𑌨𑍍𑌯𑍁𑌪𑌤𑌯𑌶𑍍𑌚 | கோபத்துக்கு ஸ்வாமிகளான ராகம் முதலியவைகளும் |
| 𑌮𑌾 | என்னை |
| 𑌮𑌨𑍍𑌯𑍁𑌕𑍃𑌤𑍇𑌭𑍍𑌯𑌃 | கோபத்தால் உண்டாகிய |
| 𑌪𑌾𑌪𑍇𑌭𑍍𑌯𑌃 | பாபங்களினின்றும் |
| 𑌰𑌕𑍍𑌷𑌨𑍍𑌤𑌾𑌮𑍍 | ரக்ஷிக்கக்கடவன |
| 𑌰𑌾𑌤𑍍𑌰𑍍𑌯𑌾 | ராத்திரியிலே |
| 𑌮𑌨𑌸𑌾 | மனதினாலும் |
| 𑌵𑌾𑌚𑌾 | வாக்கினாலும் |
| 𑌹𑌸𑍍𑌤𑌾𑌭𑍍𑌯𑌾𑌮𑍍 | கைகளினாலும் |
| 𑌪𑌦𑍍𑌭𑍍𑌯𑌾𑌮𑍍 | கால்களினாலும் |
| 𑌉𑌦𑌰𑍇𑌣 | வயிற்றினாலும் |
| 𑌶𑌿𑌶𑍍𑌨𑌾 | ஆண்குறியினாலும் |
| 𑌯𑌤𑍍 | எந்த |
| 𑌪𑌾𑌪𑌂 | பாபத்தை |
| 𑌅𑌕𑌾𑌰𑍍𑌷𑌂 | செய்தேனோ |

| | |
|---|---|
| தத் | அந்தபாபத்தை |
| ராத்ரி: | ராத்திரியானது |
| அவலும்பது | போக்கடிக்கக்கடவது |
| மயி | என்னிடத்தில் |
| துரிதம் | வேறுபாபம் |
| யத்கிஞ்ச | எதாவதிருப்பதையும் |
| அவலும்பது | போக்கடிக்கக்கடவது |
| அஹம் | நான் |
| இதம் | இந்த |
| மாம் | நானென ஆத்ம வஸ்துவை |
| அம்ருதயோனௌ | மோக்ஷத்துக்குக்காரணமாகிய |
| ஜ்யோதிஷி | தேஜோரூபமாகிய |
| ஸூர்யே | ஸூர்யனிடத்தில் |
| ஜுஹோமி | ஹோமம்செய்கிறேன் |
| ஸ்வாஹா | என்பது ஹோமமந்த்ரம். |

அத்வைதபாஷ்யம்— ராகத்வேஷங்கள் கோபத்துக்குக் காரணமாகையால் அவைகள் இங்கு மந்யுபதிகள் என்று சொல்லப்படுகிறது. இங்கு கோபத்தினால் நான்செய்யும் எல்லாபாபங்களையும் போக்கி எல்லா தேவதைகளும் என்னை ரக்ஷிக்கவேண்டு மென்கிற ப்ரார்த்தனையில் தாத்பர்யம். பரஹிம்ஸை பரநிந்தை இவைகள் செய்ய நினைப்பது மனஸ்ஸினால் செய்யும் பாபம். அநிஷ்டம், பொய் இவைகள் சொல்வது வைவது முதலியவைவாக்கினால் செய்யும் பாபம். அசுத்தத்தைத் தொடுவது முதலியவை கையினால் செய்யும் பாபம். பசுப்ராஹ்மணர்களைக் காலால் தொடுவதும் அபுண்ய க்ஷேத்ரங்களுக்குப் போவதும் இவை முதலியவை கால்களினால் செய்யும் பாபம். புஜிக்கத்த காததை புஜிப்பது வயிற்றினால் செய்யும் பாபம். தான் புணர த்தகாதஸ்திரீயைப் புணர்வது ஆண்குறியினால் செய்யும் பாபம். இப்படி தனித் தனி முதலில் சொல்லி மறுபடி பொதுப்படச் சொல்லுகிறது. யத்கிஞ்சஎன்று. இந்த பாபங்களையும், இதுகளைச்செய்யும் என்னையும். மரணமும் பிறப்பு மில்லாமல் ஜகத்காரணமாய் ஸ்வயம் ப்ரகாசமான சூர்யனிடத்தில் ஹோமம் செய்கிறேன். இந்த ஹோமத்தினால் நான்

அவைகளை பஸ்ம மாக்குகிறேனென்று தாத்பர்யம்.

வைத்யநாதர்— மரணமில்லாததும் ஜகத்காரணமும் ஜகத்வ் யாபாரத்தை நடத்துவதும் ஸ்வயம் ப்ரகாசமும் சிதாநந்தாத்மக மு மாகிய ஆத்மா வென்று அக்னியில் ஹோமம் செய்வதினால் அதுகளை பஸ்ம மாக்குகிறேன்.

விசிஷ்டாத்வைதம்— 'ஸாதுஷு ஸம்யமயதீதி ஸத்ய:' நன்றாக நியமிப்பவர் பரமாத்வாவே. நியமனத்தில் நன்மை யாவது நிருபாதிகமா யிருப்பதே. ஓர் கல்பித காரணத்தால் அல்லாது ஸ்வபாவ ஸித்தமாயே யிருப்பதாம். மந்யு முதலியவை ரக்ஷிப்ப தாவது தங்களால் உண்டாகக் கூடியபாபம் உண்டாக ஒட்டாமல் செய்வதேயாம். பரமாத்மாவான நாராயணனே கோபம் முதலிய வைகளை நீக்கி ரக்ஷிக்க வேண்டுமென்று தாத்பர்யம். ராயதே க்ஷவஸ்ஸந்த்யஸ்ய வஸூந்யஸர்வாணீதி ராத்ரி: - தன்னை அணுகினதான வஸ்துக்கள் காக்கப்படுகிறன வாகையால் ராத்திரி என்பதும் பகவானது நாமமாம். ராத்ரி காலத்தில் செய்யப் பட்ட பாபங் களை ராத்திரி சப்தத்தால் சொல்லப்பட்ட பகவான் போக்கடிக்கட்டும். இங்கு மனஸ்ஸு முதலியவை சிலவே சொல்லப் பட்டாலும் அவை எல்லா இந்திரியங்களுக்கும் உபலக்ஷணம். தர்ம சாஸ்திரங்களில் மூவகைப் பாபங்கள் சொல்லப் பட்டன. அவையாவன, க - காயிகம் - சரீரத்தால் செய்வது. அதாவது- புஜிக்கத் தகாததைப் புஜிப்பது, குடிக்கத்தகாததைக் குடிப்பது, யாகம் செய்விக்கத் தகாதவனுக்கு யாகம் செய்விப்பது, அஸத்து க்களின் த்ரவ்யத்தை ப்ரதிக்ரஹிப்பது. பரஸ்திரீகளைப் புணர்வது, அயலார் திரவியத்தை அபஹரிப்பது, ஜந்துக்களை ஹிம்ஸை செய் வது, இவையும் இவை போன்றவையும். உ- வது. வாசிகம்-வாக் கினால் செய்வது, அதாவது- க்ரூர மாய் வார்த்தை சொல்வது, பொய்சொல்வது. சண்டைசெய்வது, கூலிக்கு வேதம்சொல்வது, இவையும் இவைபோன் றவையும். ந- வது. மானஸிகம்- மனதி னால் செய்வது, அதாவது அயலாருக்குத்தாபம் உண்டாகச் செய் வது. அயலாருக்கு த்ரோஹம் செய்வது, கோபம், லோபம். மோ ஹம். அஹங்காரம் இவை முதலியவைகளாம். இம்மூன்று விதபா பங்களையும் பகவான் போக்க வேண்டுமென்று இதில் பிரார்த்தித் த தாகிறது. "ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்று பகவா

ன் அருளிச்செய்கையாலே இப்பாபங்களைப் போக்கி ரக்ஷிக்கவே ண்டுமென்று கேழுப்ரார்த்தித்துப்பின்பொருகாலத்தில் அவை திரும்பி வந்து சேருமோ என்னும் பயத்தினுல் அவை ஸவாஸநமாய்ப் போய்விடவேணு மென்று 'அவலும்பது' என்று மறுபடி ப்ரார்த்திக்கிறது. உபாயாநுஷ்டானத்துக்கு முன்பட்ட பாபங்கள் நசிக்க வேண்டு மென்பது 'அவலும்பது' என்பதற்கும், பின்நேரும் ப்ராமாதிக பாபங்கள் நேரிடாமல் செய்யவேண்டு மென்பது 'ரக்ஷந்தாம்' என்பதற்கும் பொருளாம். இதுநீங்கலாக. அந்தந்த அதிகாரிக்குத்தக்கபடி ப்ராரப்தமும் ஸஞ்சிதமும் கழிக்கப்படுவதை மேலே 'யத்கிஞ்ச' என்று ப்ரார்த்திக்கிறது. பக்தியோகம் செய்பவனுக்கு ஸஞ்சிதம் மாத்ரம்கழியும், ப்ரபந்நனுக்கு ப்ராரப்தம் ஸஞ்சிதம் இரண்டும் கழியும் என்பது சாஸ்த்ரார்த்தம். உபாயாநுஷ்டான மில்லாமல் ப்ரதிபந்தகம் நிவர்த்தியாதாகையால் 'இதமஹம்' என்று உபாயத்தை அநுஷ்டிக்கிறபடி. சக்தியும் வேறுபாயமு மில்லாதயான் இந்த ஆத்மாவை மோக்ஷப்ரதமாய் நிருபாதிக (ஸ்வாபாவிக) தேஜோ ரூபமான பரமாத்மாவினிடத்தில் ஸமர்ப்பிக்கிறேனென்கை. ஆத்மா ஹவிஸ்ஸாகவும் பகவான் அக்னியாகவும் ஸமர்ப்பணம் ஹோமமாகவும் பகவத் சாஸ்த்ரங்களில் சொல்லப் பட்டிருக்கிறது. இதுவே பிரபத்தியென்னப்படும்.மோக்ஷத்துக்காகவே இப்பிரபத்தியை அநுஷ்டிப்பவன் ஸ்வதந்த்ர ப்ரபத்தி நிஷ்டன். மோக்ஷோபாயமாக பக்தியை அவலம்பித்து அது நிஷ்பந்நமாகும் பொருட்டு ப்ரபத்தி செய்பவன் அங்கப்ரபத்தி நிஷ்டன். இவ்விருவகையிலும் ஜகத்காரண பூதனை பகவானிடத்தில் பரந்யாஸம் செய்தவனுக்கு எல்லா ப்ரதி பந்தகங்களையும் போக்கி பகவான் ஸ்வாநுபவத்தைக் கொடுப்பன் என்பது ஸித்தாந்தம்.

விநியோகம்— வலதுகையில் ஜலத்தை எடுத்து 'ஸூர்யஶ்ச' என்னும் மந்திரத்தை உச்சரித்து ஸ்வாஹா என்று அந்தஜலத்தை உட்கொள்ளுக. பின் ஆசமநம் செய்க.

உ௬. ஓ௰ிக்ராவிணஊ இதிஂ ஹ்ய வாமஜெவ ஜ்ஷிः கு நுஷ்டுப்
ஊநः ஓ௰ிக்ராவா ஜெவதா ஜெ்ராக்ஷணெ விநியொ஗ः॥

ததிக்ராவிண்ணः என்றும் மந்த்ரத்துக்கு ருஷி வாமதேவர். சந்தஸ்ஸு அநுஷ்டுப் ததிக்ராவா என்பது தேவதை. ப்ரோக்ஷித்

துக்கொள்வதில் இம்மந்திரம் விநியோகிக்கப்படும்.

உரு. ததிக்ராவ்ணோ அகாரிஷம் | ஜிஷ்ணோ ரச்வஸ்ய வாஜிந꞉ | ஸுரபி நோ முகா கரத் | ப்ரண ஆயூம்ஷி தாரிஷத் ||

| | |
|---|---|
| ஜிஷ்ணோ꞉ | ஜயசீலரும் |
| அச்வஸ்ய | ஜகத்வ்யாபியும் |
| வாஜிந꞉ | அந்நவானும் ஆகிய |
| ததிக்ராவ்ண꞉ | ததிக்ராவாஎன்னும்தேவதைக்கு |
| அகாரிஷம் | செய்தேன். (அந்ததேவதையை ஸ்துதி செய்கிறே னென்று தாத்பர்யம்) |
| ந꞉ | எங்களது |
| முகா | முகங்களை |
| ஸுரபி | பரிமளமுடையதாக |
| கரத் | பண்ணட்டும் |
| ந꞉ | எங்களுடைய |
| ஆயூம்ஷி | ஆயுஸ்ஸுக்களை |
| ப்ரதாரிஷத் | உபத்ரவமில்லாமல்செய்யட்டும். |

பட்டபாஸ்கரர் பாஷ்யம்— தரிப்பதற்கு யோக்ய மாகையாகையாலே ததி என்று சொல்லப்படும் ஹவிஸ்ஸுக்களை அல்லது காஷ்டங்களை அடைவதால் ததிக்ராவா என்று அக்னிக்குப்பெயர். அக்னி ஒரு ஸமயத்தில் குதிரையின் ரூபத்தை எடுத்துக்கொண்டதால் அச்வஸ்ய என்பதற்குக் குதிரையாகிய என்றே பொருள் கூறலாம். வாஜிந꞉- வேகவானென என்றும் சொல்லலாம். அகாரிஷம். அப்படிப்பட்ட அக்னிக்கு நான் கர்மகரனாகக் கடவேன், அவன் ஸுக்ருத ஸம்ருத்தியால் நமதுமுகங்களை ஸௌரப்யமுடையதுகளாகச் செய்யட்டும். ப்ரதாரிஷத்- விருத்தியாக் கட்டும்.

அத்வைதம்— எல்லா தேவதைகளுக்குள்ளும் அக்னி ஒருவனே அன்னத்தைப் புசிப்பவனாகையால். இவனே அன்னத்தை உடையவன். 'அக்னிர் வைதேவாநா மந்நாத꞉' என்று சுருதிசொல்லுகிறது. வாயுவின் ஸகாவாகையாலே வேக முடையவன். இம்மந்திரம் ஸூர்ய பரமென்று சிலர். அப்போது, ததிக்ரவ்ண꞉-

லோகயாத்ரையை நடத்து மவனும். வாஜிந:- வேகவானு மாகிய ஸூர்யனுக்கு என்று பொருள். மற்றவைகள் முன்போலவே.

வைத்யநாதர்— ததி- தயிர்- அதை அடைவது- தயிரில் அதி கப்ரீதி யுடைய தொரு தேவதை ததிக்ராவா என்று சொல்லப் படும்.

விசிஷ்டாத்வைதம்— ததாதி க்ராமதி ஜயதி ததிக்ராவா ஸகல ஜகந்நியந்தாவும் ஸகல ஜகதாதாரனும் ஸகல ஜகத்தையும் அளந்தவனுமான நாராயணனே ததிக்ராவா என்று சொல்லப்படு கிறான். ஜகத்தை அளந்து பலி சக்கிரவர்த்தியை ஜயித்ததினாலே அவனே ஜயசீலன். பக்தர் நினைத்தவுடனே அவர்களை ரக்ஷிப்பதற் காக ஓடி வருவதால் இவனே வேக முடையவன். இங்கு முகா என்றது மனதுக்கும் உபலக்ஷணம். மனதும் முகமும் சுத்தமாகப் பெற்றவனுக்கே பகவத் ஸ்தோத்ரத்தில் அதிகாரமாகையால் தன்னை ஸ்தோத்ரம் செய்யும்படி நமது மனதையும் முகங்களையும் பகவான் பரிசுத்தமாகச் செய்யட்டும். ப்ரபந்நனுக்குக் கைங்கர்யமே முக்கியமாகையால் ஆயுஸ்ஸில்லா விட்டாலும் உள்ள ஆயுஸ்ஸில் வ்யாதிமுதலிய உபத்திரவம் இருந்தாலும் ஸ்தோத்ரம் செய்ய ஸாத்தியப் படாதாகையால் ஸ்தோத்ரம் செய்வதற்காக ஆயுஸ்ஸையும் அதில் உபத்திரவம் இல்லாமையையும் ப்ரார்த்திப்பதினால் பரமைகாந்தித்வத்துக்குக் குறையில்லை.

விநியோகம்— இம்மந்திரத்தின் ஒவ்வொரு பாதங்களினாலும் ஜலத்தால் சிரஸ்ஸில் ப்ரோக்ஷித்துக் கொள்ள வேண்டும். உடனே கீழ்ச்சொன்னபடி 'ஆபோஹிஷ்டாமயோபுவ:' என்பது முதலிய பாதங்களால் முன்போல ப்ரோக்ஷணமும் ஜலத்தால் தன்னை ப்ரதக்ஷிணமாய்ச்சுற்றிகொள்வதும் செய்யவெண்டும். இதுவைஷ்ணவர் கிரமம். பெரும்பாலும் ஸ்மார்த்தக்கிரமமும்இதுவே. சிலர் ஹிரண்யவர்ணா: முதலிய சிலமந்திரங்களால் ப்ரோக்ஷணம்செய்து கொள்ளுகிறார்கள்.

அதற்குப்பிறகுப் பிராணாயாமம் செய்யவேண்டும்.

௨௭. ஸாவித்ர்யா ருஷி: விஶ்வாமித்ர: தேவீ காயத்ரீ ச்சந்த: ஸவிதா தேவதா॥

ஸாவித்திரிக்கு விச்வாமித்ரர் ருஷி, காயத்ரீ சந்தஸ்ஸு, ஸ

விதா தேவதை. இது இப்போது அர்க்ய ப்ரதானத்தில் உபயோகிக்கப் படுகிறது.

சிலர் அர்க்கிய ப்ரதானத்துக்காக ஸங்கல்பம் செய்துகொள்ளுகிறார்கள். ஸந்த்யோபாஸநம் என்பதே அர்க்கிய ப்ரதான மாகையாலும் மற்றவை அங்கமாகையாலும் முதலில் செய்து கொண்ட ஸங்கல்பம் தவிர இங்கு வேறொருஸங்கல்பம் செய்துக்கொள்ளவேண்டிய அவசியமில்லை.

காயத்ரியே அர்க்கியப்ரதானத்துக்கு மந்த்ரம். அதற்கு வ்யாக்கியானம் மேலே செய்யப்படும். இருகையிலும் ஜலத்தை யெடுத்துக்கொண்டு நின்றுபெருவிரலும்ஆள்கட்டி விரலும் சேர்த்தால் ராக்ஷஸ முத்திரை ஆகையால் அதுகளைச்சேர ஒட்டாமல் காயத்ரியை உச்சரித்து புருவம் உயரம் தூக்கி அர்க்கயத்தை ஜலத்தில் விடவேண்டும். ஸூர்ய மண்டலத்தின் நடுவில் எழுந்தருளியிருக்கும் பகவானது திருவடிகளில் அர்க்கியம் ஸமர்ப்பிப்பதாக இவன் தியானிக்கக்கடவன். முன்னே சிலராக்ஷஸர்கள் கடுமையாகத்தவம் செய்து ப்ரஹ்மாவினிடத்தில் வரம் பெற்று ஸூர்யன் உதயமாம் போதும் அஸ்தமனமாகும்போதும் ஸூர்யனுடன் சண்டை செய்கிறார்கள் என்றும் பிராஹ்மணர்கள் ஸூர்யனுக்கு எதிர் முகமாக நின்று காயத்திரியால் மந்திரித்த ஜலத்தை உயர எறிகிறார்களென்றும் அந்த ஜலங்கள் மந்த்ரபலத்தால் வஜ்ராயுதமாக ஆய் அந்த ராக்ஷஸர்களை மந் தேஹாருணத்வீபத்தில் தள்ளிவிடுகிறதென்றும் ப்ரஹ்மவரத்தால் மறுபடி அவர்கள் பிழைத்து மறு ஸந்த்யாகாலத்தில் சண்டைசெய்யத்துடங்குகிறார்கள்; என்றும் இவ்வாறு பிரதி ஸந்த்யா காலத்திலும் நடக்கிறதென்றும் அந்த ராக்ஷஸர்களைப் பிடித்த பாபம் போகவே பிராமணர்கள் ஆத்மப்ரதக்ஷிணம் செய்து கொள்வதென்றும் வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. காலைமாலைச் சந்தியைகளில் மும்மூன்று அர்க்யம். மந்த்யாஹ்ந ஸந்தியையில் இரண்டு அர்க்கயம்.

ப்ராதஸ்ஸந்த்யையில் ஸூர்யோதயத்துக்கு முன்னும் ஸாயம் ஸந்த்யையில் ஸூர்யாஸ்தமயத்துக்கு முன்னும் அர்க்ய ப்ரதானம் செய்யவேண்டும். அந்தகாலம் கடந்துவிட்டால் ப்ராயச்சித்தம் செய்ய வேண்டும். அதற்குப் பலப்ராயச்சித்தம் சொல்லப்பட்டது. அதுகளில் முக்கியமானது மற்றொரு அர்க்கியம் ஸமர்ப் பிப்ப

தேயாம். இது நாலாவது அர்க்கியமாகையால் துரீயார்க்கியம் என்று சொல்லப்படும். ப்ராணாயாமம் செய்து இந்த ஸந்தியையின் காலாதீத ப்ராயச்சித்தத் துக்காக நாலாவது அர்கிய ப்ரதானம் செய்கிறேனென்று ஸங்கல்பித்துக் கொண்டு முன்போல் இரு கையாலும் ஜலத்தை யெடுத்து-ஸப்தவ்யாஹ்ருதிகள் காயத்ரீமறு படி ஸப்தவ்யாஹ்ருதிகள் இதுகளை உச்சரித்து முன்போல ஸமர்ப்பிக்க வேண்டும். இதற்கு மந்த்ரங்கள் பலவாறு பலர் அநுஸந்திக்கிறார்கள்.

கிரமமான அர்க்கிய ப்ரதானம் செய்த பின்பு ப்ராணாயாமம் செய்து ஸங்கல்பித்துக்கொண்டு ப்ராயச்சித்தார்க்கியம் ஸமர்ப்பிப்பது வைஷ்ணவர்களின் ஸம்ப்ரதாயம்.

முதலில் அர்க்கிய ப்ரதானத்துக்காக ப்ராணாயாமம் செய்த உடனே காலாதீதப்ராயச்சித்தார்க்கிய பூர்வகமாக இந்தஸந்த்யையில் அர்க்கிய ப்ரதானம் செய்கிறேன் என்று ஸங்கல்பித்துக்கொண்டு வ்யாஹ்ருதி சிரஸ்ஸுகளுடன் கூடிய காயத்ரீயால் முதலில் பிராயச் சித்தார்க்கியம் ஸமர்ப்பித்துப் பின்பு காயத்திரியால் கிரமமான அர்க்கிய ப்ரதானம் செய்யவேண்டுமென்று க்ருஷ்ண பட்டர் சொல்லி யிருக்கிறார்.

பின்பு வ்யாஹ்ருதி த்ரயத்தால் ஜலத்தால் தன்னைச்சுற்றி ப்ரதக்ஷிணம் பண்ணிக்கொள்ள வேண்டும். முன்சொன்ன மந்தேஹ நிரஸன பாபத்துக்கு ப்ராயச்சித்தமாகத் தன்னைத்தான் சுற்றிக் கொள்ளவேணும். பின்பு. ௸ஸாவாதித்யோ ப்ரஹ்ம, ௸வஸ ஆதித்ய: - ஸூர்யனை, ப்ரஹ்ம - பரப்ரஹ்மம் என்று ஸூர்யனைத் யாசிக்க வேண்டும்.

விசிஷ்டாத்வைதம்— இங்கு ஆதித்யசப்தம், ஆதித்ய: - ௸ஸூர்யவாஸீ, ஸூர்யமண்டலத்தில் வாஸம் செய்கிற பகவானைச் சொல்லுகிறது. 'ப்ரஹ்ம மரிப்ருடம் ஸர்வத:, என்று யாஸ்கர் நிர்வசநம் செய்தபடி எல்லாவிதத்திலும் பெருமையுடையது ப்ரஹ்மமாம். அதாவது ஸ்ரீ மந்நாராயணனே பரமாத்மா. அவனே ஸூர்ய மண்டலத்தில் இருப்பவன்.

அதற்குப் பின்பு ஆசமனம் செய்து தர்ப்பணம் செய்யவேண்டும். மார்கழிமுதலிய பண்ணிரண்டு மாஸங்களுக்கும் கேசவன்

முதலிய பன்னிரண்டு மூர்த்திகள் அதிஷ்டானதேவதைகள். அவர்களைக்குறித்து தர்ப்பணம் செய்வது வைஷ்ணவர்முறை.

உ-ம். கேஶவம் தர்பயாமி, நாராயணம் தர்பயாமி, மாதவம் தர்பயாமி, கோவிந்தம் தர்பயாமி, விஷ்ணும் தர்பயாமி, மதுஸூதநம் தர்பயாமி, த்ரிவிக்ரமம் தர்பயாமி, வாமநம் தர்பயாமி, ஶ்ரீதரம் தர்பயாமி, ஹ்ருஷீகேஶம் தர்பயாமி, பத்மநாபம் தர்பயாமி, தாமோதரம் தர்பயாமி,

இது தர்ப்பண மந்த்ரம். கேசவனை உத்தேசித்துத் தர்ப்பணம் செய்கிறேன். இந்த ரீதியாய் எல்லா வற்றிற்கும் பொருள் கொள்க.

ஸ்மார்த்தர்கள் கேசவாதிகளுக்குமுன்னே நவக்கிரஹ தர்ப்பணம் செய்து அதன்பின்பு கேசவாதி தர்ப்பணம் செய்கிறார்கள்.

உ-ம். ஆதித்யம் தர்பயாமி, ஸோமம் தர்பயாமி, அங்காரகம் தர்பயாமி, புதம் தர்பயாமி, ப்ருஹஸ்பதிம் தர்பயாமி, ஶுக்ரம் தர்பயாமி, ஶநைஶ்சரம் தர்பயாமி, ராஹும் தர்பயாமி, கேதும் தர்பயாமி, கேஶவம் தர்பயாமீத்யாதி||

அஸாவாதித்யோ ப்ர்ஹ்ம என்று தியானம் செய்தபின்பு ஆசமனம்செய்து பிராணாயாமம் பண்ணி 'மமோபாத்தஸமஸ்த துரிதக்ஷயத்வாரா ஶ்ரீபரமேஶ்வர ப்ரீத்யர்த்தம் ப்ராதஸ்ஸந்த்யாங்க தர்பணம் கரிஷ்யே' பாபங்கள் நீங்குவதற்காகவும் பரமேச்வரனது ப்ரீதிக்காகவும் காலைச் சந்தியையின் அங்கமாகிய தர்ப்பணத்தைச் செய்கிறேனென்று ஸங்கல்பித்துக் கொண்டு. ஸந்த்யாம் தர்பயாமி, காயத்ரீம் தர்பயாமி, ப்ராஹ்மீம் தர்பயாமி, நிம்ருஜீம் தர்பயாமி, என்று காலையிலும் ஸாயங்காலத்தில், ஸந்த்யாம் ஸரஸ்வதீம் வைஷ்ணவீம் நிம்ருஜீம் என்றும் மத்தியாஹ்நத்தில், ஸந்த்யாம் காயத்ரீம் ரௌத்ரீம் நிம்ருஜீம்' என்றும் தர்ப்பணம் செய்ய வேண்டுமென்று கிருஷ்ண பட்டர் கூறுகிறார்.

இப்படி தர்ப்பணம் செய்த உடனே ஆசமனம்செய்து அது களை பகவதர்ப்பணம் செய்யவேண்டும்.

ஶ்ரீக்ருஷ்ணார்ப்பணம் என்றுவது, ஸமஸ்தநாராயணம் என்றுவது, வைஷ்ணவர்களும் ஓம் தத்ஸத் ப்ரஹ்மார்ப்பணம் என்று ஸ்மார்த்தர்களும் பகவதர்ப்பணம் செய்வார்கள்.

இவை கிருஷ்ணனுக்கு ஸமர்ப்பிக்கப்பட்டன. இவை பகவானுக்காராதன மாகக்கடவன. நித்யம் நைமித்திகம் காம்யம் என்று மூன்று விதமான கர்மங்களும் பர ப்ரஹ்மத்துக்கு அர்ப்பணம் ஆகக்கடவது. என்பது முறையே அவற்றின் தாத்பர்யம்.

## இனி ஜபம் செய்யும் முறை.

ஜபம் செய்ய வேண்டிய இடத்தை வ்யாஹ்ருதி த்ரயத்தால் ப்ரோக்ஷித்து ஜபம் ஆரம்பிக்கவேண்டும். மாலை சந்தியில் மேற்கு முகமாக உட்கார்ந்தும் மற்ற இரண்டு காலமும் கிழக்குமுகமாக நின்று கொண்டும் ஜபம் செய்யவேண்டும்.

ஓம். ப்ரணவஸ்ய ருஷிர் ப்ரஹ்மா, தேவீ காயத்ரீ சந்த: பரமாத்மா தேவதா ||

ப்ரணவத்துக்கு ப்ரஹ்மா, ருஷி, தேவி காயத்ரீச் சந்தஸ்ஸு, பரமாத்மா தேவதை.

இந்த ப்ரணவமானது. அ- உ- ம். என்னும் மூன்று அக்ஷரங்களால் ஆனது. இந்த ஜீவாத்மா ஸர்வ ரக்ஷகனை விஷ்ணுவுக்கே சேஷ பூதமென்பதும், ஜீவன் விஷ்ணு லக்ஷ்மீ இருவருக்கும் சேஷ பூதனென்பதும் இதன் அர்த்தம்.

ஓம். ஓம்பூராதி ஸப்தவ்யாஹ்ருதீநாம் அத்ரி ப்ருகு குத்ஸ வஸிஷ்ட கௌதம காஶ்யப ஆங்கீரஸ ருஷய:, காயத்ர்யுஷ்ணிக் அனுஷ்டுப் ப்ருஹதீ பங்க்தி த்ரிஷ்டுப் ஜகத்ய: சந்தாம்ஸி, அக்நி வாய்வர்க்க வாகீஶ வருணேந்த்ர விஶ்வேதேவா தேவதா: ||

பூ:, புவ:, ஸுவ:, மஹ:, ஜந:, தப:, ஸத்யம். இவ்வேழும் ஸப்தவ்யாஹ்ருதிகள் என்று சொல்லப்படும். இவைகள் ஒவ்வொன்றின் முதலிலும் ப்ரணவத்தைச் சேர்த்துக்கொள்ள வே

ண்டும். பூ: என்றும் வ்யாஹ்ருதிக்கு அத்ரிருஷி, காயத்ரீச் சந்தஸ்ஸு, அக்னி தேவதை. புவ:- என்றும் வ்யாஹ்ருதிக்கு ப்ருகு ருஷி, உஷ்ணிக்குச் சந்தஸ்ஸு, வாயு தேவதை. ஸுவ: என்றும் வ்யாஹ்ருதிக்கு குத்ஸர் ருஷி, அநுஷ்டுப்சந்தஸ்ஸு, ஸூர்யன் தேவதை. மஹ: என்றும் வ்யாஹ்ருதிக்கு வஸிஷ்டர் ருஷி, ப்ருஹதீ சந்தஸ்ஸு, ப்ருஹஸ்பதி தேவதை. ஜந: என்றும் வ்யாஹ்ருதிக்கு கௌதமர் ருஷி. பங்க்திச்சந்தஸ்ஸு, வருணன் தேவதை, தப: என்றும் வ்யாஹ்ருதிக்கு காஶ்யபர் ருஷி, த்ரிஷ்டுப் சந்தஸ்ஸு, இந்தரன் தேவதை. ஸத்யம் என்றும் வ்யாஹ்ருதிக்கு அங்கிரஸ்ஸு ருஷி, ஜகதீச் சந்தஸ்ஸு, விச்வே தேவர்கள் தேவதை.

உ௰. ஸாவித்ர்யா꞉, ஐஷிঃ விஶ்வா மித்ர꞉, தெவீ மாயத்ரீ ச்ச꞉, ஸவிதா தெவதா ||

முன்னே அர்த்தம் சொல்லப்பட்டது.

உ௧. ஶிரஸொ ப்ரஹ்மா ஐஷிঃ அநுஷ்டுப் ச்ச꞉ பரமாத்மா தெவதா ||

காயத்ரீ சிரஸ்ஸு என்றும் மந்த்ரத்துக்கு ப்ரஹ்மா ருஷி, அனுஷ்டுப் சந்தஸ்ஸு, பரமாத்மாவே தேவதை.

உ௨. ஸவெஷாம் ப்ராணாயாமெ விநியோக꞉ ||

ப்ரணவம் ஸப்தவ்யாஹ்ருதிகள் காயத்ரீ காயத்ரீ சிரஸ்ஸு இவைகள் ப்ராணாயாமத்தில் விநியோகிக்கப்படுகிறன.

இப்படிந்யாஸம் செய்த பின்பு வ்யாஹ்ருதிகளை அங்கங்களில் ந்யாஸம் செய்யவேண்டும்.

முதல் வ்யாஹ்ருதியைப் பாதங்களிலும், இரண்டாவது வ்யாஹ்ருதியைக்கணுக்கால்களிலும்,மூன்றுவதுவ்யாஹ்ருதியை முழங்கால்களிலும், நாலாவது வ்யாஹ்ருதியை வயிற்றிலும், ஐந்தாவது வ்யாஹ்ருதியை மார்பு, அல்லது கண்டத்திலும், ஆறுவது வ்யாஹ்ருதியை முகத்திலும், ஏழாவது வ்யாஹ்ருதியை சிரஸ்ஸிலும் ந்யாஸம் செய்ய வேண்டும்.

பின்பு மேல் சொல்லும் முறையே வ்யாஹ்ருதிகளைத் தியானம் செய்யவும்.

உஅ. ஶ்வேதஶ்யாமஜபீதபிங்க ரோஹிதநீலகநகவர்ணா:
கஹயாக்ஷஸூத்ர ஶரப்த வரத ஹஸ்தாஸ்ய பவித்ர பத்ம
ஸம்ஸ்தா: ஸூக்ஷ்மநாதவ்ருதம் க்ருதா: ஸர்வாலங்கரணபூ
ஷிதா: ஸோபவீதாஸ் ஜடா ஐந்த்ராக்யா ||

ஒவ்வொரு வ்யாஹ்ருதியும் நாலுகைகளும், அந்த கைகளில் பவித்ரமும், அபயமுத்திரை, அக்ஷமாலை, ஜலபாத்ரம், வரதானமுத்திரை, இவைகளும் தரித்து, சந்தனம், மாலை, இதுகளால் அலங்கரிக்கப்பட்டு, எல்லா ஆபரணங்களும் அணிந்து, உபவீதம் ஜடை இதுகளோடு இருப்பதாகவும், அவை முறையே வெளுப்பு, கறுப்பு, மஞ்சள், பிங்களவர்ணம், செகப்பு, நீலம், ஸ்வர்ணவர்ணம், இந்த நிறத்தோடிருப்பதாகவும் தியானித்து. காயத்ரியின் ஒவ்வொருபாதத்தையும் இரண்டாகப்பிரித்து ஆறு பாகமாக்கிக்கொண்டு மார்பு, சிரஸ்ஸு, சிகை, தோள்கள், கால்கள், திக்கு, விதிக்குகள், இவைகளில் ந்யாஸம் செய்வது. அத்துடன் ஹ்ருதயாதி அங்க மந்த்ரங்களைக் கூட்டிக்கொள்க. தத்ஸவிது:, ஜ்ஞாநாய ஹ்ருதயாய நம:, வரேண்யம் ஐஶ்வர்யாய ஶிரஸே ஸ்வாஹா, பர்கோ தேவஸ்ய ஶக்த்யை ஶிகாயை வஷட், தீமஹி வீர்யாய கவசாய ஹும், தியோ யோ ந:, தேஜஸே நேத்ராப்யாம் வௌஷட், ப்ரசோதயாத், ஸர்வவீர்யாயாஸ்த்ராய பட், இதுஷடங்க ந்யாஸமந்த்ரம். இந்த ஷடங்க ந்யாஸ மானது ஷடங்க முத்திரைகளால் செய்யத் தக்கது. அதுகளை குரு முகமாய்த் தெரிந்து கொள்வது.

பின்பு காயத்ரியை மேல் சொல்லுகிற முறையே தியானம் செய்க.

உகூ. முக்தாவித்ரும ஹேம நீலதவளச்சாயைர்முகைஸ்த்ரீ
க்ஷணைர் யுக்தாமிந்து நிபத்தரத்நமகுடாம் தத்வார்த்த
வர்ணாத்மிகாம் | காயத்ரீம் வரதாபயாங்குஶகஶா:
ஶுப்ரம் கபாலம் குணம் ஶங்கம் சக்ரமதாரவிந்தயுகளம்
ஹஸ்தைர்வஹந்தீம் பஜே ||

கிரீடத்தில் சந்திரன், ஐந்து முகங்கள், ஒவ்வொரு முகத்திலும் மும் மூன்று கண்கள், முகங்கள் முறையே முத்து, பவழம்,

பொன், நீலம், வெளுப்பு, இந்தகாந்தி யுடையது, பத்துகைகள், கைகளில் முறையே, வரதான முத்திரை, அபயமுத்திரை, அங்குசம், கசை (கொரடா) வெளுப்புக்கபாலம், கயிறு, சங்கம்- சக்கிரம், இரண்டு தாமரைப்பூ, இவைகள் தரித்திருப்பவள். ஸர்வைதத்வஸ்வரூபிணி, ஸர்வார்த்தரூபிணி, ஸர்வாக்ஷரரூபிணி, இப்படிப்பட்ட காயத்திரியை நான் ஸேவிக்கிறேன். என்று அஞ்சலி செய்து காயத்ரீ சிரஸ்ஸால் சிரஸ்ஸு முதல் பாதம் வரையில் வ்யாபக ந்யாஸம் செய்ய வேண்டும். பிறகு காயத்ரீ ப்ரதிபாத்யமான தேவதையை ஸ்துதி செய்ய வேண்டும்.

௨௬. 𑌸𑍂𑌰𑍍𑌯𑌮𑌣𑍍𑌡𑌲𑌮𑌧𑍍𑌯𑌸𑍍𑌥𑌂 𑌸𑍂𑌰𑍍𑌯𑌕𑍋𑌟𑌿 𑌸𑌮𑌪𑍍𑌰𑌭𑌂 । 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌦𑌿 𑌸𑍇𑌵𑍍𑌯 𑌪𑌾𑌦𑌾𑌬𑍍𑌜𑌂 𑌨𑍌𑌮𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌰𑌮𑌾𑌸𑌖𑌂 ॥

ஸூர்ய மண்டல மத்தியத்தில் இருப்பவரும், கோடி ஸூர்யர்களுக்கு ஸமானமான காந்தி யுடையவரும், ப்ரஹ்மா முதலியவர்களால் ஸேவிக்கத்தக்க பாதகமலத்தை யுடையவரும்- பரப்ரஹ்மரூபியுமாகிய ஸ்ரீயஃபதியை நான் ஸ்தோத்திரம் செய்கிறேனென்பது இதன் பொருள்.

பிறகு முறைப்படி மூன்று ப்ராணயாமம் செய்ய வேண்டும்.

அத்வைதம்— ஸப்தவ்யாஹ்ருதிகளுக்கும் முறையே ஸப்த லோகங்கள் அர்த்தம்.

விசிஷ்டாத்வைதம்— வ்யாஹ்ருதிகளினால் த்யாநிக்கப் படவேண்டியவன் ஸர்வஜகத்காரணனான நாராயணனே.

௨௭. 𑌓𑌮𑌾𑌪𑍋 𑌜𑍍𑌯𑍋𑌤𑍀 𑌰𑌸𑍋𑌽𑌮𑍃𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌭𑍂𑌰𑍍𑌭𑍁𑌵𑌸𑍍𑌸𑍁𑌵𑌰𑍋𑌮𑍍 ॥

இது காயத்ரீ சிரஸ்ஸு.

விசிஷ்—ஆபஃ-ஜலங்களும், ஜ்யோதிஃ- அக்னியும், மற்ற பூதங்களும், ரஸஃ- ரஸம் முதலிய விஷயங்களும், அம்ருதம். காலமும், ப்ரஹ்ம- ப்ரக்ருதியும், பூஃ - பூலோகமும், புவஃ - புவர்லோகமும், ஸுவஃ- ஸுவர்லோகமும், ஓம்- ப்ரஹ்மஸ்வரூபமானது. எல்லா வஸ்துக்களும் பரமாத்மாவினிடத்திலேயே என்பது தோன்ற இதன் முதலிலும் முடிவிலும் ப்ரணவம் சேர்க்கப்பட்டது.

வைத்யநாதர்— அகாரம் உகாரம் மகாரம் மூன்றும் சேர்ந்த ப்பிரணவத்திற்கு விஷ்ணு சிவன் ப்ரஹ்மா என்றும் த்ரிமூர்த்தி

ஸ்வரூபியான பரமாத்மா அர்த்தம். பூ:- ஸத்தை, அதுவும் பரமாத்மாவே, புவ:- எல்லா வற்றிற்கும் ஸ்திதிகாரணமும் பரமாத்மாவே, ஸுவ:- ஸநகாதிகளால் நன்றாக வரிக்கப்படுவது, அல்லது ஸர்வத்தையும் வ்யாபித்திருப்பதும் பரமாத்மாவே, மஹ: - முமுக்ஷுக்களால் பூஜிக்கப்படுவதும் பரமாத்மாவே, ஜந:- எல்லா ஜகத்தையும் ஜனிப்பித்ததும் பரமாத்மாவே, தப:- ஸூர்யனா யிருந்து ஜகத்தைத் தபிப்பதும் பரமாத்மாவே, ஸத்யம் - எக்காலத்தும் எப்பிரமாணத்தாலும் பாதிக்கப்படாத கார்ய காரணவஸ்துக்கள் யாவும் பரமாத்மாவே. ஆப: - ஸர்வவ்யாபி பரமாத்மாவே, ஜ்யோதி:- ஸ்வப்ரகாச சைதந்ய ஜ்யோதி ஸ்வரூபமானது பரமாத்மாவே, ரஸ:- அதுவே ஆனந்த ஸ்வபாவம், அம்ருதம்- இறப்பில்லாதது அதுவே, ப்ரஹ்ம, அதுவே பரப்ரஹ்ம ஸ்வரூபம், பூ: - ஜகத்துக்களின் உத்பத்திக்குக் காரணம் அதுவே, புவ:- அவைகளின் ஸம்ஹாரத்திற்குக் காரணம் அதுவே, ப்ரணவங்களோடு கூடிய ஸப்தவ்யாஹ்ருதிகள் ப்ரணவத்தோடு கூடிய காயத்ரீ - ப்ரணவத்தோடுகூடிய சிரஸ்ஸு, இவைகளால் சொல்லப்படுகிற அகண்டரஸ ஸ்வபாவமான பரப்ரஹ்மத்தையே ப்ரத்யகாத்மாவாக அனுபதி செய்கிறே னென்பது கடைசி ப்ரணவத்தின் அர்த்தம்.

கிருஷ்ணபட்டர்— பூ: முதலிய லோகங்கள் ஏழும் பரமாத்மாவே, பரமாத்மா தவிர வேறொன்றும் உண்மையில் கிடையாது. கண்ணுக்குப் புலப்படுமவை முழுதும் மாயையே, ஸ்வப்னத்தில் காணுமவை யெல்லாம் தூக்க காலத்தில் உண்மைபோல் புலப்பட்டாலும் தூக்கம் விழித்த உடனே அவை யில்லையென்றும் உண்மை வெளிப் படையாய் விளங்குவதுபோல் அஜ்ஞான தசையில் பல பொருள்களின் தோற்றம் உண்டானாலும் ப்ரஹ்மம் ஒன்றே ஸத்யமான தென்றும் ஜ்ஞானம் பிறந்த உடனே அவையெல்லாம் மாயை யென்பது நன்கு விளங்கும். ஆப: - ஜலமும் ப்ரஹ்மமே. ஸூர்யன் முதலிய தேஜஸ்ஸுகளும் ப்ரஹ்மமே, ரஸமும் ப்ரஹ்மமே, தேவதைகளுக்கு ஆஹாரமான அம்ருதமும் ப்ரஹ்மமே, ப்ரஹ்ம சாமவேதம், அதுவும் ப்ரஹ்மமே.

ரங்கராமானுஜ ஸ்வாமிபாஷ்யம்— அம்ருதம் ப்ரஹ்ம- முக்தாத்மாக்கள். இங்கு சொல்லப்பட்டன எல்லாம் பரமாத்ம சரீரமே. காயத்ரியின் அர்த்தம் பின்னால் விவரிக்கப்படும்.

விநியோகம். இவைகள் எல்லாம் ப்ராணாயாமத்தில் விநியோகப்பட்டன. இப்படி ப்ராணாயாமம் செய்த பின்பு ப்ராத: ஸந்த்யாயாம் காயத்ரீ மந்த்ர ஜபம் கரிஷ்யே காலைச்சந்த்யையில் காயத்ரீ மந்த்ரத்தின் ஜபத்தைச் செய்கிறேன் என்று ஸங்கல்பித்துக் கொண்டு.

௨௰. ஆயாத்வித்யநுவாகஸ்ய, வாமதேவ ருஷி:, அநுஷ்டுப் சந்த:, காயத்ரீ தேவதா, காயத்ர்யாவாஹநே விநியோக: ॥

ஆயாது என்னும் அநுவாகத்திற்கு வாமதேவர் ருஷி, அநுஷ்டுப் சந்தஸ்ஸு, காயத்ரீ தேவதை. இது காயத்ரியை ஆவாஹநம் செய்ய விநியோகிக்கப்பட்டது. என்று முறையே ந்யாஸம் செய்து, பின்பு ஆயாது என்னும் அநுவாகத்தால் ஹ்ருதய கமலத்தில் காயத்ரியை ஆவாஹநம் செய்ய வேண்டும்.

௨௰. ஆயாது வரதா தேவீ, அக்ஷரம் ப்ரஹ்ம ஸம்மிதம், காயத்ரீம் சந்தஸாம் மாதேதம் ப்ரஹ்ம ஜுஷஸ்வ ந:, ஓஜோஸி ஸஹோஸி பலமஸி ப்ராஜோஸி தேவாநாம் தாம நாமாஸி விச்வமஸி விச்வாயு: ஸர்வமஸி ஸர்வாயுரபிபூரோம் காயத்ரீமாவாஹயாமி.

| | |
|---|---|
| வரதா | தன்னை அடைந்தவர்களுக்கு ஸர்வாபீஷ்டங்களையும் கொடுப்பவளும் |
| அக்ஷரம் | நித்யையும் |
| ப்ரஹ்மஸம்மிதம் | ப்ரணவத்துக்கு ஸமானமானவளும் |
| சந்தஸாம்மாதரம் | எல்லாச் சந்தஸ்ஸுக்களுக்கும் ப்ரதான பூதையும் ஆகிய |
| காயத்ரீம் | காயத்ரீ என்கிற |
| தேவீ | தேவதையானது |
| ஆயாது | இங்கேவரவேண்டும் |
| ந: | எங்களுடைய |
| இதம்ப்ரஹ்ம | ஸ்தோத்ர ரூபமான இந்த வேத வாக்யத்தை |

| | |
|---|---|
| ஜுஷஸ்வ | ஓ காயத்ரியே நீ அங்கீகரிக்கக்கடவை |
| ஓஜோ'ஸி | நீயே இந்திரியங்களின் சக்தியாயிருக்கிறாய் |
| ஸஹோ'ஸி | நீயே வேகமாயிருக்கிறாய் |
| பலமஸி | நீயே பலமாயிருக்கிறாய் |
| ப்ராஜோ'ஸி | நீயே ப்ரகாசமாயிருக்கிறாய் |
| தேவாநாம் | தேவதைகளுடைய |
| நாம | ப்ரஸித்தமான |
| தாமாஸி | தேஜஸ்ஸாயிருக்கிறாய் |
| விச்வமஸி | நீயே எல்லாமாயிருக்கிறாய் |
| விச்வாயு: | எல்லாவற்றின் ஆயுஸ்ஸையும் விருத்தி செய்பவளாயிருக்கிறாய் |
| ஸர்வமஸி | உன்னிடத்தில் ப்ரீதிசெய்யும் வஸ்துக்களை நிர்வஹிப்பவள் நீயே |
| ஸர்வாயு: | கால விசேஷங்களை வ்யவஸ்தை செய்பவள் நீயே |
| அபிபூ: | ஸகலபாபங்களையும் போக்குவள் நீயே; இப்படிப்பட்ட |
| காயத்ரீம் | காயத்ரீயை |
| ஓம் | ப்ரணவஸ்வரூபியாக |
| ஆவாஹயாமி | நான் ஆவாஹநம் செய்கிறேன். |

ரங்—காயத்ரியால் ப்ரதிபாதிக்கப்படுகிற பரப்ரஹ்மத்துக்கு ஸமானமானது அக்ஷரம்; வர்ண ரூபமான ப்ரஹ்மம். ஓஜ:- காந்தி, ஸஹ:- ஸாமர்த்யம், இவை முதலியவைகளுக்கு ஸாதனமாயிருக்கிறாய். நாமாஸி- பேராயிருக்கிறாய், விச்வாயு: - எல்லாவற்றிற்குமாயுஸ்ஸுக்கு ஸாதநமாயிருக்கிறாய். அபிபூ:- சத்துருக்களை திரஸ்காரம் செய்கிறவளாயிருக்கிறாய். ஓம் - ப்ரஹ்ம ஸ்வரூபிணியாயிருக்கிறாய்.

நாராயண ஸ்வாமி பாஷ்யம்— ப்ரஹ்ம- வேதம் - காயத்ரீ ஸகல வேதஸமானம். அல்லது. ப்ரஹ்ம - ப்ரணவம். ப்ரணவம் போலே எல்லா அர்த்தங்களையும் சுருங்கச் சொல்லுவது. அல்லது,

ப்ரஹ்ம- பரப்ரஹ்மம்; அது ஸகல ஜகத்காரணமாயிருப்பது போல் ஸகல வாங்மயங்களுக்கும் மூலமான வேதத்துக்கு மாத்ரு ஸ்தாநீயமானது. பலம்- பரிக்கும் சக்தி. விச்வம்- விஷ்ணு, விஷ்ணு போலே எல்லாவற்றையும் ஆக்ரமிக்கும் வல்லமை யுடையது. இங்கு சொல்வது காயத்ரியின் அதிஷ்டான தேவதையை. காயத்ரியால் ப்ரதி பாதிக்கப்படுவது பரமாத்மாவே.

வைத்யநாதர்— தேவீ - ப்ரகாசிக்கும் ஸ்வபாவம் உடையவள்; ஸம்மிதம்- தத்வஜ்ஞான ஸ்வரூபமானவள். இதம்-கீழ்ச்சொன்ன அகண்டா நந்தைகரஸமான பரப்ரஹ்மத்தை, ஜுஷஸ்வ-அடைவிக்கக் கடவாய். ஸஹ:- பராபவசக்தி- ப்ரளயாதி காலங்களில் எல்லாவற்றையும் பராபவம் செய்யும் சக்தி யுடையது. விச்வம். இப்போது கண்களுக்குப் புலப்படுவது. ஸர்வம் வேறுஸ்ருஷ்டியில் உள்ளவை- எல்லாம் காயத்ரியே.

க்ருஷ்ணபட்டர்— தேவீ- நித்யா நந்த ஸ்வரூபிணீ; ஸம்மிதம்- வேதாந்த ப்ரமாணத்தால் அறியப்பட்டது; ப்ரஹ்ம- பர மாத்மா நீயே. காயத்ரீ- காயத்ரீச் சந்தஸ்ஸின் அபிமானி தேவதை, இதம் ப்ரஹ்ம- நான் செய்யும் ஸ்தோத்ர ரூபமான இந்த தபஸ்ஸை. ஜுஷஸ்வ- அங்கீகரிக்க வேண்டும். விச்வம்- ஸ்தாவரங்கள். ஸர்வம்- ஜங்க மங்கள்.

இப்படி ஆவாஹநம் செய்த பின்பு ப்ராதஸ்ஸந்த்யாயாம் காயத்ரீம் ரவிமண்டலமத்யகாம் | ருக்வேதமுச்சரந்தீம் ரக்தவர்ணாம் குமாரிகாம் | அக்ஷமாலாகராம் ப்ரஹ்மதைவத்யாம் ஹம்ஸவாஹநாம் ||
ப்ராதஃகாலத்தில் காயத்ரி யென்று பெயர். அந்த தேவதை ஸூர்ய மண்டலத்தில் இருப்பது. அது உச்சரிப்பது ருக்வேதம் - வர்ணம் செகப்பு. வயஸ்ஸு பால்யம். கையில் அக்ஷமாலை, வாஹநம் ஹம்ஸம். தேவதை ப்ரஹ்மா, இம்முறையே காலையில் த்யானம் செய்து ஆஸநம் முதலிய பதினாறு உபசாரங்களையும் மனஸா ஸமர்ப்பித்து ப்ரணவஸ்ய ருஷி ப்ரஹ்மா — பரமாத்மா தேவதா.

அர்த்தம் முன்னே சொல்லப்பட்டது.

பூராதி வ்யாஹ்ருதித்ரயஸ்ய அத்ரி ப்ருகு குத்ஸா ருஷய:, காயத்ர்யுஷ்ணிகநுஷ்டுப் சந்தாம்ஸி, அக்நி வாயு ஸூர்யா தேவதா: ||

பூ: புவ: ஸுவ: என்னும் மூன்று வ்யாஹ்ருதிகளுக்கும் முறையே அத்ரியும் ப்ருகுவும் குத்ஸரும் ருஷிகள், காயத்ரியும் உஷ்ணிக்கும் அநுஷ்டுப்பும் சந்தஸ்ஸுகள், அக்நியும் வாயுவும் ஸூர்யனும் தேவதைகள்.

ஸாவித்ர்யா ருஷி: விஶ்வாமித்ர:, தேவீ காயத்ரீ சந்த:, ஸவிதா தேவதா ||

அர்த்தம் முன்னே சொல்லப்பட்டது.

ப்ராதஸ்ஸந்த்யா ஜபே விநியோக:.

இவைகள் காலைச் சந்தியையின் ஜபத்தில் விநியோகிக்கப்பட்டன.

இவைகளை முறைப்படி ந்யாஸம் செய்தபின்பு கரந்யாஸமும் ஷடங்கந்யாஸமும் செய்யவேண்டும்.

அஸ்திர மந்திரத்தால் கைகளின் உட்புறம் வெளிப்புறங்களைத் துடைத்து, காயத்ரியால் சிரஸ்ஸுமுதல் பாதம் வரையில் வியாபகந்யாஸம் செய்து, ப்ரணவத்தால் மணிக்கட்டு வரையில் கைகளை உட்புறம் வெளிப்புறங்களைத் துடைத்து, இருகைகளிலும் மற்றொரு கையால் ப்ரணவத்தை ந்யாஸம் செய்து.

ஓம் பூ: அங்குஷ்டாப்யாம் நம:
ஆள்காட்டி விரல்களால் பெரு விரல் களிலும்
ஓம் புவ: தர்ஜநீப்யாம் நம:
ஆள்காட்டி விரல் களிலும்
ஓம் ஸுவ: மத்யமாப்யாம் நம:
நடு விரல் களிலும்
ஓம் தத்ஸவிதுர்வரேண்யம் அநாமிகாப்யாம் நம:
பவித்திர விரல் களிலும்
ஓம் பர்கோ தேவஸ்ய தீமஹி கநிஷ்டிகாப்யாம் நம:
கடை விரல் களிலும் பெரும் விரல் களினுலும்
ஓம் தியோ யோ ந: ப்ரசோதயாத் கரதலகரப்ருஷ்டாப்யாம் நம:

கைகளின் உட்புறம் வெளிப்புறங்களில் மறுகையின் உள்ளங்கைகளிலும் ந்யாஸம் செய்வது கரந்யாஸமாம். இச்சொன்ன

ஓம் பூ: முதலிய ஆறு மந்திரங்களோடு முறையே ஜ்ஞாநாய ஹ்ருதயாய நம: முதலிய ஷடங்க மந்த்ரங்கள் ஆறையுஞ் சேர்த்து மார்பு முதலிய ஆறு அங்கங்களில் ந்யாஸம் செய்வது ஷடங்க ந்யாஸமாம்.

உஎ. யோ தேவ: ஸவிதாஸ்மாகம் தியோ தர்மாதிகோசரா: ।
ப்ரேரயேத்தஸ்ய யத்பர்க்கஸ் தத்வரேண்யமுபாஸ்மஹே ॥

| | |
|---|---|
| தேவ: | தேவதையாகிய |
| ய: | எந்த |
| ஸவிதா | ஸூர்யனானவன் |
| அஸ்மாகம் | நம்முடைய |
| திய: | புத்திகளை |
| தர்மாதிகோசரா: | தர்மம் முதலியவைகளின் விஷயமாக |
| ப்ரேரயேத் | ஏவுவனோ |
| தஸ்ய | அவனுக்கு |
| யத் | எந்த |
| பர்க்க: | தேஜஸ்ஸானதோ |
| வரேண்யம் | ச்ரேஷ்டமாகிய |
| தத் | அந்த தேஜஸ்ஸை |
| உபாஸ்மஹே | உபாஸிக்கிறோம் |

இது காயத்ரியின் அர்த்தத்தை ப்ரதிபாதிப்பது.
இது அகஸ்தியரால் செய்யப்பட்ட வசனம்.
இது காயத்ரீ ஸ்தானத்தில் அநுஸந்திக்கத் தக்கது,
இதை அநுஸந்தானம் செய்த பின்பு.

ஸவித்ருமண்டலமத்யஸ்தம் வாஸுதேவம் சதுர்புஜம் ।
விஷ்ணும் ஶங்கசக்ர பங்கஜாஸந ஸம்ஸ்திதம் ॥
கிரீட ஹார கேயூர கடகாதி விபூஷிதம் ।
ஶ்ரீவத்ஸவக்ஷஸம் ஶ்ரீதுலஸீ கௌஸ்துபேந விராஜிதம் ॥
ஹரிம் பீதாம்பரதரம் ஶங்கசக்ர கதாதரம் ।
ப்ரஸந்ந வதநம் ப்ரஸந்நேக்ஷணம் த்யாயேத் ॥

𑌸𑌰𑍍𑌵𑌰𑌤𑍍𑌨 𑌸𑌮𑌾𑌯𑍁𑌕𑍍𑌤 𑌸𑌰𑍍𑌵𑌾𑌭𑌰𑌣 𑌭𑍂𑌷𑌿𑌤𑌂 ॥

பரமாத்மாவான விஷ்ணு நான்குகைகளோடும்கிரீடம்ஹாரம் தோள்வளை, வளைகள் ரத்ன குண்டலங்கள் முதலான ஸர்வ ரத்ன மயமான ஸர்வபூஷணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு, ஸ்ரீவத்ஸம் வநமாலை திருத்துழாய் ஸ்ரீகௌஸ்துபம் இவைகள்ஜ்வலிக்க, மந்தஹாஸ முகமாக ஸூர்யமண்டலத்தில் ரத்ன மயமான தாமரை புஷ்பத்தை ஆஸந மாகக்கொண்டு எழுந்தருளி யிருப்பதாக தியானித்துக்கொண்டு காயத்ரீ ஜபம் செய்ய வேண்டும்.

## இது ஒரு முறை.

ஜபத்துக் காரம்பிக்கும் போதே ப்ராணாயாமம் செய்து ஜபத்தை ஸங்கல்பித்துக் கொண்டு ப்ரணவம் ஸப்த வ்யாஹ்ருதிகள் காயத்ரீ காயத்ரீ சிரஸ்ஸு இவைகளின் ருஷிச் சந்தோ தேவதா நியாஸம் செய்து"ச்சேவதச்யாம""முக்தாவித்ரும" "அர்க்க மண்டல" இத்தியானங்களைச்செய்து, ப்ராணாயாம மந்திரத்தால் பத்து உரு ஜபம் செய்து,மறுபடி ஒருப்ராணாயாமம்செய்து,"ஆயாத்வித்யநுவாகஸ்ய" என்பது முதல் முன்போல் செய்து ஜபம்செய்வது மற்றோர் முறை.

இவ்விரண்டும் வைஷ்ணவர்கள் கிரமம்.

ஜபம் ஆரம்பிக்கும் போதே.

𑌆𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌲𑍋𑌕𑌾 𑌦𑌾𑌶𑍇𑌷𑌾 𑌦𑌾𑌲𑍋𑌕𑌾𑌲𑍋𑌕 𑌪𑌰𑍍𑌵𑌤𑌾𑌤𑍍 । 𑌯𑍇𑌵𑌸𑌨𑍍𑌤𑌿𑌦𑍍𑌵𑌿𑌜𑌾 𑌦𑍇𑌵𑌾𑌸𑍍𑌤𑍇𑌭𑍍𑌯𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌨𑌮𑍋𑌨𑌮𑌃 ॥

ப்ரஹ்மலோகம் முதல் ஆதிசேஷன் வரையில் லோகா லோக பர்வதச் சுற்றளவில் உள்ள எல்லா தேவதைகளையும் எல்லா ப்ராஹ்மணர்களையும் நமஸ்கரிக்கிறேன்.

𑌮𑌾𑌤𑍃 𑌪𑌿𑌤𑍃 𑌚𑌰𑌣𑌾𑌰 𑌵𑌿𑌨𑍍𑌦𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌨𑌮𑌃, 𑌶𑍍𑌰𑍀 𑌗𑍁𑌰𑍁𑌭𑍍𑌯𑍋 𑌨𑌮𑌃 ॥

தாய் தகப்பனர் திருவடிகளுக்கு நமஸ்காரம் நமது ஆசார்யர்களுக்கு நமஸ்காரம் என்று நமஸ்காரம் செய்து

𑌅𑌪𑌸𑌰𑍍𑌪𑌨𑍍𑌤𑍁 𑌯𑍇𑌭𑍂𑌤𑌾 𑌯𑍇𑌭𑍂𑌤𑌾 𑌭𑍂𑌮𑌿𑌸𑌂𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌃 । 𑌯𑍇𑌭𑍂𑌤𑌾 𑌵𑌿𑌘𑍍𑌨𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌸𑍍𑌤𑍇 𑌨𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑍁 𑌶𑌿𑌵𑌾𑌜𑍍𑌞𑌯𑌾 ॥

பூமியிலும் இதர ஸ்தலங்களிலும் விக்னம் செய்யும் ஸ்வபா வத்தோடு வாஸம் செய்யும் எல்லா பூதங்களும் சிவனது ஆக்ஞையால் நசிக்கக்கடவன என்று ப்ரார்த்தித்து வலதுகைப் பெருவிரல் ஆள்காட்டு விரல்களால் ஜப பூமியில் சோடிகை செய்து, ப்ராணாயாமம் செய்து ஜபத்துக்கு ஸங்கல்பம் செய்துகொண்டு ப்ரணவம் ஸப்தவ்யாஹ்ருதிகள் காயத்ரீ காயத்ரீ சிரஸ்ஸு இவைகளின் ருஷ்யாதிந்யாஸம் செய்து, பத்துரு ப்ராணாயாமம் செய்து "ஆபாது" என்னும் மந்த்ரத்தால் ருஷிச் சந்தோ தேவதாந்யாஸத்தோடு காயத்ரியை ஆவாஹநம் செய்து, காயத்ரியின் ருஷிச்சந்தோ தேவதைகளை ந்யாஸம் செய்து, காயத்ரியின் ஒவ்வொரு பாதத்தையும் கீழ்சொன்னபடி இரண்டாகப் பிரித்து முறையே அங்குஷ்டாப்யாம் நம: முதலியவைகளைக் கூட்டி கர ந்யாஸமும், ஜ்ஞாநாய ஹ்ருதயாய நம: முதலியவைகளைக் கூட்டி ஷடங்க ந்யாஸமும் செய்து "முக்தாவித்ரும" என்று காயத்ரியைத் தியானம் செய்து கிரமப்படி காயத்ரீ ஜபம் செய்து, மறுபடி பிராணாயாமம் செய்து காயத்ரியின் ருஷி ச்சந்தோ தேவதாந்யாஸமும் கரந்யாஸம் ஷடங்க ந்யாஸம் இதுகளும் செய்ய வேண்டும். இது ஸ்மார்த்தர் கிரமம், காயத்ரியின் அக்ஷர ந்யாஸக்கிரமம் விஸ்தாரமாக வைத்யநாத தீக்ஷிதரால் ப்ரமாண பூர்வகமாகச் சொல்லப் பட்டிருக்கிறது.

ஜபம் செய்யும் முன்னே

ஓ ஹ்ரீம் ரக்ஷாம் ஸ்வாஹா

என்கிற காயத்ரீ ஹ்ருதயத்தைப் படிக்கவேண்டு மென்றும் கிருஷ்ண பட்டர் சொல்லுகிறார்.

ஜபத்திற்குப் பலவிதமாலைகள் சொல்லப்பட்டாலும் காயத்ரீ ஜபம் கை விரல் கணுக்களில் எண்ணிக்கொண்டே செய்ய வேண்டுமென்றும், காலைச்சந்தியை காயத்ரீ ஜபத்தில் முகத்தையும் கைகளையும் மூடிக்கொள்ள வேண்டுமென்றும், மற்ற எல்லா ஜபங்களிலும் கைகளை மாத்திரம் மூட வேண்டுமென்றும் காயத்ரியை பாதம் பாதமாகப் பிரித்து ப்ரணவத்தில் ஒன்று, வ்யாஹ்ருதி த்ரயத்தின் முடிவில் ஒன்று, ஒவ்வொரு பாதத்தின் முடிவில் ஒவ்வொன்றாக மூன்று, இப்படி ஐந்து இடங்களில் நிறுத்தி ஜபம் செய்ய வேண்டும் என்றும், சப்தம் உச்சரிப்பது அயலாருக்குக் கேளா

மலும் உதடு அசையாமலும் மனதிற்குள்ளேயே காயத்ரியை ஆவர்த்தனம் செய்வது மானஸ ஜப மென்றும்,அதுதான் முக்கிய மென்றும், பிரதிகாலத்திலும் (1008) உரு ஜபிப்பது முக்கியமென்றும், (108) உரு ஜபிப்பது மத்தியமம் என்றும், (10) உருஜபிப்பது அதமம் என்றும், ப்ரஹ்ம சாரியும் கிரஹஸ்தனும் (108) உரு ஜபிப்பது போது மென்றும், எண்ணிக்கை யில்லாமல் செய்யும் ஜபம் வீண் என்றும், வ்யாஹ்ருதிகளுடன் சேர்ந்தே காயத்ரீ ஜபம் செய்ய வேண்டு மென்றும், கிரஹஸ்தனும் ப்ரஹ்ம சாரியும் ஒரேப்ரணவத்தோடுஜபம்செய்யவேண்டுமென்றும் ஸந்யாஸி ஆத்தியந்த ப்ரணவ மாயாவது,ஆறு ப்ரணவத்தோடாவது ஜபம் செய்யவேண்டு மென்றும்,காலை ஜபததில் மூக்குக்குச் சரியாகவும், மத்தியாஹ்ந ஜபத்தில் மார்புக்குச் சரியாகவும், ஸாயங்கால ஜபத்தில் நாபிக்குச் சரியாகவும், காலையில் மேல் முகமாகவும், மத்தியாஹ்நத்தில் நடு நிலையாகவும், மாலையில் கீழ் முகமாகவும் கை கால் வைக்கப்பட்டு ஜபம் செய்யவேண்டு மென்றும்,கையில் பவித்திர மில்லாமலும் கைகளை மூடாமலும் தலையை மூடிக்கொண்டும் ஜபம் செய்யக் கூடாதென்றும், ஈரவஸ்த்ரத்தோடு காயத்ரீ ஜபம்செய்யக் கூடாதென்றும்,ஜலத்தில் காயத்ரீ ஜபம் செய்யக் கூடாதென்றும், இவை முதலிய பல ஜப நியமங்கள் தர்மசாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. எந்த ஜபத்துக்கும் மௌன வ்ரதம் முக்கியமானது. ஜப மத்தியில் குருவாவது பூஜிக்கத்தக்க ஸ்ரீ வைஷ்ணவர்களாவது ச்ரோத்திரியர்களாவது வந்தால் அவர்களை ப்ரணமம் குசலப்ரச்னம் முதலிய வைகளால் உபசரித்துப் பின்பே முறை ஜபம் செய்ய வேண்டும்.

இனி காயத்ரியின் அர்த்தம் சொல்லப்படுகிறது.

காயந்தம் த்ராயதே - இதி காயத்ரீ.

தன்னை ஜபிப்பவனை ரக்ஷிப்பதனால் இதற்கு காயத்ரீ என்று பெயர்.இதுமூன்று பாதம்,பாதமொன்றுக்கு எட்டக்ஷரம். ஜபகாலத்தில் வரேணியமென்றும் மற்ற காலங்களில் வரெண்யம் என்றும் அனுஸந்திக்கக்கடவது.

நாராயண ஸ்வாமி பாஷ்யம்—

தேவஸ்ய - சேதநா சேதந ஸ்வரூபமான ஜகத்க்ரீடையி

னால் ஸந்தோஷித்துக் கொண்டிருக்கிற,ஸவிது:- ஸகலஜகத்ஸ்ர ஷ்டாவான, பரமாத்மாத்ம ரூபி நாராயணனுடைய, வரேண்யம்- மஹாத்மாக்கள் எல்லாராலும் ப்ரார்த்திக்கக்கூடிய, தத்- அப்படி ப்ரஸித்தமான, பர்க:- தேஜஸ்ஸை, தீமஹி- த்யாநிக்கக்கடவோம். அஜ்ஞாநாந்தகார மனைவற்றையும் போக்குவதால் தேஜஸ் ஸப்தத்தால் சொல்லத்தக்கவரும், எல்லாக்கர்மங்களினுடையவும் பலபாகத்துக்குக் காண மாகையால், அல்லது ஸர்வத்தையும் பரிப்பதால் பர்க்கஸ் என்று சொல்லத்தக்கவரும் ஆகிய ஸூர்ய மண்டலாந்தர் வர்த்தியான தேஜோரூபியான புருஷோத்தமனை த்தியானம் செய்கிறேனென்று தாத்பர்யம். தலை என்னும் பாகமே ராஹுவா யிருக்க ராஹுவின் தலை யென்பது போல் தேவனே பர்க்க: ஆயிருக்க தேவஸ்ய பர்க:- என்பது ஔபசாரிக ப்ரயோகம். ய:- எந்த தேஜஸ்ஸானது, ந:- நமக்கு, தியோ:- கைப்பிடிக்க வேண்டியவை விட வேண்டியவை இவைகள் விஷயமாய் உபாயாநுஷ்டாநத்துக்கு வேண்டிய ஜ்ஞாநங்களை, ப்ரசோதயாத் உண்டு பண்ணுமோ? "காரணந்து த்யேய:" - என்று ஜகத்காரண பூதனை வனேஉபாஸிக்கப் படவேண்டுமென்று சொல்லுகையால் தைலதாரை போல் இடைவிடாத த்யாந மென்னும் பக்தி யோகத்தைத் தன் அநுஷ்டான முகமாக இந்த காயத்ரியால் காட்டினதாகிறது.

ரங்க ராமாநுஜ ஸ்வாமி பாஷ்யம்.

| | |
|---|---|
| ய: | எந்த தேஜஸ்ஸு |
| ந: | நமது |
| தியோ: | தூங்குகிற ஜ்ஞாநேந்திரியங்களை |
| ப்ரசோதயாத் | எழுப்பி நடத்துகிறதோ |
| தத் | அந்த |
| வரேண்யம் | உபாஸிக்கத்தக்க |
| ஸவிது: | ஜகத்காரண பூதனை |
| தேவஸ்ய | ஸ்வாமியினுடைய (தை |
| பர்க: | தேஜஸ்ஸை, பரமாத்ம ஸ்வரூபத் |
| தீமஹி | த்யாநிக்கக்கடவோம். |

வைத்யநாத தீக்ஷிதர்—

| | |
|---|---|
| 𑌯𑌃 | எவர் |
| 𑌨𑌃 | நமது |
| 𑌧𑌿𑌯𑌃 | புத்தி விருத்திகளை |
| 𑌪𑍍𑌰𑌚𑍋𑌦𑌯𑌾𑌤𑍍 | ப்ரேரிக்கிறரோ? அப்படி புத்தியாதிகளைப் ப்ரேரிக்குமவரான |
| 𑌸𑌵𑌿𑌤𑍁𑌃 | ஸர்வ ஜகத்காரண பூதராகிய |
| 𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 | ஸ்வயம்ப்ரகாசசிதாநந்தைக ரஸ ஸ்வபாவமான ப்ரஹ்மத்தினுடைய |
| 𑌵𑌰𑍇𑌣𑍍𑌯𑌂 | பரமாநந்தைக ரஸமான |
| 𑌭𑌰𑍍𑌗𑌃 | தேஜஸ்ஸை, ஸ்காரண ஸம்ஸ்கார பாதகமான நிர்குண ப்ரஹ்மத்தை |
| 𑌧𑍀𑌮𑌹𑌿 | உபாஸிக்கிறேரும். |

வரதராஜீயம்— யஃ- எந்த ஸவிதா, நஃ - நம்முடைய, தியஃ - ஜ்ஞாநங்களை, ப்ரசோதயாத் - ப்ரவர்த்திப்பிக்கிறரோ ? ஸவிதுஃ - ஜகதுத்பாதகனும், தேவஸ்ய - ப்ரகாசிப்பவனுமாகிய அவனுக்கு, வரேணியம் - எல்லாரும் கொண்டாடத் தக்க, யத் - யாதொரு, பர்கஃ - பர்க்கஸ் உண்டோ ? தத் - அதை, தீமஹி - த்யாநிக்கக்கடவோம். பர்கஃ - ப்ரகாசத்தைக்கொடுப்பதினால் ஜகத்தினது உள்ளும் புறமு முள்ள தமஸ்ஸைப் போக்குவது. கால ஸ்வரூபியாகையாலே அவ்வவ கர்மங்களின் பலத்துக்குச் சாதகமாக அடையப்படுவது. மழை பெய்வித்து பூதங்களைப் பரிப்பது. ஆக இத்தால் சொல்லப்பட்டதென்னவென்னில்; ஸூர்ய மண்டலத்தினுள் எழுந்தருளி யிருக்கும் பரமாத்மாவான பரப்ரஹ்மத்தை உபாஸிக்கிறேன் என்பதாம்.

கிருஷ்ண பட்டீயம்— தீவ்யத இதி தேவஃ - திவ் என்பது ஒரு தாது, அது க்ரீடை முதலிய பல அர்த்தங்களைச் சொல்லும். தன் உதயத்தாலும் அஸ்தமனத்தாலும் லோகயாத்ரையை நடத்திக் கொண்டு ஸஞ்சரிப்பவன், ப்ரகாசிக்குமவன், த்யாநம் செய்பவர்களது இதய கமலத்தில் க்ரீடிப்பவன், த்யுலோகத்தி

விருப்பவன், என்பவை தேவ: என்பதன் அர்த்தம், ஸவிதா-ஸ்கல ஜநங்களின் ஸந்தோஷத்துக்கும் காரண மாகிய மழையை உண்டு பண்ணுமவன், ஸகல ஜனங்களுக்கும் ச்ரேயஸ்ஸைக் கொடுப்பவன்; வரேணியம்-மோக்ஷ காமிகள் வரிக்கத்தக்கது, ச்ரேஷ்டமானது; பர்க்க: - தமஸ்ஸைப் போக்குவது, தேஜஸ்ஸென்பது. பொருள்-சிவ வாசகமான பர்க்க சப்தம் அகாராந்த புல்லிங்கம்; இந்த பர்க்கச்சப்தம் ஸகாராந்தநபும்ஸக லிங்கம். தியஃ-நமது புத்திகளை துஷ்கர்ம விமுகங்களாகவும் ஸகல ஸத்கர்மாநுஷ்டானபரங்களாகவும் எவர் ப்ரேரிக்கிறரோ, தேவனென அந்த ஸவிதாவினுடைய ச்ரேஷ்டமான தேஜஸ்ஸை நாங்கள் த்யாநம் செய்கிறோம்.

வித்யாரண்ய ஸ்வாமி — ய: - எந்த ப்ரஹ்மமானது, ஜீவாத்மாவாக அநு ப்ரவேசித்து, ந: - வாஸநா பலத்தாலே த்ருடமாக பேத புத்தியைக்கொண்ட நம்முடைய,ய: - அந்த: கரண விருத்திகளை, ப்ரசோ தயாத் - ப்ரேரணம் செய்யுமோ? தத் - வாங்மனஸ்ஸுக்களுக்கு விஷயமல்லாத, ஸூர்ய மண்டல மத்தியத்தில் த்யானிக்கத்தக்க, ஸவிது: - ஸகல ஜகதுத்பத்தி ஸ்திதிலய ஹேது பூதனை, தேவஸ்ய : ஸ்வயம் ப்ரகாசமான பர ப்ரஹ்மத்தினுடைய, வரேண்யம் - எல்லாராலும் ஆச்ரயிக்கத்தக்க, பர்க்க: - ஸ்வஸாக்ஷாத்காரத்தாலே அவித்யையைப் போக்குமதான ஸ்வரூபத்தை.தீமஹி - ஸோஹம், என்று அபேதாத்யவஸாயம் செய்து த்யாநிக்கக் கடவோம்.

நிர்ணய கல்பவல்லி— தேவஸ்ய - அகண்டாநந்த ஸ்வரூபியான, ஸவிது: - நாநாவிதமான உபாஸநங்களுக்கும் பலத்தைக்கொடுப்பவரான, தத், ப்ரஹ்மத்தி னுடைய, பரப்ரஹ்மமே ஆனந்தரூபமா யிருக்க 'ஸ்வஷோவஸ்ஹுடீஸ பூ' என்று சொல்வதுபோல அவித்யா தோஷ சமக தேஜோ ரூபமான ப்ரஹ்மத்தையே இங்கு ப்ரஹ்மத்தின் தேஜஸ்ஸென்று சொல்லுகிறது. இது ஔபசாரிக ப்ரயோகம். ஆக இத்தால் சொல்லப்படுகிறதாவது, தனக்கு இரண்டாவது இல்லாமல் பரமாநந்த ஸ்ரூபமாய் பரிபூர்ண ஜ்யோதி ஸ்வரூபமாய் பிம்பம் போலே ப்ரஹ்மம் இருக்கிறது, ஜகத்தெல்லாம் அதன் ப்ரதி பிம்பமே, அப்படிப் பட்ட பரப்ரஹ்மத்தை த்யாநிக்கிறேன் என்பதாம். அந்த:கரண தர்மாதிகளுக்கு ஸாக்ஷியா யிருக்கிறது பரப்ரஹ்மம்.

ஸாரதீபம்—ப꞉ - எந்தபரமாத்மாவானவர், ந꞉ - அவருக்கு ஸர்வாத்மநாபராதீனர்களாயும் சேஷபூதர்களுமான நமது, யீய꞉- புத்திகளை,எல்லா வ்யாபாரங்களிலும்,ப்ரசோதயாத் -ப்ரேரிக்கிறாரோ,"யோந்த꞉ ப்ரவிச்யமமவாசமிமாம் ப்ரஸுப்தாம்ஸஞ்ஜீவயத்யகிலசக் திதரஸ் ஸ்வதாம்நா" என்றதிறே. ஸவிது꞉- ஸகலஜகதுபாதானகாரணமான, தேவஸ்ய-ஜகத்வ்யாபாரலீலனுன ஸ்ரீய꞉ பதியினுடைய, ஸூர்யனுக்கு அந்தராத்மாவும் ஸூர்யமண்டலத்திலிருப்பவருமான நாராயணனுடைய, வரேண்யம் - மோக்ஷார்த்திகளால் ப்ரார்த்திக்கப்படுகிற, தத்- வேதாந்த ப்ரதிபாத்யமான, பர்க்கம் - ஸம்ஸாரதாப நிர்வாபகமாய் தேஜோரூபமான திவ்ய மங்கள விக்ரஹத்தை, தீமஹி - தியானிக்கிறோம். 'த்யேயஸ்ஸதா ஸவித்ரு மண்டலமத்யவர்த்தீ நாராயண꞉' என்றார்களிறே.

நீலகண்டர்—காயத்ரியால் ஸதாசிவன் ப்ரதிபாதிக்கப்படுகிறான். என்றார்.

இவ்விதமான அர்த்தங்களில் தம்தம் குரு உபதேசித்த அர்த்தத்தை அனுஸந்தானம் செய்துகொண்டு ஜபஞ்செய்யவேண்டியது. காயத்ரியோடு அஷ்டாக்ஷரத்தைத் தக்கபடி ஜபம்செய்யவேண்டுமென்று மன்ஸாலகட்டை வேதாந்தாசார்யர் ப்ரமாணபூர்வகமாக வெளியிட்டிருக்கிறார். காயத்ரீ ஜபஞ்செய்தபின் அஷ்டாக்ஷர ஜபஞ்செய்து பின்பு உபஸ்தானம் செய்யவேண்டுமென்பது அஹோபிலமடத்தார் ஸம்ப்ரதாயம். ப்ராத꞉ காலத்தில் ஸூர்யோதயமாகும் வரையிலும், ஸாயங்காலத்தில் நக்ஷத்ரோதயமாகும் வரையிலும் காயத்ரீ ஜபம்செய்யவேண்டு மாகையாலும் அப்புறமே உபஸ்தானம் செய்யவேண்டுமாகையாலும் உதயமாகும் முன்னே காயத்ரீஜபம் முடிந்துவிட்டால் அப்போது அஷ்டாக்ஷரஜபம்செய்யவேண்டுமென்பதும் உதயமாய் விட்டால் உபஸ்தானம் செய்துவிட்டுப் பின்பே அஷ்டாக்ஷரஜபம் செய்யவேண்டு மென்பதும் முனித்ரயஸம்ப்ரதாயம்,

காயத்ரீஜபம் முடிந்தபின்பு மூன்று ப்ராணாயாமம் செய்து.

ப்ராதஸ்ஸந்த்யோபஸ்தானம் கரிஷ்யே பிராதஸ் ஸந்தியையின் உபஸ்தானம்செய்கிறேன் என்று ஸங்கல்பித்துக்கொண்டு.

𑌉𑌤𑍍𑌤𑌮 𑌇𑌤𑍍𑌯𑌨𑍁𑌵𑌾𑌕𑌸𑍍𑌯 𑌵𑌾𑌮𑌦𑍇𑌵 𑌋𑌷𑌿𑌃,
𑌅𑌨𑍁𑌷𑍍𑌟𑍁𑌪𑍍𑌛𑌨𑍍𑌦𑌃, 𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍀 𑌦𑍇𑌵𑌤𑌾.
𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍍𑌯𑍁𑌦𑍍𑌵𑌾𑌸𑌨𑍇 𑌵𑌿𑌨𑌿𑌯𑍋𑌗𑌃.

(உத்தமேசிகரேதேவீ என்னும் அனுவாகத்திற்குவாமதேவர்ருஷி, அனுஷ்டுப்சந்தஸ்ஸு, காயத்ரீதேவதை. காயத்ரியை உத்வாஸநம் செய்வதில் விநியோகிக்கப்பட்டது.)

என்று ருஷ்யாதி ந்யாஸம் செய்து உத்வாஸநம் செய்ய வேண்டும்.

௩௰. 𑌉𑌤𑍍𑌤𑌮𑍇 𑌶𑌿𑌖𑌰𑍇 𑌦𑍇𑌵𑌿 𑌭𑍂𑌮𑍍𑌯𑌾𑌂 𑌪𑌰𑍍𑌵𑌤𑌮𑍂𑌰𑍍𑌧𑌨𑌿 ।
𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍇𑌭𑍍𑌯𑍋 𑌹𑍍𑌯𑌨𑍁𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌗𑌚𑍍𑌛 𑌦𑍇𑌵𑌿 𑌯𑌥𑌾𑌸𑍁𑌖𑌮𑍍 ॥

விசிஷ்டாத்வைதம்—

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌦𑍇𑌵𑌿 | ஓ தேவியே |
| 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍈𑌃 | ப்ராஹ்மணர்களே |
| 𑌅𑌨𑍁𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 | அநுக்ரஹித்து |
| 𑌭𑍂𑌮𑍍𑌯𑌾𑌂 | பூமியிலோ |
| 𑌪𑌰𑍍𑌵𑌤𑌮𑍂𑌰𑍍𑌧𑌨𑌿 | பர்வதசிகரத்திலோ |
| 𑌉𑌤𑍍𑌤𑌮𑍇 𑌶𑌿𑌖𑌰𑍇 | ச்ரேஷ்டமானசிகரத்திலோ, முன் எங்கேயிருந்தாயோ, அவ்விடத்திற்கு |
| 𑌯𑌥𑌾𑌸𑍁𑌖𑌂 | வந்தபடியே ஸௌக்கியமாக |
| 𑌗𑌚𑍍𑌛 | போகக்கடவை |

வைத்யநாத தீக்ஷிதர்—

| | |
|---|---|
| 𑌦𑍇𑌵𑌿 | ஓ தேவியே |
| 𑌭𑍂𑌮𑍍𑌯𑌾𑌂 | பூமிக்குவந்த நீ |
| 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍇𑌭𑍍𑌯𑌃 | ப்ராஹ்மணர்களாகிய எங்களுக்கு |
| 𑌅𑌨𑍁𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 | அநுஜ்ஞைசெய்து தேஹயாத்ரைக்கு வேண்டியவைகளைச்செய்துகொள்ளும்படி அநுமதிசெய்து |
| 𑌉𑌤𑍍𑌤𑌮𑍇 | உத்க்ருஷ்டமும் |

𑌨 𑌜𑍀𑌯𑌤𑍇 𑌤𑍍𑌵𑍋𑌤𑍋 𑌨𑍈𑌨𑌮𑌂𑌹𑍋 𑌅𑌶𑍍𑌨𑍋𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌿𑌤𑍋 𑌨 𑌦𑍂𑌰𑌾𑌤𑍍 ॥ ௫ ॥

| | |
|---|---|
| 𑌚𑌰𑍍𑌷𑌣𑍀𑌧𑍃𑌤𑌃 | ப்ரஜைகளைப் போஷிக்கும் |
| 𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 | தேவதையாகிய |
| 𑌮𑌿𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 | ஸூர்யனுடைய |
| 𑌸𑌤𑍍𑌯𑌂 | உண்மையானதும் |
| 𑌸𑌾𑌨𑌸𑌿𑌂 | நன்றாக அடையக்கூடியதும் |
| 𑌚𑌿𑌤𑍍𑌰𑌶𑍍𑌰𑌵𑌸𑍍𑌤𑌮𑌂 | மிகவும் ஆச்சர்யமாகக் கேட்கப் படுவதுமான |
| 𑌶𑍍𑌰𑌵𑌃 | கீர்த்தியை |
| 𑌸𑍍𑌤𑍌𑌮𑌿 | ஸ்துதிசெய்கிறேன் |
| 𑌮𑌿𑌤𑍍𑌰𑌃 | இந்த மித்ரனைவன் |
| 𑌪𑍍𑌰𑌜𑌾𑌨𑌨𑍍 | அவர்அவர் கர்மாதிகளைத் தெரிந்துகொண்டு |
| 𑌜𑌨𑌾𑌨𑍍 | ஜநங்களை |
| 𑌯𑌾𑌤𑌯𑌤𑌿 | அவர்அவர்கர்மாநுகுணமாக நடப்பிக்கிறான். மேலும் |
| 𑌮𑌿𑌤𑍍𑌰𑌃 | இந்தமித்திரன் |
| 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌂 | பூமியையும் |
| 𑌉𑌤 | மேலும் |
| 𑌦𑍍𑌯𑌾𑌂 | ஸ்வர்க்கத்தையும் |
| 𑌦𑌾𑌧𑌾𑌰 | தரித்தான் |
| 𑌮𑌿𑌤𑍍𑌰𑌃 | இந்தஸூர்யன் |
| 𑌕𑍃𑌷𑍍𑌟𑍀𑌃 | ஜநங்களை |
| 𑌅𑌨𑌿𑌮𑌿𑌷𑌾 | கண்மூடாமல் |
| 𑌅𑌭𑌿𑌚𑌷𑍍𑌟𑍇 | பார்க்கிறான். அவனுக்குநாம் |
| 𑌘𑍃𑌤𑌵𑌤𑍍 | நெய்யுடன் கூடிய |
| 𑌹𑌵𑍍𑌯𑌂 | சருவை |
| 𑌸𑌤𑍍𑌯𑌾𑌯 | பூர்ணமானபலத்துக்காக |
| 𑌵𑌿𑌧𑍇𑌮 | பண்ணுகிறோம் |
| 𑌮𑌿𑌤𑍍𑌰 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯 | ஓமித்ரனே, காரணவஸ்துவே |

| | |
|---|---|
| ய: | எவன் |
| வ்ரதேந | நியமத்தோடு |
| தே | உனக்கு |
| ஶிக்ஷதி | உபசரிக்கிறானோ |
| மர்த்ய: | மநுஷ்யனை |
| ஸ: | அவன் |
| ப்ர | அதிகமாய் |
| ப்ரயஸ்வாந் | கர்மபலத்தோடு கூடினவனாக |
| அஸ்து | ஆகட்டும் |
| த்வோத: | உன்னால் ரக்ஷிக்கப்பட்ட அவன் |
| ந ஹந்யதே | ரோகம்முதலியவைகளால் பீடிக்கப்படமாட்டான் |
| ந ஜீயதே | சத்துருக்களால் ஜயிக்கப்படமாட்டான். மேலும்இப்படி உன்னால் ரக்ஷிக்கப்பட்டவனை |
| அம்ஹ: | பாபமானது |
| அந்தித: | ஸமீபத்திலும் |
| நாஶ்நோதி | அணுகமாட்டாது |
| தூராத் | தூரத்திலும் |
| நாஶ்நோதி | அணுகமாட்டாது |

பட்டபாஸ்கரபாஷ்யம்—

ச்ரவ: - அன்னம் கீர்த்தியுமாம். ஸாநஸிம் - எல்லோருக்கும் கொடுக்கத்தக்கது. மித்ரனென்னும் தேவதையாகிய உன்னுடைய கீர்த்தி மிகவும் ஆச்சர்யமானதும், கேட்க விரும்பத்தக்கதுமாகையால் உன்னைக்குறித்து யாகம் செய்கிறோம். தாதார்-தரிக்கச்சமர்த்தன். அபிசஷ்டே-நன்றாய்ப்பார்க்கிறான். உபகாரம் செய்கிறானென்று தாத்பர்யம். க்ருஷ்டீ: - மநுஷ்யர்களையும், அநிமிஷா-தேவர்களையும், அபிசஷ்டேஎன்றும் சொல்லலாம், ஸத்யாய-பூர்ணபலம்கொடுக்கும்தேவதையான மித்ரனுக்கு.—ஆதித்ய-ஓஅதிதிபுத்ரனே! ய: - எந்தமனிதன், வ்ரதேந - உனக்கிஷ்டமான கர்மத்தால், சிக்ஷதி - சக்தனாகவேண்டுமென்றிச்சிக்கிறானோ; அதாவது

விக்னமில்லாமல் அனுஷ்டிக்கிறோம்; அல்லது வ்ரதேந - வ்ரதங்களை, சிக்ஷதி - அடிக்கடி அப்யஸிக்கிறோம்; ஸঃ - அந்த மர்த்தঃ - மனிதன், ப்ரயஸ்வாந் - அன்னமுடையவனாக, ப்ரஅஸ்து - மிகவும் ஆகட்டும் நஹந்யதே - சத்ருக்களாலும் வ்யாதிகளாலும் பீடிக்கப்படுவதில்லை. நஜீயதே - தாரித்ர்யம் முதலியவைகளால் அவமானப்படுத்தப்படுவதில்லை. அந்திதঃ - கிட்ட இருந்தாலும், தூர இருந்தாலும், பாபம் இவனைக்கிட்டி அணுகாது. ஆகையால் நாங்கள் உன்னையே உபாஸிக்கக்கடவோம்.

வித்யாரண்யபாஷ்யம்—

தேவஸ்ய, ச்ரவঃ - கேட்கத்தக்க கீர்த்தியானது, அதிகமாக இருக்கிறது. ஸாநஸிம் - பலத்தைக் கொடுப்பவரும், ஸத்யம். உண்மையே சொல்லுமவரும், சித்ரச்ரவஸ்தமம் - மிகவும் ஆச்சர்யமான கீர்த்தியையுடையவருமாகிய மித்ரனையஜிக்கிறோம். யாதயதி - தங்கள் தங்கள் கார்யங்களில் யத்னமுடையவர்களாகச் செய்கிறான்.

நாராயண ஸ்வாமி பாஷ்யம்—

சர்ஷணீ - ஜ்ஞாநம். ஜ்ஞானமுடையவர்களைச் சொல்லுகிறது. சர்ஷணீத்ருதঃ—ப்ராணிகளைத் தரிப்பவர். மித்ரஸ்ய - ஸர்வரக்ஷகர், வேதாந்தங்களில் சொல்லப்பட்ட அபரிச்சின்னமான மாஹாத்ம்யமுடையவர். தேவஸ்ய - க்ரீடாசாலி. இப்படிப்பட்ட பகவானுடைய ஆச்சர்யமானயசஸ்ஸானது, ஸா-மிகவும், நஸிம்-பஜிக்கத்தக்கது. ஸத்யம்-எக்காலத்தும் அழிவில்லாதது. ஆச்சர்யமான பகவத்சேஷ்டைகளைப்பற்றியதாகையால் ஆச்சர்யமாய்கேட்கத்தக்கபகவானதுகீர்த்தியைநாம் ஸ்துதிசெய்கிறோம். கர்மாநுகுணமாக ஜகத்வ்யாபாரத்தை நடத்துவதால் ஈச்வரனுக்கு வைஷம்யம் நைர்க்கருண்யம் இவைவருமவையல்ல. தாதார ரக்ஷித்தார். அபிசஷ்டே - ப்ரகாசிக்கச்செய்கிறார். எல்லோரும் பஜனம் செய்யும்படி அளவிறந்த ஆச்சர்யகரமும் கேட்கத்தக்கதுமான கீர்த்தியையுடைத்தாயிருக்கையும், பூமிமுதலிய எல்லாதத்வங்களையும் தரித்தலும், உத்பத்தியும் நாசமுமில்லாத ஜ்ஞானத்தால் எல்லா ஜந்துக்களையும் ப்ரகாசிக்கச்செய்கையும், இங்கு மித்ரசப்தத்தால்சொல்லப்பட்ட பரமாத்மாவின் சின்னங்களாம். ஸத்யாய - அவிகாரனை

பரமாத்மாவுக்கு, முதலில் ஸ்துதிசெய்கிறேன் என்று வாக்கின் வ்யாபாரம் சொல்லப்பட்டது. மேல் பகவானதுகுணங்களை அநுஸந்தித்ததினாலே மனதின் வ்யாபாரம் சொல்லப்பட்டது. இங்கு காயத்தின் வ்யாபாரம் சொல்லப்பட்டது. ஹேமித்ர! ஆதித்ய! ப்ரளயகாலத்தில் எல்லாவற்றையும் பக்ஷிப்பவனான காரணவஸ்துவே! எந்த மனிதன் நியமத்தோடு உன்னை அன்னம் முதலியவைகளால் உபசரிக்கிறானோ? அவன் அன்னம் முதலிய ஸம்பத்துகளால் மிகவும் பூர்ணனாக ஆகக்கடவன். பகவானுக்கு ஆராதனம் செய்யாமல் புஜிப்பதில்லையென்னும் நியமத்தோடு பகவதாராதனம் செய்பவனுக்கு பரமாத்மாஸ்வாநுபவமாகிய அன்னத்தைக்கொடுப்பன் என்பது தாத்பர்யம், இவ்வாறு செய்யப்பட்ட நல்ல ஆராதனத்தால் ப்ரீதனான உன்னால் ரக்ஷிக்கப்பட்டவன் பரப்ரஹ்மத்தை ப்ராபிக்கும் வரையில் ஆத்யாத்மிகம் முதலிய துக்கம் இல்லாமல் பகவான் ரக்ஷிக்கிறார். இந்த ஜன்மத்திலும் மறுஜன்மங்களிலும் பாபம் இவனை அணுகாது.

வைத்யநாத தீக்ஷிதர்—

ச்ரவ: - தேஜஸ்ஸு. ஆச்சர்யமான தேஜஸ்ஸையுடையவர்கள் சித்ரச்ரவஸ்ஸுக்கள். அவர்களுக்குள் உத்தமன். நஹந்யதே - ம்ருத்யுவால் அடிக்கப்படுவதில்லை. நஜீயதே - நூறுவயதிற்குக் குறைவதில்லை. அந்திக: - சமீபத்திலும், இந்த ஜன்மத்திலும் என்கை. தூராத் - தூரத்திலும், முன் ஜன்மங்களிலும் என்கை. செய்யப்பட்ட பாபம் இவனைப்பிடிக்காது.

கிருஷ்ணபட்டர்—

பெரியோர்களின் அநுக்கிரஹம் பெற்றவனுக்கு வ்யாதி முதலிய பீடைகள் உண்டாகாதென்பது கருத்து.

ஸ்ரீராமசந்த்ரோதயம். ஸ்ரீராமாயணத்தில் 'மித்ரமௌபயிகம்' என்று மித்ரசப்தம் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது. 'மாதா பிதாப்ராதாநிவாஸச் சரணம் ஸுஹ்ருத்கதிர்நாராயண:' என்று நாராயணன் ஸுஹ்ருத் என்று சொல்லப்பட்டது. அதனால் இங்கு மித்ரனென்று சொன்னது ரிபூணமபி வத்ஸலனான ஸ்ரீராமனையே,

அவரதுகீர்த்தியே ஆச்சர்யமானது;அடிக்கடி கேட்கத்தக்கது. அவரது கீர்த்தியைப்பாடும் ஸ்ரீராமாயணமே; ஸ்ரீராமன் மனுஷ்யபாவனையிலிருந்தே தன் ஜநங்களை ரக்ஷித்தார். ஸாம்ஸாரிக பீடையென்றும் இராமல் நீக்கும்பொருட்டுத் தன் நாட்டிலுள்ள சராசரங்களுக்கெல்லாம் தன்லோகத்தைக்கொடுத்தார். அவரே உபாஸ்யர். அவரே இம்மந்த்ரத்தால் உபாஸிக்கப்படத்தக்கவர்.

விநியோகம் இம்மந்த்ரம் ப்ராதஸ்ஸந்த்யையின் உபஸ்தானத்தில் விநியோகிக்கப்பட்டது.

இதனால் உபஸ்தானம் செய்து திக்நமஸ்காரம் செய்யவேண்டும்.

ஸந்த்யாயை நம:, காயத்ர்யை நம:, ஸாவித்ர்யை நம:, ஸரஸ்வத்யை நம:.

ஸந்த்யை, காயத்ரீ, ஸாவித்ரீ, ஸரஸ்வதீ, இவர்களுக்குநமஸ்காரம்.

ஸர்வாப்யோ தேவதாப்யோ நமோ நம:

எல்லாதேவதைகளுக்கும் நமஸ்காரம் நமஸ்காரம்.

காமோகார்ஷீந் மந்யுரகார்ஷீந் நமோ நம:

காமன்செய்தான், மந்யுசெய்தான், நமஸ்காரம்நமஸ்காரம்.

இப்படி கிழக்கு தெற்குமேற்கு வடக்குக்களில் அஞ்சலிசெய்து த்ரயமூர்த்தியான பகவானை நமஸ்கரித்து அபிவாதனம் செய்யவேண்டும். ப்ரவரம், கோத்ரம், ஸூத்ரம், சாகை, சர்ம, இதுகளைச் சொல்லுவது.

ப்ராச்யை திஶே நம: - தக்ஷிணாயை திஶே நம:
ப்ரதீச்யை திஶே நம: - உதீச்யை திஶே நம:

கிழக்கு திக்குக்கு நமஸ்காரம். தெற்குதிக்குக்கு நமஸ்காரம், மேற்குதிக்குக்கு நமஸ்காரம், வடக்குதிக்குக்கு நமஸ்காரம்.

ஊர்த்வாய நம: - அதராய நம:

மேல்திக்குக்கு நமஸ்காரம் கீழ்திக்குக்குநமஸ்காரம்

𑌅𑌨𑍍𑌤𑌰𑌿𑌕𑍍𑌷𑌾𑌯 𑌨𑌮𑌃 - 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑍈 𑌨𑌮𑌃

ஆகாசத்துக்கு நமஸ்காரம், பூமிக்கு நமஸ்காரம்.

𑌵𑌿𑌷𑍍𑌣𑌵𑍇 𑌨𑌮𑌃

விஷ்ணுவுக்கு நமஸ்காரம்.

இப்படி கிழக்கு தெற்கு மேற்கு வடக்குகளில் மேல்கீழ் மேல்கீழ் மேல் நடுக்களில் அஞ்ஜலிசெய்து,

𑌧𑍍𑌯𑍇𑌯𑌸𑍍𑌸𑌦𑌾𑌸𑌵𑌿𑌤𑍃𑌮𑌣𑍍𑌡𑌲𑌮𑌧𑍍𑌯𑌵𑌰𑍍𑌤𑍀 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌸𑍍𑌸𑌰𑌸𑌿𑌜𑌾𑌸𑌨𑌸𑌨𑍍𑌨𑌿𑌵𑌿𑌷𑍍𑌟𑌃, 𑌕𑍇𑌯𑍂𑌰𑌵𑌾𑌨𑍍𑌮𑌕𑌰𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑌵𑌾𑌨𑍍 𑌕𑌿𑌰𑍀𑌟𑍀𑌹𑌾𑌰𑍀 𑌹𑌿𑌰𑌣𑍍𑌮𑌯𑌵𑌪𑍁𑌰𑍍𑌧𑍃𑌤𑌶𑌂𑌖𑌚𑌕𑍍𑌰𑌃.

ஸூர்யமண்டலமத்யத்தில் பத்மாஸனத்தின் மேல் தோள்வளைகள் மகரகுண்டலங்கள் கிரீடம் ஹாரம் முதலிய திருவாபரணங்களோடு சங்கசக்ரதரராய் ஸ்வர்ணமயமான திருமேனியோடு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமந்நாராயணனை எக்காலத்தும் த்யானிக்கத்தக்கவர்.

இவ்விதமாய்த்யாநம்செய்து.

𑌶𑌂𑌖𑌚𑌕𑍍𑌰𑌗𑌦𑌾𑌪𑌾𑌣𑍇 𑌦𑍍𑌵𑌾𑌰𑌕𑌾𑌨𑌿𑌲𑌯𑌾𑌚𑍍𑌯𑍁𑌤 ।
𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦 𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌾𑌕𑍍𑌷 𑌰𑌕𑍍𑌷 𑌮𑌾𑌂 𑌶𑌰𑌣𑌾𑌗𑌤𑌮𑍍 ॥

பரமபதத்திலிருந்தால் ஆச்ரிதரக்ஷணத்திற்கு விளம்பம் நேரிடுகிறதென்று ப்ரக்ருதிமண்டலத்துக்குள் த்வாரகா புரியில் வாஸம்செய்பவனே! ஆச்ரிதனைக் கைவிடாதவனே! ஆச்ரிதவிரோதிகளை நிரஸநம் செய்யவேண்டிய ஆயுதங்களை எப்போதும் திருக்கையிலேயே தரித்திருப்பவனே! பசுக்களையும் பசுபோன்ற அஜ்ஞானிகளையும் தன்பேறாக ரக்ஷிக்குமவனே! ச்ருதியில் சொன்ன பரப்ரஹ்மலக்ஷணமான தாமரைபோன்ற கண்களையுடையவனே! உன்னைச் சரணமடைந்த என்னை ரக்ஷிக்கவேண்டும்.

இந்த ச்லோகத்தால் மானஸமாய் சரணாகதிசெய்து அதனால் ஸந்த்யாவந்தனத்தில் நேர்ந்த வைகல்ய தோஷங்களைக் கழித்துக் கொண்டு,

𑌨𑌮𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍍𑌯𑌦𑍇𑌵𑌾𑌯 𑌗𑍋𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌹𑌿𑌤𑌾𑌯 𑌚 ।
𑌜𑌗𑌦𑍍𑌧𑌿𑌤𑌾𑌯 𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌯 𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦𑌾𑌯 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ॥

ப்ராஹ்மணர்களுக்கு தேவதையும், பசுக்கள் ப்ராஹ்மணர்கள் இவர்களுக்கு எப்போதும் ஹிதத்தையே செய்பவரும், ஜகத்துக்கு ஹிதத்தைச்சிந்திப்பவரும், பசுக்களைத்தன்பேறுகரக்ஷிப்பவருமான கிருஷ்ணனைத் திருவடி தொழுகிறேன்.

என்று ஸேவித்து அபிவாதனம் செய்யவேண்டும். ஸந்தியா மத்திபத்தில் நேர்ந்த நியமலோப ப்ராயச்சித்தமாக கிருஷ்ண ஸ்மரணம் (ஸ்ரீக்ருஷ்ணாயநம:) என்று யாவத்சக்தி ஜபித்து ஆசமனம் பண்ணி ஸாத்விகத்யாகம் செய்யவேண்டும். பின்பு ஆசாரியர்கள் பெரியோர்களை வந்தனம் செய்யவேண்டும்.

## இதுவைஷ்ணவக்கிரமம்.

பூம்யைநம: என்பதுமே [illegible]

[illegible]
[illegible]

[illegible]
[illegible]

[illegible]
[illegible]

[illegible]
[illegible]

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

[illegible]

[illegible]
[illegible]
[illegible]

[illegible]
[illegible]

ஸர்வதே³வநமஸ்கார: கேஶவம் ப்ரதிக³ச்ச²தி ॥
ஶ்ரீகேஶவம் ப்ரதிக³ச்ச²த்யோம் நம இதி.

இதுகளை அநுஸந்தித்து நமஸ்காரம் செய்து அபிவாதனம் செய்து.

மந்த்ரஹீநம் க்ரியாஹீநம் ப⁴க்திஹீநம் ஜநார்த³ந ।
யத்க்ருதம் து மயா தே³வ பரிபூர்ணம் தத³ஸ்து தே ॥
ப்ராயஶ்சித்தாந்யஶேஷாணி தப: கர்மாத்மகாநி வை ।
யாநி தேஷாமஶேஷாணாம் க்ருஷ்ணாநுஸ்மரணம் பரம் ॥

காயேந வாசா மநஸேந்த்³ரியைர்வா பு³த்³த்⁴யாத்மநா வா ப்ரக்ருதே: ஸ்வபா⁴வாத், கரோமி யத்³யத்ஸகலம் பரஸ்மை நாராயணாயேதி ஸமர்பயாமி ॥

யச்ச க்ருதம் த்வக்ருதம் யத³க்ருதம் க்ருதவத்ஸ்பு²ரிதம் ।
உப⁴யோ: ப்ராயஶ்சித்தம் ஶிவ தவ நாமாக்ஷரோச்சரிதம் ॥

என்றுசொல்லி 'சிவசிவ' என்று யாவத்சக்திசொல்லி ஆசமனஞ்செய்து.

அத்³யா நோ தே³வ ஸவித: ப்ரஜாவத்ஸாவீ: ஸௌப⁴க³ம், பரா து³ஷ்ஷ்வப்நியம் ஸுவ, விஶ்வாநி தே³வ ஸவிதர்து³ரிதாநி பராஸுவ, யத்³ப⁴த்³ரம் தந்ந ஆஸுவ.

என்று ஜபிப்பது. இதுஸ்மார்த்தர் கிரமம்

இதுவரையில் ப்ராதஸ்ஸந்த்யோபாஸநமுறை சொல்லப்பட்டது. பெரும்பாலும் ஸாயங்கால ஸந்தியோபாஸநமும் பிராதஸ்ஸந்தியாவந்தனம் போலவே, சிலவிடம்மாத்திரம் சொல்லப்படுகிறது. ஸங்கல்பங்களில்

ப்ராதஸ்ஸந்த்⁴யா என்ற இடங்களிலெல்லாம் ஸாயம்ஸந்த்⁴யா என்று அநுஸந்திக்கப்படும். மாலைச்சந்தியை என்று பொருள். 'ஸூர்யச்சமாமந்யுச்ச இதற்குப் பதில் அக்நிச் சமாமந்யுச்ச என்னும் மந்த்ரம் விநியோகிக்கத்தக்கது.

அக்³நிஶ்சேத்யநுவாகஸ்ய ஸூர்ய ருஷி:
தை³வீ கா³யத்ரீ ச²ந்த³:, அக்³நிர்தே³வதா.

அக்னிச்ச என்னும் அனுவாகத்திற்கு ஸூர்யன் ருஷி காய த்ரீச் சந்தஸ்ஸு, அக்னிதேவதை.

ப்ரதிபதம் ஸூர்யச்ச என்னும் மந்த்ரம்போல் சொல்லவே ண்டியது. அந்தபேதங்கள் அடியில் எழுதியிருக்கிறது.

𑌅𑌗𑍍𑌨𑌿𑌶𑍍𑌚 𑌮𑌾 𑌮𑌨𑍍𑌯𑍁𑌶𑍍𑌚 𑌮𑌨𑍍𑌯𑍁𑌪𑌤𑌯𑌶𑍍𑌚 𑌮𑌨𑍍𑌯𑍁𑌕𑍃𑌤𑍇𑌭𑍍𑌯𑌃,
𑌪𑌾𑌪𑍇𑌭𑍍𑌯𑍋 𑌰𑌕𑍍𑌷𑌨𑍍𑌤𑌾𑌮𑍍, 𑌯𑌦𑌹𑍍𑌨𑌾 𑌪𑌾𑌪𑌮𑌕𑌾𑌰𑍍𑌷𑌮𑍍 𑌮𑌨𑌸𑌾 𑌵𑌾
𑌚𑌾 𑌹𑌸𑍍𑌤𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌪𑌦𑍍𑌭𑍍𑌯𑌾𑌮𑍁𑌦𑌰𑍇𑌣 𑌶𑌿𑌶𑍍𑌨𑌾, 𑌅𑌹𑌸𑍍𑌤𑌦𑌵𑌲𑍁𑌮𑍍𑌪𑌤𑍁।
𑌯𑌤𑍍𑌕𑌿𑌞𑍍𑌚 𑌦𑍁𑌰𑌿𑌤𑌂 𑌮𑌯𑌿, 𑌇𑌦𑌮𑌹𑌂 𑌮𑌾𑌮𑌮𑍃𑌤𑌯𑍋𑌨𑍌 𑌸𑌤𑍍𑌯𑍇 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿
𑌷𑌿 𑌜𑍁𑌹𑍋𑌮𑌿 𑌸𑍍𑌵𑌾𑌹𑌾 ॥

| | |
|---|---|
| 𑌅𑌗𑍍𑌨𑌿𑌶𑍍𑌚 | அக்னியும் |
| 𑌅𑌹𑍍𑌨𑌾 | பகற்காலத்தில் |
| 𑌅𑌹𑌃 | பகற்காலமானது |
| 𑌸𑌤𑍍𑌯𑍇 | ஸத்தைகரூபமான |

மற்றப்பதங்களுக்குப் பொருள் ஸூர்யச்ச என்னும்அனுவா கத்தில் சொல்லப்பட்டது.

அத்வைதபாஷ்யம்—

ஸத்யே - பாதரஹிதமான உதயகாலம் முதல் இதுவரையில் நான்செய்த எல்லா பாபங்களையும் அஹரபிமானிதேவதை போக் கக்கடவது.

விசிஷ்டாத்வைத பாஷ்யம்—

அக்ரம்நயதி - ப்ரதானமானஸ்தானத்தை அடைவிப்பதால் பரமாத்மாவே அக்னி. "அஹஸ்ஸம்வத்ஸரோவ்யாள:" என்று ஸஹ ஸ்ரநாமத்தில் சொல்லுகையல் "அஹ:" என்பதும் பரமாத்மா வின் நாமம். நஹீந: - அஸ்ய - இதி - அஹ:-இவன் ஹீநனென்று யாரையும் கைவிடுவதில்லையாதலால் அஹஸ் என்பது பரமாத்மா. அநாதியான அவித்யையென்னும் ராத்திரியைக் கிழித்து ஞான மென்னும் ப்ரகாசத்தைக் கொடுப்பதால் ராத்திரியைநீக்கி வெளி ச்சத்தைத்தரும் பகல்போன்றவரென்னும் பொருள்கூறலாம். "ஸத்யம் ஜ்ஞாமனந்தம் ப்ரஹ்ம" என்கையால் ஸத்ய சப்தமும் ப்ரஹ்மநாமமே. ஸத்புருஷர் விஷயத்தில் ஸாதுவென்பதும் தான் ஸத்யத்திலும் ஸத்யம் என்பதும்தன்னிடத்திலும் ஸத்யம்ப்ரதிஷ்

டிதமாகையாலும், ஸத்யமான வைபவமுடையவராகையாலும், ஸத்யஸ்ரீரன்பதும் நிருபாதிக ஸத்தாவானென்பதும் இதன்பொருள்.

காயத்ரீத்யானத்தில்—

ஸாயம் ஸரஸ்வதீம் ஶ்யாமாம் ஸர்வ ஶுக்லாம்பராம் |
ஸாமவேதாம் வ்ருத்தாம் ... |
... ||

(பெயர் ஸரஸ்வதீ, வர்ணம் கறுப்பு. உச்சரிப்பது ஸாமவேதம், கையில் ஆயுதம் சக்கிரம், வயஸ்ஸு, வார்த்தகம், வாஹனம் கருடன், தேவதை விஷ்ணு.)

இம்முறையே த்யானஞ்செய்யவேண்டும் வாக்ரூபையாகையாலே ஸரஸ்வதியென்று சொல்லப்படுகிறது.

உபஸ்தானத்தில் 'மித்ரஸ்ய' என்பது முதலிய மூன்றுருக்குக்குப் பதில் 'இமம்மே' என்பது முதலிய ஐந்துருக்குக்கள் விநியோகிக்கப்பட்டன.

உ ௐ உதித்யஸ்ய ப்ரஸ்கண்வ ருஷி:, காயத்ரீ ச்சந்த:, ஸவிதா தேவதா.

இமம்மே என்பதுமுதலிய ஐந்துருக்குக்களுக்கும் தேவராதர்ருஷி, சந்தஸ்ஸு காயத்ரீ முதலியவை. தேவதை ஸூர்யன்

உ ௐ தேவராட் ருஷி: ஸூர்யோ தேவதா ... ||

... | ... ||உ||

... |
... ||ந||

... | ... ||ச||

... | ... ||டு||

அம்பரீஷமஹாராஜா யாகம்செய்தபோது யாகபசு நஷ்டமாய் விட்டது. அதற்குப்பதில் நரபசுவாக சுநச்சேபர் யூபத்தில் கட்டப்பட்டார். அவர் வருணனை ஸ்துதிசெய்கிறார். இமம்மே தத்வாயாமி என்னும் ருக்குகளினால்.

| | |
|---|---|
| 𑌵𑌰𑍁𑌣 | ஓ வருணனே |
| 𑌮𑍇 | என்னுடைய |
| 𑌇𑌮𑌂 | இந்த |
| 𑌹𑌵𑌂 | ப்ரார்த்தனையை |
| 𑌶𑍍𑌰𑍁𑌧𑍀 | கேட்கவேணும் |
| 𑌅𑌦𑍍𑌯 | இப்போதே |
| 𑌮𑍃𑌳𑌯 | என்னை ஸுகிப்பிக்கவேண்டும் |
| 𑌅𑌵𑌸𑍍𑌯𑍁𑌃 | எனதுரக்ஷணத்தை இச்சித்தவனாய் |
| 𑌤𑍍𑌵𑌾𑌂 | உன்னை |
| 𑌆𑌚𑌕𑍇 | த்ருப்தியையாசிக்கிறேன் |
| 𑌤𑌤𑍍 | ஆகையால் |
| 𑌤𑍍𑌵𑌾 | உன்னை |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌾 | வேதத்தால் |
| 𑌵𑌨𑍍𑌦𑌮𑌾𑌨𑌃 | ஸ்துதிசெய்பவனாய் |
| 𑌯𑌾𑌮𑌿 | சரணமடைகிறேன் |
| 𑌤𑌤𑍍 | ஆகையால் |
| 𑌯𑌜𑌮𑌾𑌨𑌃 | யாகம்செய்வான் |
| 𑌹𑌵𑌿𑌰𑍍𑌭𑌿𑌃 | புரோடாசம் முதலியவைகளால் |
| 𑌤𑌤𑍍 | தன்னிஷ்டமான பலத்தை |
| 𑌆𑌶𑌾𑌸𑍍𑌤𑍇 | கோருகிறான் |
| 𑌵𑌰𑍁𑌣 | ஓ வருணனே |
| 𑌅𑌹𑍇𑌡𑌮𑌾𑌨𑌃 | கோபமில்லாதவனாய் |
| 𑌇𑌹 | இந்தலோகத்தில் |
| 𑌬𑍋𑌧𑌿 | என்யாசனையை அங்கீகரிக்கவேண்டும் |
| 𑌉𑌰𑍁𑌶𑌂𑌸 | பெரியகீர்த்தியையுடையவனே |

| | |
|---|---|
| ந: | எமது |
| ஆயு: | ஆயுஸ்ஸை |
| ப்ரமோஷீ: | நாசம்செய்யாதே |
| ஹே தேவ வருண | ஓவருணதேவனே |
| யத் | எந்த |
| வ்ரதம் | வ்ரதமானது |
| தே | உனக்காகச்செய்யப்படுகிறதோ |
| த்யவி த்யவி | தினந்தோறும் |
| விஶோ யதா | மனிதர்கள்போல |
| ப்ரமிநீமஸி | நாசம்செய்தவர்களாய்விடுவோம் |
| சித் ஹி | இரண்டும் அசை |
| ஹே வருண | ஓவருணனே |
| தைவ்யே ஜநே | தேவதைகளிடத்தில் |
| மநுஷ்யா: | மனிதர்களாகிய நாங்கள் |
| யத்கிஞ்ச | எந்தஎந்த |
| இதம் | இந்தவிதமான |
| அபித்ரோஹம் | த்ரோஹத்தை |
| அசித்தீ | அஜ்ஞானத்தால் |
| சராமஸி | செய்தோமோ |
| யத் | எந்தகாரணத்தால் |
| தவ | உனது |
| தர்மா | தர்மங்களை |
| யுயோபிம | நாசம்செய்தோமோ |
| ஹே தேவ | ஓதேவதையே |
| ந: | எங்களை |
| தஸ்மாத் | அந்த |
| ஏநஸ: | பாபத்தால் |
| ரீரிஷ: | ஹிம்ஸியாதே |
| கிதவாஸ: | கபடிகளாகிய நாங்கள் |
| ரிபவ: ந: | சத்ருக்கள்போலே |
| தீவி | விளையாடினோமோ |

| | |
|---|---|
| யத் | எந்தபாபத்தை |
| ஸத்யம் | தெரிந்தேசெய்தோமோ |
| வாகா | அசை |
| உத | மேலும் |
| யத் | எந்தபாபத்தை |
| நவித்ம | அறியாமல் செய்தோமோ |
| ஸர்வாதா | அவைஎல்லாவற்றையும் |
| விஷ்ய | நாசம்செய் |
| ஶிதிரா | அவைகள்சிதிலமாகட்டும் |
| இவ | அசை |
| அத | பின்பு |
| தே | உனக்கு |
| ப்ரியாஸ꞉ | இஷ்டர்களாக |
| ஸ்யாம | ஆகக்கடவோம் |

பட்டபாஸ்கரர்—

ஆசாஸே - ப்ரார்த்திக்கிறேன், தத் - அதற்காக; யாமி - உன்னை அடைகிறேன். ஆயு꞉ - தீப்தியை, அன்னத்தை, ஹே தேவவருண! விச꞉ - கேவலமனிதர்களாகிய நாங்கள், தே - உனது, வ்ரதம் - ஆராதனமான. யத் - எந்தகார்யத்தை, ப்ரமினீமஸி - விச்சேதமில்லாமல் செய்யவேண்டுமென்று நினைக்கிறோமோ. அதை அப்படியே செய்விப்பதால் நாங்கள் உன்னையே அடைகிறோம். நாங்கள் மனுஷ்யராகையால் அஜாக்கிரதை ஸித்தமாயிருக்குமானதால் தேவதைகள் விஷயத்தில் நாங்கள் அல்பமாகவாவது அபராதம் செய்யக்கூடும். இது முதலியவைகளைப் பற்றி எங்களைக் கைவிடாமல் அனுக்கிரஹிக்கவேணும். கிதவாஸ꞉ - தங்கள் கார்யமே கண்ணாய் ஆடத்துடங்கிய ருத்விக்குகள். யத் - எதனால், ரிரிபு꞉ - எங்களை நாசம்செய்தார்களோ, நதிவி - ஆபத்தில் நல்லமுடிவோடு துடங்கவில்லையே, சிதிரா - சிதிலங்கள்போல, தா꞉ - அவைகளை, விஷ்ய - விடுவி.

வித்யாரண்யர்—

ப்ரஹ்மணா - மந்த்ரத்தினால், விசோயதா - எல்லா ஜனங்களும் தங்கள் தங்கள் கார்யத்தையே யோசிப்பதுபோல நாங்கள்

உன் கர்மத்தையே யோசிக்கிறோம். நதீஷ - ஸத்வ்யவஹாரத்தில் ப்ரவர்த்தியாமல் போனோர்களோ.

நாராயணஸ்வாமி பாஷ்யம்—

வரணஏவவருணஃ. வரணமென்பது ஆவரணம். சேதநாசேதநாத்மகமான எல்லா ப்ரபஞ்சங்களுக்கும் ஆவரணமான பரமாத்மா, எல்லாவிடத்திலும் வாஸஞ்செய்வதாலும் பாபங்களைத் தடுப்பதாலும் ஸம்பத்தைக் கொடுப்பதாலும், (வருண) பரமாத்மாவைச்சொல்லும், சரணாகதனுடைய அபீஷ்டத்தைப் பூர்த்திசெய்யவேண்டியது சரண்யனுடைய தர்மமென்பது காகபோதாதயுபாக்கியானங்களில் ப்ரஸித்தமாயிருப்பதால் அபாரகாருண்யவாத்ஸல்யசாலியான உனக்குச் சொல்லவேண்டுமோ. உன்னை ஆச்ரயிப்பவர்க்குப் பலம் ஸித்தமாகையால் எல்லோரும் உன்னைக் குறித்தே யாகஞ்செய்கிறார்கள். முமுக்ஷுயின் ப்ரதமபர்வமான கர்மயோகத்திற்கே பலம் ஸித்தமாயிருக்க சரணாகதனுக்குக் கேட்பானேன் என்று தாத்பர்யம். அநாதிகாலந்துடங்கி அக்ருத்யகரணம் க்ருத்யாகரணம் முதலிய பலஅபராதங்களை நான்செய்திருப்பதால் அவைகளைப்பார்த்து 'க்ஷமாமி, க்ஷிபாமி' என்று என்னை நிக்ரஹிக்க ஸங்கல்பியாமல், நான்செய்த சரணாகதிக்காக எல்லாவற்றையும் க்ஷமிக்கவேணும். சரணாகதர்களான நாங்கள் உனக்காராதனஞ்செய்யும் வகைகளில் காலவிச்சேதமில்லாமல் செய்வித்துக்கொள்ளவேண்டும். நாங்கள் செய்த பகவதபசாரம்பாகவதாபசாரம் இவைகளை நீயே க்ஷமித்தருளவேணும். இது ப்ரபந்நனது நிர்ப்பரத்வாநுஸந்தானக் கிரமம்.

வைத்யநாத தீக்ஷிதர்—

விவேகமில்லாதமனிதர்கள் விஹிதமான கர்மங்களை லோபம் செய்வதுபோல உன் ஆராதனமான கர்மங்களைவிகாதம்செய்தோம். சொக்கட்டானுமிடத்தில் போல வஞ்சகர்களான சத்ருக்கள் எங்கள்பேரில் ஆரோபிக்கும் பாபங்களைப்போக்கவேண்டும்.

கிருஷ்ணபட்டர்—

ஆசசே - ரக்ஷகனாகவேண்டுமென்று கோருகிறேன். அஹேடமாநஃ - அநாதரம் செய்யாமல். உருசம்ஸ-பெரிய மந்த்ரங்களினால் ஸ்துதிக்கத்தக்கவனே.

| | |
|---|---|
| ऐन्द्रे | गायत्री |
| तक्षायाः | त्रिष्टुप् |
| पश्चिमे | गायत्री |
| पक्तिं वः | जगती |
| हितवासः | त्रिष्टुप् |

மாத்யாஹ்நிக ஸந்த்யோபாஸனத்தில் - ஸூர்யஶ்ச அக்னிஶ்ச இந்த ஸ்தானத்தில் 'ஆப:புநந்து' என்னும் அநுவாகம் விநியோகிக்கப்படும்.

आपः पुनन्त्वित्यनुवाकस्य आप ऋषिः
अनुष्टुप् छन्दः, ब्रह्मणस्पतिर्देवता.

ஆப:புநந்து என்னும் அநுவாகத்திற்கு அப்புக்கள் ருஷி; அநுஷ்டுப்சந்தஸ்ஸு. ப்ரஹ்மணஸ்பதி என்பவர் தேவதை.

आपः पुनन्तु पृथिवीं पृथिवी पूता पुनातु माम्।
पुनन्तु ब्रह्मणस्पतिर्ब्रह्मपूता पुनातु माम्॥

यदुच्छिष्टमभोज्यं यद्वा दुश्चरितं मम। सर्वं पुनन्तु मामापोऽसतां च प्रतिग्रहं स्वाहा॥

| | |
|---|---|
| आपः | ஜலங்கள் |
| पृथिवीं | பூமியை |
| पुनन्तु | பரிசுத்தமாகச்செய்யட்டும் |
| पूता | பரிசுத்தமான |
| पृथिवी | பூமியானது |
| माम् | என்னை |
| पुनातु | பரிசுத்தனாக்கட்டும் |
| ब्रह्मणः | சதுர்முகனுக்கு |
| पतिः | ஸ்வாமியான நாராயணன் |
| पुनन्तु | பரிசுத்தனாகச்செய்யட்டும் |
| ब्रह्मपूता | பரமாத்மாவினால் பரிசுத்தமான ஜலங்கள் |
| माम् | என்னை |
| पुनातु | பரிசுத்தனாகச்செய்யட்டும் |

| | |
|---|---|
| யச்ச | எந்த |
| உச்சிஷ்டம் | பரிசேஷமானது, என்றால் பூஜிக்கப்பட்டதோ |
| அபோஜ்யம் | புஜிக்கத்தகாத எது என்றால் புஜிக்கப்பட்டதோ |
| மம | எனக்கு |
| துஶ்சரிதம் | பாபம் |
| யத்வா | எதுவுண்டோ |
| மம | என்னுடைய |
| ஸர்வம் | அந்த எல்லா பாபங்களையும் |
| அஸதாம் | அயோக்யர்களிடத்திருந்து |
| ப்ரதிக்ரஹம் | நான் தானம்வாங்கினதையும் |
| ஆப꞉ | ஜலங்கள் |
| புநந்து | போக்கி என்னைச் சுத்தனாகச்செய்யட்டும் |
| ஸ்வாஹா | ஸ்வாஹா என்பது ஆஹுதி மந்த்ரம் |

விசிஷ்டாத்வைதம்—

அடையப்படுவதால் அப்பு பரமாத்மா. ஜலங்கள் பகவானுக்கு ஸ்தானமாகையால் பெருமையுடையவை. ப்ரஹ்ம வேதஸாரம் அதற்கு ப்ரதிபாத்யனுன பரமபுருஷன். மனம், வாக்கு, காயம் என்னும் மூன்றுகரணங்களாலும் நான்செய்த எல்லா பாபங்களையும் பரமாத்மா போக்கவேண்டும். ஸ்வாஹா என்பது ப்ரயத்திமந்த்ரம்.

அத்வைதபாஷ்யம்—

ஜலங்கள் ஸர்வ தேவதாஸ்வரூபிகளாகையால் அவைகள் பரிசுத்தனுகச்செய்யட்டும். பூமியில்படாத ஜலங்களில் ஆசமனம் செய்யக்கூடாதாகையால் ஜலம் பூமியில் விழவேண்டுமென்னும் தாத்பர்யத்தால் ஜலங்கள் பூமியைப் பரிசுத்தமாகச் செய்யப்படுமென்று ப்ரார்த்தித்து, பூமியில் உள்ள ஜலத்தை ஆசமனம் செய்வதால் பரிசுத்தனுகிறுனென்று சொல்லப்பட்ட படியால் பூமி

சுத்தனுக்கட்டுமென்று பின் ப்ரார்த்திக்கிறது. ப்ரஹ்மம் வேதம். வேதத்தால் ப்ரதிபாதிக்கப்படும் பரமாத்மா. ப்ரஹ்மணஸ்பதி. பிதா ப்ராதா இவர்களின் உச்சிஷ்டம் போஜ்யம் என்று சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருந்தாலும் அவர்கள் தர்ம வ்யத்யாஸமுடையவர்களாயிருந்தால் அது புஜிக்கத்தக்கதல்லவாகையால் அது என்னால் புஜிக்கப்பட்டிருந்தால் அதையும் என்று யதுச்சிஷ்டம் அபோஜ்யம் என்னும் பதங்களுக்கு அர்த்தம்.

த்யாநத்தில்

மத்யந்திநே து ஸாவித்ரீ ரவிமண்டலமத்யகா |
யஜுர்வேதம் வ்யாஹரந்தீ ஶ்வேதா ஶூலகரா ஶிவா |
யுவதீ ருத்ரதைவத்யா த்யேயா வ்ருஷபவாஹநா ||

(பெயர் ஸாவித்ரீ, உச்சரிப்பது யஜுர்வேதம், வர்ணம் வெளுப்பு. ஆயுதம் சூலம், தேவதை ருத்ரன். வாஹநம் வ்ருஷபம், வயது யௌவநம்) இவ்வாறு த்யாநம் செய்யவேண்டும்.

ஸூர்யஸம்பந்தியாகையால் ஸாவித்ரீ. ஜகத்தை ஸ்ருஷ்டிப்பதால் ஸாவித்ரீ.

உபஸ்தானத்தில்,

ஆஸத்யேநேதி ஷண்ணாம் ஹிரண்யஸ்தூப ருஷி: |
த்ரிஷ்டுபோஸ்த்ரிஷ்டுப், ஏதயோஸ்த்ரயாணாம் காயத்ரீ ஜகதீ
த்ரிஷ்டுபநுஷ்டுபஶ் சந்தாம்ஸி, ஸவிதா தேவதா.

ஆஸத்யேந என்பது ஆறுருக்கு. ருஷி - ஹிரண்யஸ்தூபர் த்ரிஷ்டுப் த்ரிஷ்டுப் காயத்ரீ ஜகதீ த்ரிஷ்டுப் அநுஷ்டுப் இவைகள் முறையே சந்தஸ்ஸு. ஸவிதா தேவதை. என்று ந்யாஸம் செய்க.

ஆஸத்யேந ரஜஸா வர்தமாநோ நிவேஶயந்நம்ருதம் மர்த்யம் ச | ஹிரண்யயேந ஸவிதா ரதேந தேவோ யாதி புவநா விபஶ்யந் ||௧||

உத்வயம் தமஸஸ்பரி பஶ்யந்தோ ஜ்யோதிருத்தரம் |
தேவம் தேவத்ரா ஸூர்யமகந்ம ஜ்யோதிருத்தமம் ||உ||
உதுத்யம் ஜாதவேதஸம் தேவம் வஹந்தி கேதவ:
த்ருஶே விஶ்வாய ஸூர்யம் ||௩||

சித்ரம் தேவாநாமுதகாதநீகம் சக்ஷுர்மித்ரஸ்ய வருணஸ்யாக்நே: । ஆப்ராத்யாவாப்ருதிவீ அந்தரிக்ஷம் ஸூர்ய ஆத்மா ஜகதஸ்தஸ்துஷஶ்ச ॥ ௪ ॥

தச்சக்ஷுர்தேவஹிதம் புரஸ்தாச்சுக்ரமுச்சரத் பஶ்யேம ஶரதஶ்ஶதம், ஜீவேம ஶரதஶ்ஶதம், நந்தாம ஶரதஶ்ஶதம், மோதாம ஶரதஶ்ஶதம், பவாம ஶரதஶ்ஶதம், ஶ்ருணவாம ஶரதஶ்ஶதம், ப்ரப்ரவாம ஶரதஶ்ஶதமஜீதாஸ்ஸ்யாம ஶரதஶ்ஶதம், ஜ்யோக்ச ஸூர்யம் த்ருஶே ॥ ௫ ॥

ய உதகாந்மஹதோऽர்ணவாத் விப்ராஜமாநஸ்ஸரிரஸ்ய மத்யாத்ஸமா வ்ருஷபோ லோஹிதாக்ஷஸ்ஸூர்யோ விபஶ்சிந்மநஸா புநாது.

| | |
|---|---|
| ஸத்யேந | நல்லிடங்களில் ப்ரகாசிக்கிற |
| ரஜஸா | தேஜஸ்ஸினாலே |
| வர்த்தமாந: | சுற்றிவருபவரான |
| ஸவிதா, தேவ: | ஸூர்யனென தேவன் |
| அம்ருதம் | தேவதைகளையும் |
| மர்த்யஞ்ச | மனிதர்களையும் |
| நிவேஶயந் | தங்கள் தங்கள் வ்யாபாரங்களைச் செய்யும்படி செய்துகொண்டு |
| ஹிரண்யயேந | ஸ்வர்ணமயமான |
| ரதேந | ரதத்தோடு |
| புவநா | லோகங்களை |
| விபஶ்யந் | அவரவர் கர்மங்களுக்குஸாக்ஷியாகப்பார்த்துக்கொண்டு |
| யாதி | ஸஞ்சரிக்கிறார் |
| தமஸஸ்பரி | அந்தகாராதிகளை நசிப்பிக்கிறவரும் |
| ஜ்யோதி: | தேஜோரூபமானவரும் |
| உத் - தேவம் | உத்தமதேவனையும் |
| உத்தரம் | ச்ரேஷ்டமானவரும் |
| தேவத்ரா | தேவதைகளை ரக்ஷிப்பவருமான |
| ஸூர்யம் | ஸூர்யனை |

| | |
|---|---|
| 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌃 | பார்க்கும் |
| 𑌵𑌯𑌂 | நாங்கள் |
| 𑌉𑌤𑍍𑌤𑌰𑌂 | ச்ரேஷ்டமான |
| 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃 | தேஜஸ்ஸை |
| 𑌅𑌗𑌨𑍍𑌮 | அடைவோம் |
| 𑌜𑌾𑌤𑌵𑍇𑌦𑌸𑌂 | செய்யப்பட்டகர்மங்களையெல்லா மறிந்தவரும் |
| 𑌸𑍂𑌰𑍍𑌯𑌂 | ஸூர்யனென்றும் ப்ரஸித்தருமான |
| 𑌤𑌂 | அந்த |
| 𑌦𑍇𑌵𑌂 | தேவதையை |
| 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌯 | ஜனங்களின் |
| 𑌦𑍃𑌶𑍇 | பார்வைக்காக |
| 𑌕𑍇𑌤𑌵𑌃 | ஆயிரம் கிரணங்கள் |
| 𑌉𑌦𑍍𑌵𑌹𑌨𑍍𑌤𑌿 | வஹிக்கின்றன |
| 𑌉 | அசை |
| 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 | தேவதைகளுக்குள்ளே |
| 𑌚𑌿𑌤𑍍𑌰𑌂 | ஆஶ்சர்யகரமானதும் |
| 𑌮𑌿𑌤𑍍𑌰𑌸𑍍𑌯𑌵𑌰𑍁𑌣𑌸𑍍𑌯 𑌅𑌗𑍍𑌨𑍇𑌃 | மித்ரன் வருணன் அக்னி இந்த தேவதைகளுக்கு |
| 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 | கண்போன்றதுமாகிய |
| 𑌅𑌨𑍀𑌕𑌂 | மண்டலமானது |
| 𑌉𑌦𑌗𑌾𑌤𑍍 | உண்டாயிற்று |
| 𑌸𑍂𑌰𑍍𑌯𑌃 | அம்மண்டலத்திலுள்ளஸூர்யன் |
| 𑌜𑌗𑌤𑌃 | ஜங்கமங்களுக்கும் |
| 𑌤𑌸𑍍𑌥𑍁𑌷𑌃 | ஸ்தாவரங்களுக்கும் |
| 𑌆𑌤𑍍𑌮𑌾 | ஆத்மாவாய்க்கொண்டு |
| 𑌦𑍍𑌯𑌾𑌵𑌾𑌪𑍃𑌥𑌿𑌵𑍀 | ஆகாசம் பூமிகளையும் |
| 𑌅𑌨𑍍𑌤𑌰𑌿𑌕𑍍𑌷𑌂 | ஸ்வர்க்கத்தையும் |
| 𑌆𑌪𑍍𑌰𑌾𑌃 | வ்யாபிக்கிறான், பூரிக்கிறான் |
| 𑌦𑍇𑌵𑌹𑌿𑌤𑌂 | தேவதைகளுக்கு ஹிதமானதும் |

| | |
|---|---|
| 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 | அவர்க கண்போன்றதும் |
| 𑌪𑍁𑌰𑌸𑍍𑌤𑌾𑌤𑍍 | உதயகாலத்தில் |
| 𑌶𑍁𑌕𑍍𑌰𑌂 | வெளுத்ததும் |
| 𑌉𑌚𑍍𑌚𑌰𑌤𑍍 | உதயமாவதுமான |
| 𑌤𑌤𑍍 | அந்தமண்டலத்தை |
| 𑌶𑌰𑌦𑌃 𑌶𑌤𑌂 | நூறுவருஷம் |
| 𑌪𑌶𑍍𑌯𑍇𑌮 | பார்க்கக்கடவோம் (யாவதாயுஷமும் பூஜிக்கக்கடவோம்) |
| 𑌜𑍀𑌵𑍇𑌮 | நூறுவருஷம்ஜீவிக்கக்கடவோம் |
| 𑌨𑌨𑍍𑌦𑌾𑌮 | புத்ரபௌத்ராதிஸமிருத்தாளாகக்கடவோம் |
| 𑌮𑍋𑌦𑌾𑌮 | ஸந்துஷ்டாளாகக் கடவோம் |
| 𑌭𑌵𑌾𑌮 | ஸ்வஸ்தானத்தில் அபிவ்ருத்தர்களாகக்கடவோம் |
| 𑌶𑍃𑌣𑌵𑌾𑌮 | ப்ரியவாக்கியங்களையே கேட்கக் கடவோம் |
| 𑌪𑍍𑌰𑌬𑍍𑌰𑌵𑌾𑌮 | ப்ரியவசனங்களையே சொல்லக்கடவோம் |
| 𑌅𑌜𑍀𑌤𑌾𑌸𑍍𑌸𑍍𑌯𑌾𑌮 | சத்ருக்களால் ஜயிக்கப்படாதவர்களாகக்கடவோம் |
| 𑌜𑍍𑌯𑍋𑌕𑍍 | ப்ரகாசித்துக்கொண்டிருக்கிற |
| 𑌸𑍂𑌰𑍍𑌯𑌂 | ஸூர்யனை |
| 𑌦𑍃𑌶𑍇 | பார்க்கவேணுமென்று ப்ரார்த்திக்கிறோம் |
| 𑌯𑌃 | எந்தஸூர்யன் |
| 𑌅𑌰𑍍𑌣𑌵𑌾𑌤𑍍 𑌮𑌹𑌤𑌃 | பெரிய ஸமுத்திரத்திலிருந்து |
| 𑌉𑌦𑌗𑌾𑌤𑍍 | உண்டானானோ |
| 𑌸𑌲𑌿𑌲𑌸𑍍𑌯 | ஜலத்தினுடைய |
| 𑌮𑌧𑍍𑌯𑌾𑌤𑍍 | மத்யத்தில் |
| 𑌵𑌿𑌭𑍍𑌰𑌾𑌜𑌮𑌾𑌨𑌃 | ப்ரகாசிக்குமவனும் |

| | |
|---|---|
| வ்ருஷப: | அவரவர்களுக்கிஷ்டமான பலத்தைக் கொடுப்பவனும் |
| ரோஹிதாக்ஷ: | சிவந்தகாந்தியுடையவனும் |
| விபஶ்சித் | ஸர்வஜ்ஞனுமாகிய |
| ஸ: | அந்த |
| ஸூர்ய: | ஸூர்யன் |
| மா | என்னை |
| ஆதரா | ஆதரவோடு |
| பாது | ரக்ஷிக்கட்டும் |

பட்டபாஸ்கரபாஷ்யம்—

ஸத்யேந - நித்யமாந, ரஜஸா - ஜ்யோதிர்மய மண்டலாத்மகமான மண்டலத்தால், ஆவர்த்தமாந: - உதயாஸ்தமயங்களைப் பண்ணுமவன். விபச்யந் - ஹிதங்களைப் பண்ணுமவன். சித்ரம் - லோகபூஜிதமானது; ஆத்மா - ப்ரேரகன். அல்லது 'ஸயச்சாயம்புருஷே யச்சாஸாவாதித்யே' என்கையால் அவனே பரமாத்மா.

வித்யாரண்யபாஷ்யம்—

ஸத்யோந - அமோகமான, ரஜஸா - ஸந்தோஷிப்பதானமண்டலத்தால், ஆவர்த்தமாந: - உதயாஸ்தமயங்களில்ஸஞ்சரிப்பவர். ஆயாதி - ப்ரதிதினம் உதயமாகிறார். நிவேசயந் - தேவசரீரம் மநுஷ்யசரீரம் இதுகளை அந்தந்த காலத்தில் தன் ப்ரகாசத்தால் வ்யவஹார யோக்யமாகச் செய்பவர். வயம் - நாங்கள், தமஸ: உத்தரம் ஜ்யோதி:-தமோநாசகமாகையால் உத்தமமான அக்னியின் தேஜஸ்ஸை, உத்பரிபச்யந்த: - உத்கர்ஷத்தோடு நாலுபக்கத்திலும் பார்த்துக்கொண்டு, தேவத்ரா - தேவதைகளுக்குள்ளே, ஸூர்யம் - தேவம் - ஸூர்யரூபமாகவே யிருக்கிற அக்னி ஸம்பந்தியான, உத்தமம் ஜ்யோதி: - உத்க்ருஷ்டமாந தேஜஸ்ஸை - அகந்ம - அடைந்தோம். சித்ரம் - நாநாவர்ணமானதும் தேவாநாம்-காந்திகளுக்கு, அநீகம் - ஸேனைபோன்றதுமான மண்டலம்.

விசிஷ்டாத்வைதபாஷ்யம்—

ஸத்யேந - காலத்தால் உண்டாகும் விகாரமில்லாத நித்யவிபூதியோடும், ரஜஸா - ரஜோகுணம் கலந்த லீலாவிபூதியோடும் ஆவர்த்தமாந: - எப்போதும் இருப்பவரான, ஸவிதா-பரமாத்மாவானவர், அம்ருதம் - முமுக்ஷுக்களுக்கு மோக்ஷத்தையும்

மர்த்யம்ச - புருஷர்களுக்கு ஐஹிகபலத்தையும், நிவேசயந் - கொடுத்துக்கொண்டு புவநா - ஸகலப்ராணி வர்க்கங்களையும், விபச்யந் - அவரவர் கர்மாநுகுணமாக நியமிப்பதற்காகநன்ருய்ப் பார்த்துக்கொண்டு, ஹிரண்மயேந - ச்ரேஷ்டமான, ரதேந-கருடனென்றும் ரதத்தால், ஆயாதி - எழுந்தருளுகிருர். அவரை உபாஸிக்கிறேன். தமஸஃ - ப்ரக்ருதிக்கு, பரி - மேல்பட்டதும்' உத்தரம் ஜ்யோதிஃ - ச்ரேஷ்டதேஜஸ்ஸுமான, ஸூர்யம் - பூஜ்யனை, தேவம் - பரமாத்மாவை. அப்ராக்ருத திவ்ய மங்களவிக்ரஹ விசிஷ்டனை பரமாத்மாவை உபாஸிப்பதால் பரமபதத்தை அடைகிறும். கேதுபோல் ப்ரபாவத்தைக்காட்டும் கல்யாணகுணங்கள் அந்த பரமாத்மாவை ப்ரகாசப்படுத்துகின்றன. அவன்அந்தகுண வசனாய் நம்மை ரக்ஷிக்கும்பொருட்டு ராமகிருஷ்ணுதிரூபேண அவதாரம் செய்திருப்பதால் அவனை உபாஸிப்பது. சித்ரம். தேவாஸுர யுத்தம் முதலியது நேரிடும்போதுதன் மூர்த்திபேதங்களைஸேனை போல் தானே தோன்றுவித்து சத்ரு நிரஸநம் செய்தவர். ஸர்வ ப்ராணி ஜாதங்களுக்கும் அந்தராத்மா. சக்ஷுஃ - எல்லாருக்கும் ஜ்ஞானப்ரதாநம் செய்வது,சுக்ரம். சுத்தஸ்வபாவமானது,உச்சரத்-க்ஷயமில்லாதது, நந்தாம - புத்ரசிஷ்யாதிகளோடு பகவத்குணநுபவம்செய்துகொண்டு ஸந்தோஷிக்கக்கடவோம். மோதமாவது அவ்வாநந்தத்தின் பரமகாஷ்டை. ச்ருணவாம - பகவத்கதைகளைக் கேட்கக்கடவோம். ப்ரப்ரவாம-பாஹ்யகுதர்ஷ்டிகளுடன் உத்தமமாக வாதம்செய்யக்கடவோம். அஜீதாஃ-வேதவிரோதவாதிகளான தார்க்கிகர்களால் ஜயிக்கப்படாமலிருக்கக் கடவோம். ஸகல ப்ராணி ஜாதங்களையும் உள்ளும் புறமும் வ்யாபித்தவர் என்பது மஹோதார்ணவாத்ஸ ரிரஸ்ய மத்யாத் என்பவைகளின் கருத்து. தர்ம ப்ரவர்த்தகரும் செந்தாமரைக் கண்ணனுமான பரமாத்மா, தன் ஸங்கல்பத்தால் என்னை ஸ்வாநுபவ யோக்யனுகச் செய்யட்டும்.

ஸ்ரீராமசந்த்ரோதயம்—

ரஜஸா - ஸர்வாநந்தகரமான, ஸத்யேந - ஸத்யவாக்யபரதையாலே, வர்த்தமாநஃ - ஸர்வகாலமும் இருப்பவரான, தேவஃ ஸவிதா - ஸ்ரீராமன், அம்ருதம் - சிரஞ்சீவியான விபீஷணனையும், மர்த்யம்ச - மரிக்கக்கூடியவரான ஸுக்ரீவனையும், நிவேசயந்-தன்பக்

கத்தில் உட்காரவைத்துக்கொண்டு, புவநா - முன் தான் நடந்தவழி முதலியவை யெல்லாவற்றையும், விபச்யந் - நன்றாய்ப் பார்த்து ஸீதைக்குக் காட்டிக்கொண்டே, ஹிரண்மயேந - அழகான, ரதேந - புஷ்பகவிமானத்தால், ஆயாதி - அயோத்தியைக்கு எழுந்தருளுகிறார்.

மற்றவை மூன்றுகாலங்களுக்கும் ஒரே ரீதியானவை.

இக்கிரந்தத்தில் ஸூக்ஷ்மமான ஸாரார்த்தங்கள் மாத்திரமே எழுதப்பட்டன. விஸ்தாரார்த்தங்களையும் ரஹஸ்யார்த்தங்களையும் ஸம்ப்ரதாயப்படி அவரவர் பெரியோர் முகமாய்க் கேட்டுத்தெரிந்துகொள்வது.

ஸந்த்யாவந்தநபாஷ்யம்

முற்றிற்று.

---





ஹரி: ஓம்

ஸ்ரீரஸ்து.

ஸ்ரீஹயக்ரீவாய நம:

# ஸாமவேதஸந்த்யாவந்தந பாஷ்யம்.

ஸாமவேத ஸந்த்யாவந்தநமும் அநேகமாய் இந்த யஜுர் வேத ஸந்த்யாவந்தநம் போலவே யிருக்கும் சில இடங்களில்மாத்திரம் வேறுபட்டிருக்கும் அந்தமந்த்ரங்களை மாத்திரம் எழுதப் படுகிறது.

ப்ராத: கால ஸந்த்யாவந்தநத்தில் யஜுர்வேதிகள் ஸூர்யஶ்ச என்று சொல்லுகிறவிடத்தில் இந்த மந்த்ரம் சொல்லப் படும்.

அஹஶ்சாதித்யஶ்ச புநாது ஸ்வாஹா.

பாஷ்யம்—

அஹ: - ஆஶ்ரிதர்களுடைய ஸம்ரக்ஷண விஷயத்தில் ஹீநனுகாதவன். எந்த ஆபத்திலும் அவர்களைக்கைவிடாமல் ரக்ஷிக்கிறவன். ஆதித்ய: - ஸூர்யன்போல் ப்ரகாசிக்கிறவன். கல்யாணகுணங்களில் குறைவற்றவன். ஸூர்யமண்டலத்தின் மத்தியில் எழுந்தருளியிருக்கிறவன். அந்த பரமாத்மா என்னைப் பாபங்களில் நின்றும் ரக்ஷிக்கட்டும்.

தினத்துக்கு அபிமானிதேவதையான ஸூர்யன் என்னை ரக்ஷிக்கட்டும் என்று சிலர் வியாக்கியாநம்.

ஸாயங்காலத்தில் அக்நிஶ்ச என்று சொல்லுகிறவிடத்தில் இது சொல்லப்படும்.

ராத்ரிஶ்ச வருணஶ்ச புநாது ஸ்வாஹா.

பாஷ்யம்—

ராத்ரிஃ - ஸமஸ்த ஸுகங்களையும் கொடுக்கிறவன். வருணஃ- தன்னை யாஸ்ரயித்தவர்களை ரக்ஷிக்கைக்காகத் தானவர்களை வரிக்கிறவன். அவர்களால் ரக்ஷகனாகவரிக்கப்பட்டவன். அந்தஸர்வேஸ்வரன் என்னை பாபத்தில் நின்றும் ரக்ஷிக்கட்டும்.

ராத்ரிக்கு அபிமானிதேவதையான வருணதேவன் என்னை ரக்ஷிக்கட்டும் என்றும் சிலர் சொல்லுவார்கள்.

ப்ராதஃ காலஸந்த்யாவந்தநத்தில்ப்ராயஸ்சித்தார்க்யத்துக்கு இது மந்த்ரம்

யதத்ய கச்ச வ்ருத்ரஹந் । உதகா அபி ஸூர்ய ।
ஸர்வம் ததிந்த்ர தே வசே ॥

பாஷ்யம்—

ஸூர்ய - ஜநங்களிடத்தில் தான் அந்தர்யாமியாயிருந்தும் தன்னுடைய ஸத்யஸங்கல்பத்தினாலும் ஜநங்களை நல்ல கார்யங்களில் ப்ரவ்ருத்திப்பிக்கிற பரமாத்மாவே! வ்ருத்ரஹந் - வ்ருத்ரன் என்று வறட்சியை யுண்டாக்கும் ஒரு அசுரனுக்கு, (அல்லது) ஒரு பிசாசத்துக்குப்பெயர். அதை நாசம்செய்கிறவனே! தன்னுடைய ஆஸ்ரிதர்களுக்குள்ள குறைவுகளைப்போக்கி ஸகலஸம்ருத்திகளையும் அளிக்கிறவன் என்று தாத்பர்யம். இந்த்ர - ஆஸ்ரிதர்களுக்கு எவ்வளவுகொடுத்தாலும் தன்னிடத்தில் கொஞ்சமும் குறையாத மஹத்தான ஐஸ்வர்யத்தை யுடையவனே! அத்ய-இப்பொழுது, யத்கச்ச - எந்த வ்யாபாரம்செய்கிறீரோ? அதையெல்லாம் ஜநங்களுடைய க்ஷேமத்துக்காகச் செய்கிறீர். "நதேரூபம் நசாகாரஃ" என்று சொல்லுகிறபடியே தான் ஸமஸ்தமான ஐஸ்வர்யங்களினாலும் பரிபூர்ணனானையால் தனக்காக ஒன்று ஸம்பாதிக்கைக்கு ஒரு வ்யாபாரமும் செய்யவேண்டியதில்லை. ஆயினும் ஜகத்தை ஸ்ருஷ்டித்தல், மத்ஸ்யம் கூர்மம் முதலிய அவதாரங்களைச் செய்தல், இந்திரன் முதலியதேவர்களைக்கொண்டு மழைபெய்தல் முதலியவைகளைச் செய்வித்தல், தேவர்கள்ஹவிஸ்ஸைப்பெறுகைக்கும் மநுஷ்யர் யஜ்ஞம் முதலிய ஸத்கர்மங்களைச் செய்கைக்கும் யோக்யமான உதயம் முதல் அஸ்தமயம் வரைக்குமுள்ள காலத்தை ஸூர்யனைக்கொண்டு செய்வித்தல், இவையெல்லாம்

தன்னுடைய பக்தஜநங்களை ஸம்ரக்ஷிக்கைக்காகச்செய்கிறீரென்று தாதபர்யம். (ஸர்வம் இத்யாதி) இந்த ஸகலமான ஜகத்தும் உம்முடைய வசத்திலே யிருக்கிறது. இந்த ஜகத்து தன்னுடைய ஹிதத்தைச் செய்துகொள்ளுகைக்கு ஸாமர்த்தியமின்றி யிருக்கையால் ஸர்வசக்தியையுடைய உமக்குப் பரவசமாயிருந்து உம்மால் ரக்ஷிக்கப்பட்டு க்ஷேமத்தை யடைகிறதென்று பொருள்.

வ்ருத்ராஸுரனைக்கொன்ற இந்திரன்போலிருக்கிற ஸூர்யனே! இன்றையதினம் நீர் எந்த வ்யாபாரம்செய்கிறீரோ? அதெல்லாம் ஜநங்களுடைய க்ஷேமத்தை யுத்தேசித்துச்செய்கிறீர். ஆகையால் அதெல்லாம் உம்முடைய ஸ்வாதீநத்தி லிருக்கிறதென்று தாத்பர்யம் என்று ஒரு வ்யாக்கியாநம்.

மத்யாஹ்நத்தில் ப்ராயஶ்சித்தார்க்ய மந்த்ரம்.

𑌉𑌦𑍇𑌦𑌭𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑌾𑌮𑌘𑌂 𑌵𑍃𑌷𑌭𑌂 𑌨𑌰𑍍𑌯𑌾𑌪𑌸𑌮𑍍 ।
𑌅𑌸𑍍𑌤𑌾𑌰𑌮𑍇𑌷𑌿 𑌸𑍂𑌰𑍍𑌯 ॥

பாஷ்யம்.

ஸூர்ய - ஸூர்யனே! ஸூர்யன் தன்னுடைய கிரணங்களினால் ஜலத்தையிழுத்து மேகமாக்கிப் பின்பு மழைபெய்விப்பதினாலும், தன் கிரணங்களை விடுவதினாலும் பயிர்முதலிய ஓஷதிகளை வ்ருத்திசெய்வித்து அதினால் ஜநங்களுக்கு க்ஷேமத்தைக்கொடுப்பதுபோல் ஸர்வேஶ்வரனும் ஜநங்களுக்கு நன்மையே கொடுக்கிறான். அப்படி நன்மையைச் செய்வதாகிற பெரிய ஸ்வபாவத்தை யுடையவன். அதற்குத் தகுந்த உபகரணங்களை யுடையவன். அப்படிச்செய்கிறவர்களில் ஶ்ரேஷ்டனா யிருக்கிறவன்.

இந்த மந்த்ரம் ஸூர்யபரமாகவும் வ்யாக்கியானம் செய்திருக்கிறார்கள்.

ஸாயங்காலத்தில் ப்ராயஶ்சித்தார்க்ய மந்த்ரம்.

𑌨 𑌤𑌸𑍍𑌯 𑌮𑌾𑌯𑌯𑌾 𑌚 𑌨 । 𑌰𑌿𑌪𑍁𑌰𑍀𑌶𑍀𑌤 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌃 ।
𑌯𑍋 𑌅𑌗𑍍𑌨𑌯𑍇 𑌦𑌦𑌾𑌶 𑌹𑌵𑍍𑌯𑌦𑌾𑌤𑌿𑌭𑌿𑌃 ॥

பாஷ்யம்—

எந்தபுருஷன், தனக்கு ஹோமஞ்செய்விக்கிறவர்களோடுகூட மேல் லோகமான மோக்ஷத்தையடைவிப்பிக்கிற பரமாத்மாவா

கிய அக்நியின் பொருட்டு ஹவ்யத்ஸதக்கொடுக்கிறுனோ? அவ னுடைய சத்துருக்கள் அவனை எந்த மாயைகளினுலும் வெல்ல மாட்டார்கள். ஹவ்யமென்கிறது ஹோமம்செய்யத்தகுந்த வஸ்து. ஹோமமாவது - தேவதையை யுத்தேசித்து ஒருவஸ்துவைக்கொ டுத்தல். இங்கு ஹவ்யமாவது - ஜீவாத்மா. ஹோமமாவது - அதை ப் பரமாத்மாவினிடத்தில் ஸமர்ப்பித்தல். ஜீவாத்மாவைப் பரமா த்மாவினிடத்தில் ஸமர்ப்பணம் செய்விக்கிறவன் ஆசார்யன். ஆக ஆசார்யனை முன்னிட்டுக்கொண்டு ப்ரணவத்தினுல் ஜீவாத்மாவை பரமாத்மாவினிடத்தில் எவன் ஸமர்ப்பிக்கிறுனோ? அவனைகாமம் க்ரோதம் முதலிய சத்ருக்கள் எவ்விதத்திலும் தன் வசமாக்கிக் கொள்ள ஸாமர்த்யமுடையவைகளாக ஆகமாட்டா என்று தாத் பர்யம்.

அக்நிஸேவை பண்ணுகிறவனை சத்துருக்கள் ஜயிக்கமாட்டார் களென்று சிலர் சொல்லுவார்கள்.

காலையில் உபஸ்தாநத்தில் "உத்தமேசிகரே தேவி" என்கிறது முதல் "கச்சதேவியதாஸுகம்" என்கிற மந்த்ரம் சொன்னபின்பு, "மித்ரஸ்ய சர்ஷணீத்ருதः" என்கிற மந்த்ரம் யஜுர்வேதிகள்சொ ல்லுகிறவிடத்தில் இந்த மந்த்ரம் சொல்லவேணும்.

ஸுநாவமாருஹேயமஸ்ரவந்தீமநாக³ஸம் |
ஶதாரித்ராꣳ ஸ்வஸ்தயே ||

ஓம் நம: ...ராய நம: ...ராய நம: ...ராய
...ராய ...

பாஷ்யம்—

ஸூர்யனே! அநேகவிதமான ஸமஸ்த வஸ்துக்களினுல் பரி பூர்ணமாயும், நாலுபக்கங்களிலும் போக ஸமர்த்தமாயும், ஜலம் நிறைந்து முழுகிப்போகுகைக்கு ஹேதுவான துவாரங்களில்லாத தாயும், தன்னையடைந்தவர்களை அக்கரையை யடைவிப்பிக்கிறதா யும், அநேகமானக்ஷேபணியை (ஓடக்காரன் தன்கையில் பிடித்து க்கொண்டு ஜலத்தைத் தள்ளிக்கொண்டு ஓடத்தை நடத்துகைக்கு ஸாதகமான தண்டத்தை) யுடையதாயுமிருக்கிற ஓடத்தை எங்க ளுடைய க்ஷேமத்துக்காக ஏறுகிறேன். ஸமஸ்தைஸ்வர்ய பரிபூர்ணனு

யும், சேதநனை யங்கீகரிக்கைக்குச் சுற்றும் ஜாகரூகனாய் பார்த்துக்கொண்டிருந்து கொஞ்சம் ஸமயமுண்டானவாறே அப்பொழுது அவனிடத்தில் ப்ரவேசித்து அங்கீகரிக்கிறவனாயும், சேதநர் தன்னை யாச்ரயித்த வநந்தரம் அவர்களுக்கு துர்கதிவராமல் காத்து ஸம்ஸாரத்தைவிட்டு நீக்கி மோக்ஷத்தை யடைவிப்பிக்கிறவனாயும், காமம் க்ரோதம் முதலிய அநேகமான வைரிகளை யழிக்கிறவனாயுமிருக்கிற ஆதித்யாந்தர்யாமியான ஸ்ரீமந்நாராயணனை பஜிக்கிறேன் என்று தாத்பர்யம். ஆதித்யாந்தர்யாமியாயிருக்கிற ஸ்ரீமந்நாராயணனுக்குநமஸ்காரம்.இவ்விதம்மூன்றுதரம் தியாநம்செய்ய வேண்டும். நீர் உதித்தபின்பு உம்மை யநுசரித்து நான் உதிக்கிறேன். என்னுடைய க்ஷேமத்துக்கு வேண்டிய கர்மங்களைச்செய்கிறேன்.

ஸாயங்காலத்திலும் எல்லா மந்த்ரமும் இதுவே. "உத்யந்தம் த்வாதித்யாநு உதியாஸம்" என்கிற விடத்தில் மாத்திரம், வ்ரதிஷ்ஹாக்வாதித்யாநுவ்ரதிஷாஸம். என்று அநுஸந்திக்கவேணும்.

பாஷ்யம்—

நீர் அஸ்தமித்தால் உம்மை யநுஸரித்து நானும் ஸகலகர்மங்களில் நின்றும் நிவ்ருத்திக்கிறேன்.

இதற்குமேல் "ஸந்த்யாயைநம:" என்று யஜுர்வேதஸந்த்யாவந்தநத்திற் சொல்லிய மந்த்ரங்களை யநுஸந்தித்துக்கொண்டு அங்கு சொன்ன க்ரியைகளையே செய்யவேண்டும்.

மத்யாஹ்நத்தில்,"உத்தமேசிகரே"முதல்"யதாஸுகம்"வரையில் அநுஸந்தித்து அதன்பின் "உதுத்யம் ஜாதவேதஸம்" தொடங்கி "தச்சக்ஷுர்தேவஹிதம் புரஸ்தாத்" என்றவரையில் அநுஸந்திக்கவேணும். இந்தமந்த்ரம் யஜுர்வேதிகளுடைய ஸந்த்யாவந்தநக்ரமத்தில் மத்யாஹ்நம் உபஸ்தாந மந்த்ரத்திலிருக்கிறது. இதற்கு பாஷ்யம் அங்கே எழுதப்பட்டிருக்கிறது. "பச்யேமசரதச்சதம்" என்று அவர்கள் அநுஸந்திக்கிறவிடத்தில் இந்த மந்த்ரத்தை யிவர்கள் சொல்லவேண்டியது.

ஸ்ருஜ்ஜ்வஸ்ரஹஸாவஹ | சுஷ்ரிவதஜவா |
வாயுவிவஷ்ரணெந | ஸொஜவஷந |

𑌬𑍃𑌹𑌸𑍍𑌪𑌤𑌿𑌰𑌿𑌵 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌯𑌾 । 𑌅𑌶𑍍𑌵𑌿𑌨𑌾𑌵𑌿𑌵 𑌰𑍂𑌪𑍇𑌣 ।
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌗𑍍𑌨𑍀𑌵 𑌬𑌲𑍇𑌨 । 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌲𑍋𑌕𑍇 𑌮𑍇 𑌵𑌾𑌸𑌂 𑌸𑌂𑌸𑍍𑌥𑌯𑌾𑌸𑍍𑌤𑍁 ।
𑌪𑌾𑌪𑌕𑍃𑌤𑍍𑌯𑌾𑌮𑍇 𑌦𑍍𑌵𑌿𑌷𑌨𑍍𑌤𑌃

பாஷ்யம்—

நான்கண்ணினால் ஸூர்யன்போலாகக்கடவேன் ; ஸூர்யன் ஸமஸ்தவஸ்துக்களையும் தன் ப்ரகாசத்தினால் அறிவதுபோல் என் கண்ணில் ஒரு மறைவின்றி ஸமஸ்த வஸ்துக்களையுமறியக்கடவேன். அக்நி தன் தேஜஸ்ஸினால் ஒருவராலும் ஸ்பர்சிக்கப்போகாமல் ப்ரகாசித்துக் கொண்டிருக்கிறதுபோல் நான் சத்ருக்களினால் அவமாநம் பண்ணப்படாமலிருக்கும்படி தேஜஸ்வியாக ஆகக்கடவேன். வாயுபோல ப்ராணவிச்சேதமில்லாதவனாகக் கடவேன். சந்திரன்போல் பரிமளத்தையுடையனாகக் கடவேன். ப்ருஹஸ்பதிபோல் புத்திமானாகக்கடவேன். அச்விநி தேவதைகள்போல ரூபவானாகக் கடவேன். இந்திரனைப்போலவும் அக்நியைப்போலவும் பலவானாகக்கடவேன். ஸ்வாமீ! சரீராவஸாநத்தில் ப்ரஹ்மலோகமான ஸ்ரீவைகுண்டத்தில் வாஸம்பண்ணக்கடவேன். "த்விஷந்த: பாபக்ருத்யாந்" என்கிறபடியே என்னுடைய பாபத்தை என்னுடைய சத்ருக்கள் அடையட்டும்.

ஸாமவேதஸந்த்யாவந்தந பாஷ்யம்

முற்றிற்று.

---





𑌹𑌰𑌿𑌃 𑌓𑌮𑍍

𑌶𑍍𑌰𑍀𑌰𑌸𑍍𑌤𑍁

𑌶𑍍𑌰𑍀𑌹𑌯𑌗𑍍𑌰𑍀𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃

# புருஷஸூக்தம்.

𑌸𑌹𑌸𑍍𑌰𑌶𑍀𑌰𑍍𑌷𑌾 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 । 𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑌃 𑌸𑌹𑌸𑍍𑌰𑌪𑌾𑌤𑍍 ॥
𑌸 𑌭𑍂𑌮𑌿𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌤𑍋 𑌵𑍃𑌤𑍍𑌵𑌾 । 𑌅𑌤𑍍𑌯𑌤𑌿𑌷𑍍𑌠𑌦𑍍 𑌦𑌶𑌾𑌙𑍍𑌗𑍁𑌲𑌮𑍍 ॥௧॥

| | |
|---|---|
| 𑌸𑌹𑌸𑍍𑌰𑌶𑍀𑌰𑍍𑌷𑌾 | அநேகமான சிரஸ்ஸுக்களையுடையவராயும் |
| 𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑌃 | அநேகமானநேத்ரங்களையுடையவராயும் |
| 𑌸𑌹𑌸𑍍𑌰𑌪𑌾𑌤𑍍 | அநேகமான திருவடிகளையுடையவராயும் |
| 𑌸𑌃 | லோகவேதங்களில் ப்ரஸித்தராயுமிருக்கிற |
| 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 | ஸ்ரீமந்நாராயணன் |
| 𑌭𑍂𑌮𑌿𑌂 | பூலோகத்தை |
| 𑌵𑌿𑌶𑍍𑌵𑌤𑌃 | நான்குபுறத்திலும் |
| 𑌵𑍃𑌤𑍍𑌵𑌾 | வ்யாபித்து |
| 𑌦𑌶𑌾𑌙𑍍𑌗𑍁𑌲𑌮𑍍 | பத்துஅங்குல ப்ரமாணமான ப்ரஹ்மாண்டத்தை |
| 𑌅𑌤𑍍𑌯𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍍 | ஆக்ரமித்தார் |

விசிஷ்டாத்வைத பாஷ்யம்—

இந்த புருஷஸூக்தத்தின் மாஹாத்ம்யத்தை மநுமுதலான பெரியோர்கள் வர்ணித்திருக்கிறார்கள்.

"யோ ந்ருஷா ந்ருஜம் ப்ராஹதர்யா நய்ருஹேவோ ஹத:| ஸஸ்வை பௌருஷம் ஸூக்தம் ஜப்த்வா முச்யதே கில்பிஷாத்||" என்றும், "ஜப்த்வாது பௌருஷம் ஸூக்தம் ப்ராதர்மத்யந்தினே ஸதா| ப்ரஹ்மஹத்யாதி பாபேப்ய: பௌருஷம் விமுச்யதே" என்றும, "ஸஹஸ்ரசீர்ஷேதி வேதார்த்தம் ஸாமர்த்யாதி ப்ரஜாபதி:" என்றும், மநுசொல்லியிருக்கிறார். அதாவது—எவனொருவன் த்ரவ்யத்தைப் பாசைப்பட்டு ஸாங்கமாக வேதாத்யயநம்செய்த ப்ராஹ்மணோத்தமனைக் கொன்றானோ? அவன் நாம ப்ராஹ்மணனைக்கொன்றோமே நமக்கெந்தநரகம் நேரிடுமோவென்று பயந்து அநுதாபம் பிறந்து பின்பு ஜலத்தில் நின்றுகொண்டு பகவானை ஸ்மரணம் செய்துகொண்டு புருஷஸூக்தத்தை ஜபிக்கக்கடவன். எவனொருவன் தன் தாயாரிடத்தில் காமத்தினுல் செல்லுகிறானோ? அவன் புருஷஸூக்தத்தை ஜபிக்கக்கடவன். இவ்விருவர்களும் புருஷஸூக்தத்தினுடைய ஜபத்தின் மஹிமையினால் தாங்களசெய்த மஹா பாபத்தில்நின்றும் விட்டு நீங்குவார்கள். தினந்தோறும் செய்யவேண்டிய பஞ்சமஹாயஜ்ஞத்திலொன்றான ப்ரஹ்மயஜ்ஞத்தில் புருஷஸூக்தத்தை எவனொருவன் ஜபம்செய்கிறானோ? அவன் ஸாங்கோபாங்கமாய் ஸகலவேதங்களையும் ஜபம்செய்தவனுகிறான். ஆகையால் ஸமஸ்த பாபங்களையும் போக்கி அநந்தமான புண்யங்களையுண்டாக்குகிற இந்த புருஷஸூக்தத்துக்கு ஸமானமானது வேறொன்று கிடையாது. சௌநகமஹாமுனிவரும், ஸ்ரீமந்நாராயணனைப் புருஷஸூக்தத்தின் ருக்குகளினுல ஆராதநம் செய்யவேண்டுமென்று சொல்லி பின்பு, "க்ஷிதிம் த்ரைலோக்யம்ஜயதி" என்று மளவுமுள்ள ஸ்லோகங்களினுல், எவனொருவன் புருஷஸூக்தத்தின் ருக்குகளினுல் ஸ்ரீமந்நாராயணனை யாராதிக்கிறானோ? அவன் மூன்றுலோகத்தையு மாராதநம் செய்தவனுகிறான். எவனொருவன் பக்ஷபாதத்தைவிட்டுப் புருஷஸூக்தத்தினர்த்தத்தை ப்ரீதியுடன்கேட்கிறானோ? அவன் இந்த ஸம்ஸாரத்தில் வெறுப்புடையவனுய்எப்போதும் பரமாத்மாவையே த்யாநம்செய்துகொண்டு ஒரு ப்ராணியினிடத்திலும் த்வேஷத்தைச் செய்யாமல் எல்லா வஸ்துக்களையும் பரமாத்ம ஸ்வரூபமாக வறிந்து பரமாநந்தத்தை யநுபவித்துக் கொண்டிருப்பன். எவனொருவன் புருஷஸூக்தத்தின் ருக்குக்களைக்கொண்டு நெய்யினுல் ஹோமம் செய்கிறானோ?

அவன் இந்த ஸம்ஸாரத்துக்குக் காரணமானபுண்யபாபங்களை விட்டு மோக்ஷத்தையடைவன். எவனொருவன் ஸமஸ்த கல்யாணகுண பரிபூர்ணனும், மிகவழகான விக்ரஹத்தை யுடையவனும், ஜகத் காரணபூதனும் ஸகல தேவர்களுக்கும் ஸ்வாமியாயிருக்கிற ஸ்ரீமந் நாராயணனைத் தன்னுடைய ஹ்ருதய கமலத்தில் த்யாநம்செய்கிறானோ? அவன் மோக்ஷத்தை யடைந்து அந்த பரமாத்மாவோடு ஸமாநனுப் ப்ரஹ்மாநந்தத்தைத் யநுபவிக்கப்பெறுவன் என்று புருஷஸூக்தத்தின் மஹிமையையும் இதில் ப்ரதிபாதிக்கப்பட்ட தேவதையின் மஹிமையையும் பரக்கவெளியிட்டார். இன்னும் மநேகருஷிகள் இதன் வைபவத்தை யுரைத்தார்கள். ஆகையால் ஸகலவேதங்களிலும் இந்த புருஷஸூக்தமே ப்ரதாநமென்று கொள்ளவேண்டும். ஸ்ரீயஃபதியாகிய பகவான் ஸ்ரீவைகுண்டமென்னும் திவ்ய நகரத்தில் ஸ்ரீபூமிநீளாதேவிகளுடன் அநந்தன் கருடன் விஷ்வக்ஸேநர் முதலிய பரிஜநங்களினால் ஸேவிக்கப்பட்டவராய் எழுந்தருளியிருக்கையில், இந்த லீலாவிபூதியி லவதரித்து ஆஸ்ரிதர்களை ரக்ஷிக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி, திருப்பாற்கடலில் அநிருத்தாவதாரம் செய்தருளினார். அந்த அநிருத்தநாராயணனை இந்த புருஷஸூக்தம் ஸ்தோத்ரம் செய்கிறது.—அதில் இந்த முதல்ருக்கு அவர் எல்லாவிடங்களிலும் வ்யாபித்திருக்கிறார் என்று ப்ரதிபாதிக்கிறது,—

புருஷனென்றால் ஸ்ரீமந்நாராயணன். “பகவாநிதி ஶப்தோऽயம் ததா புருஷ இத்யபி । நிருபாதீ ச வர்த்தேதே வாஸுதேவே ஸநாதநே ॥ [illegible] உச்யதே । [illegible]” என்று பாத்மபுராணத்திற் சொல்லியிருகிறது அதாவது—பகவான் என்றும் புருஷனென்றும் சொன்னால் இவ்விரண்டுபதமும் ஸ்ரீமந் நாராயணனையே முக்யமாய்ச் சொல்லும். பகவான் என்கிற பதத்துக்கு ஒரு தோஷங்களுமின்றிக்கே ஸமஸ்த கல்யாணகுணங்களை யுடையவன்என்று அர்த்தம் என்று ஸ்ரீ ராசரபகவான்அருளிச்செய்தார். புருஷனென்கிறபதத்துக்குஎல்லாவஸ்துக்களிலும்அந்தர்யாமியாய் வாஸம் செய்கிறவனென்றும் எங்கும் வ்யாபித்து நிறைந்திருக்கிறானென்றும் அர்த்தம். இந்தகுணங்கள் ஸ்ரீமந்நாராயணனுக்கே யுண்டென்று வேதாந்தங்களில் சொல்லப்பட்டிருக்கிறது

வேறெருருவனை பகவான் என்றும் புருஷனென்றும் சொன்னால் அவர்களிடத்தில் இந்த குணங்களில்லாமையால் அந்த பதங்கள் அவர்களை முக்யமாகச்சொல்லாது. ஆயினும் பூஜார்த்தமாக இந்த பதங்களினலவர்களைச் சொல்லுகிறது. இந்த்ர பகவான் ருத்ரபகவான் என்று.அதுவுமின்றிக்கே ப்ரஹ்மாமுதலிய ஜகத்தெல்லாம் ஸ்த்ரீ ஸமானமென்றும் ஸ்ரீமந்நாராயணனேபுருஷனென்றும் சொல்லியிருக்கிறது; ஆகையால் ஸ்ரீவைகுண்டத்திலிருந்துக்ஷீராப்தியில் அநிருத்தனுயவதரித்த ஸ்ரீமந்நாராயணன் இந்த புருஷ சப்தத்துக்கு அர்த்தம். ஸஹஸ்ரம் என்றதற்கு அநந்தம்என்றர்த்தம். அந்த புருஷன் அநந்தமான சிரஸ்ஸுக்களையும், அநந்தமான நேத்ரங்களையும், அநந்தமான பாதங்களையுமுடையவராயிருக்கிறார். திருப்பாற்கடலில் சயநித்திருக்கும் அநிருத்த நாராயணனுக்கு ஸகலப்ராணிகளடங்கிய இந்த ப்ரஹ்மாண்டம் சரீரமாகையால் இதற்குள்ளடங்கிய ப்ராணிகளின் சிரஸ்ஸுக்கள் இவருக்கு சிரஸ்ஸுக்களாகின்றன. ஆகையால் அநந்தமான சிரஸ்ஸு முதலிய அவயவங்களையுடையவராகிறார். அவர் பூலோகத்துக்குக் கீழும் மேலுமிருக்கிற பதினலு லோகங்களையும் வ்யாபித்து அவருடைய அங்குலத்தினல் பத்தங்குலம் ப்ரமாணமுள்ளப்ரஹ்மாண்டத்தையாக்ரமித்தார். இந்த ப்ரஹ்மாண்டம் அவருடைய ஸ்வரூபத்திலொரு மூலையிலடங்கிவிட்டதென்று தாத்பர்யம்.

வித்யாரண்யபாஷ்யம்—

இந்த அநுவாகத்திற்கும் மேல் அநுவாகத்திற்கும் நாராயணம் என்று பெயர். நாராயணன் என்கிற ஒரு ருஷி தபஸ்ஸுபண்ணி பகவத்கடாக்ஷம்பெற்று அதினல் ஸ்வரம் வர்ணம் ஒன்றும் தப்பாமல் இந்த இரண்டநுவாகத்தையும் முதலில் அறிந்தபடியால் நாராயணம் என்று இதற்குப்பெயருண்டாயிற்று.மேலும் ஜகத்காரணமான நாராயணனை ப்ரதிபாதிக்கிறபடியாலும் நாராயணம் என்றுபெயர். ஸமஸ்தமான ப்ராணிகளடங்கிய ப்ரஹ்மாண்டத்தை தேஹமாக வுடைய விராட்புருஷனை இங்கு புருஷபதத்தால்சொல்லுகிறது. இங்கு ஸஹஸ்ரம் என்கிறது ஆயிரம் என்கிற கணக்கன்று. அநேகம் என்று அதற்கர்த்தம். அநேகமான சிரஸ்ஸு நேத்ரம் பாதங்களையுடையவர். ஸர்வப்ராணிகளும் இவருடைய சரீரத்திற்குள் அடங்கினபடியால் அந்த அவயவங்கள் எல்லாம் இவரு

டைய அவயவங்களாகும். அவர் அண்டஸ்வரூபமான பூமியைச் சுற்றும் வ்யாபித்து பத்தங்குலம் அதிக்ரமித்திருந்தார். பத்தென்பதற்கு அநேகம் என்றர்த்தம். இந்த அண்டத்துக்குவெளியிலும் வ்யாபித்திருந்தார் என்று தாத்பர்யம்.

மத்வபாஷ்யம்—

இந்த ஸூக்தத்தில் ப்ரஹ்மா விஷ்ணுவைக்குறித்துச் செய்த மாநஸயஜ்ஞத்தின் ப்ரகாரத்தையும், ஸ்ருஷ்டியின் ப்ரகாரத்தையும், தேவர்கள் செய்த கர்மயஜ்ஞஜ்நாந யஜ்ஞங்களின் ப்ரகாரங்களையும், மோக்ஷ ப்ராப்தியின் ப்ரகாரத்தையும் சொல்லுகிறது. ஸமஸ்தகுண பரிபூர்ணனான நாராயணன் ஆயிரஞ்சிரஸ்ஸு ஆயிரம் நேத்ரம் ஆயிரம் பாதங்களையுடையவர். அநந்தமான சிரஸ்ஸுக்களையுடையவருக்கு ஆயிரம்சிரஸ்ஸுக்கள்ஸித்தமாயிருக்குமாகையால் ஆயிரம் சிரஸ்ஸையுடையவரென்கிறது. அவர் பூமியோடுகூடிய ப்ரஹ்மாண்டத்தை வ்யாபித்து ப்ரஹ்மாமுதலியஜீவர்களுடைய பத்தங்குலம் அளவையுடைய ஹ்ருதயத்தில் அந்தர்யாமியாய் மிகவு மதிசயத்துடனிருந்தார்.

மஹீதரர் - நாபிக்குமேல் பத்தங்குலம் தேசத்துக்கு மேற்புறத்திலிருக்கிற ஹ்ருதய கமலத்தில் வாஸம்பண்ணுகிறார் என்று வ்யாக்யாநம் செய்தார்.

पुरुष एवेदꣳ सर्वम् । यद्भूतं यच्च भव्यम् ।
उतामृतत्वस्येशानः । यदन्नेनातिरोहति ॥ २ ॥

| | |
|---|---|
| यत् | எந்தஜகத்தானது |
| भूतम् | முன்கல்பத்தில் இருந்ததோ; |
| यत् | எந்தஜகத்தானது |
| भव्यम् | மேல்கல்பத்திலுண்டாகப்போகிறதோ, இந்த கல்பத்திலிருக்கிறதோ |
| यत् | எந்த ஜகத்தானது |
| अन्नेन | அந்நத்தினால் |
| अतिरोहति | மறையாமல் (நசிக்காமல்) இருக்கிறதோ; |

| | |
|---|---|
| இதம் | இந்த |
| ஸர்வம் | ஸமஸ்தமான ஜகத்தும் |
| புருஷ ஏவ | ஸ்ரீமந்நாராயணனே |
| உத | மேலும் |
| அம்ருதத்வஸ்ய | மோக்ஷத்துக்கு |
| ஈசாந: | ப்ரபு ஸ்ரீமந்நாராயணனே |

விசிஷ்டாத்வைதபாஷ்யம்—

கீழ் ருக்கினால் எங்கும் வ்யாபித்திருக்கிறானென்று தேசபரிச்சேதமில்லாமையைச் சொல்லிற்று. இந்த ருக்கினால் எப்போதுமுளனென்று காலபரிச்சேதமில்லாமையைச் சொல்லுகிறது. கழிந்தகாலத்திலிருந்த ஜகத்தும், இனியுண்டாகப் போகிற ஜகத்தும், இப்போது காணப்படுகிற ஜகத்தும் இவையெல்லாம் அநிருத்தநாராயணனென்று சொல்லப்படுகிற புருஷனே. மூன்றுகாலங்களிலுமுள்ள சேதநாசேதநங்களெல்லாம் பரமபுருஷனுக்குச் சரீரமாகையால் அவையெல்லாம் புருஷனெனப்படும். தேவன் மநுஷ்யன் என்ற பதங்கள் ஆத்மாவுக்குப் பெயரன்றிக்கே சரீரத்துக்கே பெயராயிருந்தபோதிலும் அந்த சப்தங்கள் அந்த சரீரத்தையுடைய ஆத்மாவைச் சொல்லுகின்றன. அதுபோல் இங்கும் ஜகத்து என்றால் ஜகத்தைச்சரீரமாகவுடையவனைக் காட்டும். இப்படி காலபரிச்சேதம் இல்லையென்று சொல்லி இனி போகமோக்ஷங்களைக்கொடுக்கிறனுமவனே யென்கிறது. ஆச்ரிதர்களுக்கு அளிக்கத்தக்க மோக்ஷத்தை யளிக்கிறவனுமிவனே. இந்த ஜகத்து அழிந்துபோகாதபடி அந்நத்தைக்கொடுத்து ரக்ஷிக்கிறவனு மிவனே. இவனையாச்ரயித்தவர்களுக்கு ஒரு குறைவும் நேரிடாதென்று தாத்பர்யம்

வித்யாரண்யபாஷ்யம்—

பூதபவிஷ்யத்வர்த்தமான காலங்களிலுள்ள இந்த ஜகத்துஎல்லாம் விராட்புருஷனே. இந்த கல்பத்திலிருக்கிற ப்ராணிகளுடைய தேஹங்கள் விராட்புருஷனுக்கு அவயவங்களாகுமாப் போலே சென்ற கல்பங்களிலுள்ள ப்ராணிகளென்ன இனி வரப்போகிற கல்பங்களிலுள்ள ப்ராணிகளென்ன இவையெல்லாம் விராட்புருஷனுடைய அவயவங்கள் என்று தாத்பர்யம். மேலும் இந்த

விராட் புருஷன் தேவதை யாகுகைக்கும் ஸ்வாமியாயிருக்கிறார். ப்ரஹ்மா இந்த்ரன் முதலிய தேவர்களாகவேணுமென்றால் இவரை யாஶ்ரயித்தே அந்தஸ்தானத்தை யடைவார்கள் என்றுதாத்பர்யம். இந்தவிராட்புருஷன் ஜீவாத்மாக்களுடைய புண்யபாவங்களுக்குத் தகுந்தபடி அவர்களுக்கு பலத்தைக் கொடுக்கைக்காகத் தன்னுடைய நிஜஸ்வரூபத்தைவிட்டு இந்த ஜகத்ரூபமாய் ஆயிருக்கிறார். ஆகையால் இந்த ஜகத்துயதார்த்தமன்று. ஒருதங்கக்கட்டி குண்டலம் முதலிய ஆபரணரூபமாய் விகாரத்தையடைந்தால் அந்த குண்டலம முதலியவைகள் தானுண்டாகுகைக்கு முன்னும் தானழிந்த பிறகும் காணுமையால அவைகள் வாஸ்தவமென்று கொள்ளப்படமாட்டா. அவைகளுக்குக் காரணமாகிய தங்கம் எப்போதும காண்கையால் அதுவே வாஸ்தவமென்றுகொள்ளப்படும். அதுபோல இந்த ஜகத்தும் முன்னில்லாமலிருந்து இப்பொழுது தோன்றி சிலநாள கழித்து அழிந்துபோகிறபடியால அது வாஸ்தவமாகமாட்டாது. விராட்புருஷனுடையஸ்வரூபம் எப்போதுமிருக்கிறபடியால் அதொன்றே வாஸ்தவமாயிருக்குமென்று தாத்பர்யம்.

மத்வ பாஷ்யம்—

பூதபவிஷ்யத் வர்த்தமானங்களாகிற மூன்றுகாலங்களிலுள்ள ஜகத்தெல்லாம் புருஷனுக்கே சேஷமாயிருக்கும். இவையெல்லாவற்றுக்கும் புருஷனே ஸ்வாமி என்று கருத்து. இந்தலீலாவிபூதியிலுள்ள கர்மவஶ்யர்களான ஸம்ஸாரிகளுக்கே யன்றி இந்த ஸம்ஸாரத்தைவிட்டு நீங்கி மோக்ஷத்தையடைந்தவர்களுக்கும் அவனே ஸ்வாமி. அந்நமென்றால் அழிந்துபோகிறவஸ்து. இந்த ஸம்ஸாரத்திலுள்ள வஸ்துக்களெல்லாம் ஸம்ஸாரிகளுடைய புண்யபாபங்களழிந்தவாறே அழிந்துபோகுமாகையால் அவ்வஸ்துக்களை அந்நமென்கிறது. அவைகளையுடைய ஸம்ஸாரி ஜீவன்களை இங்கு அந்நமென்றுசொல்லுகிறது. அந்த ஸம்ஸாரிகளை அதிக்ரமித்தவன் முக்தனென்று சொல்லப்படுகிறான்.

ஏதாவாநஸ்ய மஹிமா | அதோ ஜ்யாயாꣳஶ்ச பூருஷ꞉ |
பாதோ(அ)ஸ்ய விஶ்வா பூதாநி | த்ரிபாதஸ்யாம்ருதம் திவி ||௩||

| | |
|---|---|
| அஸ்ய | இந்தஅநிருத்தநாராயணனுடைய |
| மஹிமா | மஹாத்ம்யம் |

| | |
|---|---|
| 𑌏𑌤𑌾𑌵𑌾𑌨𑍍 | இவ்வளவு |
| 𑌅𑌤𑌃 | ஆகையால் |
| 𑌪𑍂𑌰𑍁𑌷𑌃 | அநிருத்தநாராயணன் |
| 𑌜𑍍𑌯𑌾𑌯𑌾𑌨𑍍 | ஶ்ரேஷ்டன் |
| 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾 | ஸமஸ்தமான |
| 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 | வஸ்துக்கள் |
| 𑌅𑌸𑍍𑌯 | இந்தஅநிருத்தநாராயணனுடைய |
| 𑌪𑌾𑌦𑌃 | ஒருபாகம் |
| 𑌅𑌸𑍍𑌯 | இந்தஅநிருத்தநாராயணனுடைய |
| 𑌅𑌮𑍃𑌤𑌂 | போக்யமாயிருக்கிற |
| 𑌤𑍍𑌰𑌿𑌪𑌾𑌤𑍍 | மூன்றம்சம் |
| 𑌦𑌿𑌵𑌿 | ப்ரகாசித்துக்கொண்டிருக்கிற பரமபதத்திலிருக்கிறது. |

### விசிஷ்டாத்வைதபாஷ்யம்—

முன்சொன்ன இரண்டுருக்குக்களி னர்த்தத்தையே மூன்றுவது ருக்குசொல்லுகிறது—திருப்பாற் கடலில் சயனித்திருக்கிற அநிருத்த நாராயணனுக்கு இன்னவிடத்திலில்லையென்கிற தேசபரிச்சேதமும்இல்லை. இன்னகாலத்திலில்லையென்கிறகாலபரிச்சேதமுமில்லை. ஸர்வகாலத்திலும் ஸர்வதேசத்திலும் நிறைந்திருக்கையாகிற மஹாமஹிமையையுடையவன். ஆகையால்இவனுக்கு ஸமானமானவரொருவருமில்லை. இவனே எல்லாரைக்காட்டிலும் பெரியன். இந்த பெருமையைச்சொல்லுகிறது மேல் அநந்தகோடிப்ரஹ்மாண்டங்களடங்கிய இந்த லீலாவிபூதியானது இந்த நாராயணனுக் குஏகதேசமா யிருக்கிறது. இதைக்காட்டிலும் மூன்றுபங்கு அதிகமாயிருக்கிற நித்யவிபூதியானது, அம்ருதம்போல் மிகவு மினிதாய் ரஜோகுணம் தமோகுணங்களின்றிக்கே சுத்தஸத்வத்தினால் ப்ரகாசித்துக்கொண்டிருக்கிறது. ஆகையால் ஸ்ரீவைஷ்ணவர்கள் அந்த நித்யவிபூதியை த்ரிபாத்விபூதியென்று சொல்லுகிறார்கள்.

### வித்யாரண்யபாஷ்யம்—

அதீதமாயும் அநாகதமாயும் வர்த்தமானமாயு மிருக்கிற இந்த ஜகத்து எவ்வளவு இருக்கிறதோ? அவ்வளவும் இந்த புருஷனு

டைய மஹிமை. அதாவது - ஸாமர்த்யம். ஆகையால் இதுவாஸ்தவமன்று. வாஸ்தவம் புருஷனொருவனே - தன்னுடைய ஸாமர்த்யஸ்வரூபமான இந்த ஜகத்தைக்காட்டிலும் அந்த புருஷன் மிகவும் பெரியன். இதையே வ்யக்தமாகச் சொல்லுகிறது மேல். புருஷனுடைய ஸாமர்த்யரூபமாயிருக்கிற மூன்றுகாலங்களிலுமுள்ள ப்ராணிகள், புருஷனுடைய நான்காவது பாகம். மிகுந்தமூன்றுபாகம் புருஷனுடைய ஸ்வஸ்வரூபம். அதற்கு நாசம்கிடையாது. அந்தஸ்வரூபம் ஸ்வயம் ப்ரகாசமாயிருக்கிறது. வேதத்தில் "அநந்தம்" என்று பரப்ரஹ்மத்தை அளவிறந்ததென்று சொல்லியிருக்கிறது. அப்படியிருக்க இங்கு நான்குபாகமாகச் செய்து சொல்லுகைக்குப்பொருளென்னென்னில்; விகாரசூன்யமான அம்சம் அதிகமென்றும் அதைக்காட்டிலும் விகாரத்தையடைந்திருக்கிறஇந்த ஜகத்ரூபமான பாகம் கொஞ்சமென்றும் தாத்பர்யம்.

மத்வபாஷ்யம்—

நாராயணனுடைய மாஹாத்ம்யம் மாஹாத்ம்யத்தைக் காட்டிலும் அதிக மாஹாத்ம்யத்தையுடையவன். அதிக மாஹாத்ம்யத்தின் விதத்தைச் சொல்லுகிறதுமேல். ப்ரஹ்மாமுதலான ஸமஸ்த ஜீவன்களும் இந்தபுருஷனுக்குப் பாதம். அதாவது ப்ரதிபிம்பம். ப்ரதிபிம்பமானது பிம்பத்தைக்காட்டிலும் வேறாக விருப்பதுபோல் புருஷனைக்காட்டிலும் ஜீவன்கள் வேறுபட்டிருப்பார்கள். விகாரமின்றி எப்போதுமொருவகைப்பட்டிருக்கிற புருஷனுடைய ஸ்வரூபம்மூன்றம்சமாயிருக்கும். அதில் ஒருஅம்சம் ஶ்வேதத்வீபத்திலும், மற்றொன்று பாதாளத்திலும், க்ஷீரஸமுத்ரத்திலும் இன்னுமொரு அம்சம் ஸ்ரீவைகுண்டத்திலும் இருக்கிறது.

த்ரிபாதூர்த்வ உதைத்புருஷ: | பாதோஸ்யேஹாபவாத்புன: |
ததோ விஷ்வங்வ்யக்ராமத் | ஸாஶநாநஶநே அபி ||

| | |
|---|---|
| புருஷ: | ஸ்ரீமந்நாராயணன் |
| த்ரிபாத் | மூன்றவதாரத்தையுடையவனாய் |
| ஊர்த்வ: | மேல்பாகத்திலிருக்கிறவனாய்க் கொண்டு |
| உதைத் | அமிந்தார். (ஸங்கல்பித்தார்) |

| | |
|---|---|
| அஸ்ய | இந்த ஸ்ரீமந்நாராயணனுடைய |
| பாத: | ஒருஅவதாரமான (அநிருத்தன்) |
| இஹ | இவ்வுலகத்தில் |
| அபவத் | அவதரித்தார் |
| தத: | அதற்குப்பிற்பாடு |
| விஷ்வங் | நாலுபக்கத்திலும் |
| ஸாசநாநசநே அபி | ஜீவன் ஜடம்இவைகளை யுத்தேசித்து |
| வ்யக்ராமத் | வ்யாபரித்தார் |

விசிஷ்டாத்வைதம்—

த்ரிபாத்விபூதியென்று சொல்லப்படுகிற பரமபதத்திலெழுந்தருளியிருக்கிற பரவாஸுதேவனுகிற பரமபுருஷன், ஸங்கர்ஷணன், அநிருத்தன், ப்ரத்யும்நன், என்கிற மூன்றவதாரங்களை யெடுத்துக்கொண்டு மூலப்ரக்ருதிக்கும் மேலே எழுந்தருளியிருந்தே அநந்தகோடி ப்ரஹ்மாண்டங்களுடைய ஸம்ரக்ஷண விஷயமாக ஸங்கல்பத்தைச் செய்தார். இவைகள் ஸுரக்ஷிதங்களா யிருக்கும்படி ஸங்கல்பித்தார் என்று அர்த்தம். அந்த மூன்றவதாரத்தில் ஓரவதாரமான அநிருத்த நாராயணன் இந்த லீலாவிபூதியில் ஆச்ரிதர்களை ரக்ஷிக்கைக்காகத் திருப்பாற்கடல், ச்வேதத்வீபம் முதலிய விடங்களிலும், அயோத்யை த்வாரகை முதலிய திவ்ய நகரங்களிலும் அவதரித்தார். அவதரித்த பின்பு ஆச்ரித ஸம்ரக்ஷணத்துக்காக அநேக வ்யாபாரங்களைச் செய்தார். ஸங்கல்பமாத்ரமேரக்ஷணத்துக்குப் போருமாயிருக்கச் செய்தேயும் ஆச்ரிதர்கள் விஷயத்திலுண்டான ப்ரீதியினுல் தான்நேரில் வந்து தன்னுடம்புநோவக் கார்யம்செய்து ரக்ஷிக்கவேணுமென்கிற திருவுள்ளத்தினுலே ராமக்ருஷ்ணுதியான அநேகஅவதாரங்களைச்செய்தார்.

வித்யாரண்யபாஷ்யம்—

இந்த விராட்புருஷனுக்கு ஸம்ஸார ஸம்பந்தமின்றிக்கே யிருக்கிற அதிகபாகம் எதுவுண்டோ? அது மிகவுஞ்சிறந்ததாயிருக்கிறது. நான்காவது பாகமானது அஜ்ஞாநத்தாலுண்டான இந்த ஸம்ஸாரத்தில் மாயையினுல் மூடப்பட்டு பிறப்பிறப்புக்களோடு கூடியதாயிருக்கிறது. ஸாசநம்-போஜநம் முதலிய வ்யவ

ஹாரங்களோடு கூடிய ஜீவன். அசரம் அதில்லாதமரம் முதலிய ஜடவஸ்து. பசுமநுஷ்யர் முதலிய ப்ராணிகளென்ன, மலைமரம் முதலிய அசேதநவஸ்துக்களென்ன இவ்விரண்டாலும் உலகம் எப்படி நிறையுமோ? அப்படி தானே அந்தந்த அநேகவிதமான ரூபங்களை யெடுத்துக்கொண்டு ஜகத்தில் வியாபித்திருக்கிறான்.

மத்வபாஷ்யம்—

க்ஷீராப்தி, ஶ்வேதத்வீபம், ஸ்ரீவைகுண்டம், என்று முன் சொல்லப்பட்ட மூன்று இடங்களிலும், மூன்றம்சத்தோடு எழுந்தருளியிருக்கிறவனாய் ஸத்வகுணப்பிரதாநனாயிருக்கிற பரமாத்மாவே ஒவ்வொரு வஸ்துக்களிலும் அந்தர்யாமியாய் ஆவிர்பவித்திருக்கிறான். அந்த பரமாத்மாவினுடைய மற்றோ ரம்சமானது அக்நிஸ்வரூபமாய் எல்லாருடைய க்ருஹங்களிலும் யாகத்தினாலாராதிக்கத்தகுந்தவனாய் எழுந்தருளியிருக்கிறான். அந்த பரமாத்மா இவ்வளவு மஹிமையுடையவனாகையால், முக்தர் ஸம்ஸாரிகள் என்றிருவகைப்பட்ட சேதர்களுடைய உள்ளே ப்ரவேசித்து அந்தர்யாமியாயும், வெளியிலிருந்து அவர்களுக்கு ஆதாரமாயும், இருந்து நாலுபக்கங்களிலும் வ்யாபித்திருக்கிறான்.

𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑌿𑌰𑌾𑌳𑌜𑌾𑌯𑌤 । 𑌵𑌿𑌰𑌾𑌜𑍋 𑌅𑌧𑌿𑌪𑍂𑌰𑍁𑌷𑌃 ।
𑌸𑌜𑌾𑌤𑍋 𑌅𑌤𑍍𑌯𑌰𑌿𑌚𑍍𑌯𑌤 । 𑌪𑌶𑍍𑌚𑌾𑌦𑍍𑌭𑍂𑌮𑌿𑌮𑌥𑍋𑌪𑍁𑌰𑌃 ॥௫॥

| | |
|---|---|
| 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | அந்த அநிருத்தநாராயணனிடத்திலிருந்து |
| 𑌵𑌿𑌰𑌾𑌟𑍍 | விசேஷமாய் பிரகாசித்துக்கொண்டிருக்கிற ப்ரஹ்மாண்டம் |
| 𑌅𑌜𑌾𑌯𑌤 | உண்டாயிற்று |
| 𑌵𑌿𑌰𑌾𑌜𑍋𑌅𑌧𑌿 | ப்ரஹ்மாண்டத்தை யாஶ்ரயித்து |
| 𑌪𑍂𑌰𑍁𑌷𑌃 | (நான்முகனாகிற) புருஷன் |
| 𑌜𑌾𑌤𑌃 | உண்டானான் |
| 𑌸𑌃 | அந்தநான்முகன் |
| 𑌭𑍂𑌮𑌿𑌮𑍍 | பூமியை |
| 𑌪𑌶𑍍𑌚𑌾𑌤𑍍 | பக்கங்களிலும் |

ரூபேண — கீழும்
பாச்சேன — மேலும்
அத்யதிஷ்டத் — ஆக்ரமித்தார்

விசிஷ்டாத்வைதபாஷ்யம்—

நாலாவது ருக்கில் ஸாமாந்யமாகச் சொன்ன ஸ்ருஷ்டியை ஐந்தாவது ருக்கு விசேஷமாகச்சொல்லுகிறது. அநிருத்த நாராயணனுடைய நாபிகமலத்திலிருந்து விசேஷமான ப்ரகாசத்தையுடையதாய் ஸுவர்ணமயமான ப்ரஹ்மாண்டம் உண்டாயிற்று. அந்தப்ரஹ்மாண்டத்தில் சதுர்முக ப்ரஹ்மா உண்டானன். ப்ரஹ்மாண்டத்தை சரீரமாகவுடைய அநிருத்த நாராயணனுடைய நாபிகமலத்திலிருந்துண்டான சதுர்முக ப்ரஹ்மா பெரிய தேஹத்தையுடையவராய் பூமியின் பக்கங்களையும், கீழ்புறத்தையும், மேல்புறத்தையும் வ்யாபித்தார்.

வித்யாரண்ய பாஷ்யம்—

முன் ருக்கில் ஜகத்தை வ்யாபித்திருந்தாரென்று சொல்லிற்று. இந்தருக்கு அதையே நன்றாய் விவரித்துச் சொல்லுகிறது.— அந்த ஆதிபுருஷனிடத்திலிருந்து விராட் உண்டாயிற்று. அதாவது—தேவர் மநுஷ்யர் பசுபக்ஷியென்று அநேகவிதமாயும், அதிலும் ப்ரஹ்மா இந்த்ரன், ப்ராஹ்மணன் சூத்ரன், பசுநாய், கருடன் காகம் என்று அநேகபேதங்களை யுடையதாயும்,அதிலும் தனிகன் தரித்ரன், வித்வான் மூர்க்கன், பலவான் துர்ப்பலன், இவைமுதலிய அநந்தமான பேதங்களையுடையதாயுமிருக்கிற ப்ராணிகளினும், கல் ஜலம் மரம் மண் என்றிவைமுதலாகஅநந்தவிதமாயும், அதிலும் மைநாகம் பருக்கைக்கல்,கங்கை குட்டை கல் பவ்ருக்ஷம் நாகதாளி, ஸுவர்ணம் களிமண்ணென்றிப்படிப் பலவகைப்பட்ட அசேதநங்களினாலும் நிறைந்து விசித்ரமாய்த் தோற்றுகிற ப்ரஹ்மாண்டம். அந்த ப்ரஹ்மாண்டத்தையே ஆதாரமாகக்கொண்டு அந்த தேஹத்துக்கு அபிமானியொருவனுண்டானன். எந்த பரமாத்மா வேதங்களில் சொல்லப்படுகிறானோ? அவனே தன்னுடைய மாயையினால் ஆச்சர்யமாய் ப்ரகாசித்துக்கொண்டிருக்கிற ப்ரஹ்மாண்டத்தை ஸ்ருஷ்டித்து அதைத் தனக்கு தேஹமா

கக்கொண்டு அந்த ப்ரஹ்மாண்டத்தில் தானே ஜீவஸ்வரூபியுமானான். என்றர்த்தம். இவ்வர்த்தம் அதர்வணவேதத்தில் உத்தரதாபிநியிற் சொல்லியிருக்கிறது. அண்டத்தில் ஜீவஸ்வரூபியாயுண்டானபின்பு தானே தேவர் மநுஷ்யர் என்று பிரிந்தபின்பு பூமியை ஸ்ருஷ்டித்தான்; அநந்தரம் ஜீவாத்மாக்களுக்கு சரீரத்தையும் ஸ்ருஷ்டித்தான்.

மத்வ பாஷ்யம்—

அந்த புருஷனிடத்தில் நின்றும் ப்ரஹ்மாண்டமுண்டாயிற்று. அதில் அந்த ப்ரஹ்மாண்டத்துக் கபிமாநியான சதுர்முகப்ரஹ்மா உண்டானார். அப்பொழுது பரமாத்மா அந்த ப்ரஹ்மாவுக்கு நியாமகராய் ஆனார். அந்த ப்ரஹ்மா அநிருத்தனை தனக்கநந்தரத்திலும் ருத்ராதிகளுக்கு முன்னுமுண்டானார். பின்பந்த ப்ரஹ்மா பூமியோடு கூடிய ஸமஸ்த லோகங்களையும் ருத்ராதி தேவர்களையும் அதிக்ரமித்திருந்தார்.

யத்புருஷேண ஹவிஷா। தேவா யஜ்ஞமதந்வத ।
வஸந்தோ அஸ்யாஸீதாஜ்யம்। க்ரீஷ்ம இத்மஶ்ஶரத்தவி: ॥ கூ ॥

| | |
|---|---|
| தேவா: | தேவர்கள் |
| யத் | எப்போது |
| புருஷேண | சதுர்முகஸ்வரூபனுயிருக்கிற |
| ஹவிஷா | ஹவிஸ்ஸினால் |
| யஜ்ஞம் | த்யாநரூபமான யஜ்ஞத்தை |
| அதந்வத | செய்தார்களோ (அப்பொழுது) |
| அஸ்ய | இந்த யஜ்ஞத்துக்கு |
| வஸந்த: | வஸந்தருதுவானது |
| ஆஜ்யம் | நெய்யாக |
| ஆஸீத் | ஆச்சுது |
| க்ரீஷ்ம: | க்ரீஷ்மருதுவானது |
| இத்ம: | ஸமித்தாக |
| ஆஸீத் | ஆச்சுது |
| ஶரத் | சரத்ருதுவானது |

| | |
|---|---|
| ஹவிஃ | ஹவிஸ்ஸாக |
| சூஸீக | ஆச்சுது |

விசிஷ்டாத்வைத பாஷ்யம்—

சதுர்முகப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்த பின்பு பரமபதமாகிற திவ்யலோகத்தில் ஸ்ரீவைகுண்டமென்கிற திவ்ய நகரத்தில் வஸிக்கிற ஸேனைமுதலியார்முதலியநித்யஸூரிகள்த்யானயஜ்ஞத்தைச் செய்தார்கள்.ஸ்ருஷ்டிவிஷயமாக த்யாநம் செய்தார்கள் என்றர்த்தம்.அந்த யஜ்ஞத்தில் வஸந்த காலத்தைநெய்யாகவும் க்ரீஷ்மகாலத்தை பலாசம் ஸமித்துக்களாகவும்சரத்காலத்தை யஜ்ஞத்தில் புரோடாசமென்று சொல்லப்படுகிற ஹவிஸ்ஸாகவும் த்யாநித்தார்கள். புரோடாச ஹவிஸ்ஸாவது அரிசியின் மாவினால் செய்யப்பட்டு ஹோமம் பண்ணப்படுகிற அடை. ஸ்வர்க்கம், பசு, தநம், இந்த்ரியம், சத்ருநாசம் முதலிய பலங்களை உத்தேசித்து யஜ்ஞம்செய்கிறது. அந்த யஜ்ஞத்தில் ப்ரதாநமாய் பசு ஹோமம் செய்யவேண்டியதாகையால், அதில் பசுவே ஹோமம் செய்யவேண்டும் த்ரவ்யங்களில் முக்யமான உபகரணம். ஸமித்து நெய் புரோடாசம் முதலியவைகளும் அதற்கு உபகரணங்கள். அதுபோல் ஜகத் ஸ்ருஷ்டியாகிற பலத்தை யுத்தேசித்து ஸங்கல்பரூபமாகிற யஜ்ஞம் செய்யும்போது அதில் ப்ரஹ்மாவை ப்ரதாநமான உபகரணமாகவும் காலத்தை அதற்குபயோகியாகவும் செய்தார்கள். ஜகத்ஸ்ருஷ்டியில் ப்ரஹ்மாவை ப்ரதாநகாரணமாகவும் காலத்தை ஸஹகாரிகாரணமாகவும் ஸங்கல்பித்தார்கள் என்றர்த்தம், இந்த ஸம்ஸாரத்தில் கர்மவஸ்யர்களாயிருக்கிற ப்ரஹ்மா ருத்திரன்முதலிய தேவர்களும் பரமாத்மாவை தூரத்தில் நின்று ஸ்துதித்துஅவனிடத்தில் நின்றும் உபதேசத்தையடைந்து ஜகத்தைப் படைக்கவும் அழிக்கவும் ஸமர்த்தர்களா யிருக்கிறார்கள். ஸேனைமுதலியார் முதலிய நித்ய ஸூரிகள் ஸர்வஜ்ஞர்களாய் பகவத் கடாக்ஷம்பெற்று எப்போதும் அவனுடைய ஸமீபத்தில் ஸஞ்சரித்துக்கொண்டு அவனுடைய ஸகல கார்யங்களையும் தாங்களே செய்துகொண்டு போகிறவர்களாகையால் இவர்களுக்கு ஜகத்ஸ்ருஷ்டியில் ஸங்கல்பம் கூடியிருக்கும். "தேவாஃ" என்பதற்கு இந்த்ரியம் என்றுவது அர்த்தம். இந்த்ரியங்களுக் கபிமானிகளான தேவர்கள் மற்றுமுண்

டான ஸ்ருஷ்டியைக் குறித்து இவ்விதமாக த்யானித்தார்கள் என்று இந்த யோஜனையில் அர்த்தம்.

வித்யாரண்ய பாஷ்யம்—

முன்சொல்லிய க்ரமப்படி தேவர்களுக்கு சரீரத்தை ஸ்ருஷ்டித்த பின்பு அத்தேவர்கள் மேன்மேல் ஸ்ருஷ்டி வ்ருத்தியடைகைக்காக அதற்கு ஸாதநமாக ஒரு யஜ்ஞத்தைச் செய்தார்கள். யஜ்ஞத்துக்கு வேண்டிய நெய் ஸமித்து முதலிய ஸாதநங்கள் அப்பொழுது ஸ்ருஷ்டிக்கப்பட் டிராமையால் விராட்புருஷனையே அந்த யஜ்ஞத்துக்கு ஸாதநமாக மநஸ்ஸினால் ஸங்கல்பித்து அந்த விராட் புருஷரூபமான ஹவிஸ்ஸினால் எப்பொழுது மாநஸிகமான யஜ்ஞத்தைச் செய்யத்தொடங்கினார்களோ? அப்பொழுது அந்தயஜ்ஞத்தில் வஸந்த ருதுநெய்யாகவாயிற்று வஸந்த ருதுவையே நெய்யாகக் கற்பித்தார்கள் என்றர்த்தம். அப்படியே க்ரீஷ்மருதுவைஸமித்தாகவும் சரத்காலத்தை புரோடாசமாகிற ஹவிஸ்ஸாகவும் கற்பித்தார்கள். ஜகத்தெல்லாம் விராட்புருஷஸ்வரூபமாகையால் முன்பு ஸாமான்யமாக அவனை ஹவிஸ்ஸாகக் கற்பித்து பின்பு வஸந்தகாலம் முதலியவைகளை நெய்முதலியவைகளாகக் கற்பித்தார்கள்.

மத்வபாஷ்யம்—

பரப்ரஹ்மத்தின் ஸ்தாநமான மோக்ஷத்தை யபேக்ஷித்தருஷிகள் நாராயணனைக்குறித்து யஜ்ஞம் செய்தார்களென்று சொல்லுகைக்காக யஜ்ஞம் செய்யவேண்டிய வஸந்தம் க்ரீஷ்மம் முதலிய காலங்களின் ஸ்ருஷ்டியையும் முதலில் சொல்லுகிறது. தேவா: - பரப்ரஹ்மத்தின் ஸ்தாநமான மோக்ஷத்தையடைய யோக்யதையை யுடையவர்களாய் ஜ்ஞாநயோகத்தை முக்யமாக அநுஷ்டித்துக்கொண்டிருக்கிற ஜீவாத்மாக்கள். புருஷேண - புருஷனென்று பெயரையுடைய நாராயணனுக்குப் பராதீநமாயிருக்கிற பதினாலு லோகஸ்வரூபமான ஹவிஸ்ஸினால். ருத்ரனென்கிற புருஷனாகிற பசுவினால் என்றுவது அர்த்தம். ஜ்ஞானவான்களான மஹர்ஷிகள் ருத்ரனைப்பசுவாகச்செய்து நாராயணனைக்குறித்து முன்பு புருஷமேதம் என்று ப்ரஸித்தமாயிருக்கிற யஜ்ஞத்தைச் செய்தார்கள். பின்பு அந்த நாராயணனிடத்திலிருந்து வஸந்தகாலமும் நெய்யும்

க்ரீஷ்மகாலமும் ஸமித்தும் சரத்காலமும் புரோடாசரூபமான ஹவிஸ்ஸும் உண்டாயின. வஸந்தகாலத்தில் ப்ராஹ்மணனும், க்ரீஷ்மகாலத்தில் க்ஷத்ரியனும், சரத்காலத்தில் வைச்யனும் யஜ்ஞம் செய்யவேண்டுமென்று வேதத்தில் வேறோரிடத்திற் சொல்லியிருக்கிறபடியால் ப்ராஹ்மணர் முதலியவர்கள் வஸந்தம் முதலிய காலங்களிலேயே யஜ்ஞம் செய்யவேண்டுமென்று அறிவிக்கைக்காக வஸந்தம் முதலிய மூன்றுகாலங்களின் ஸ்ருஷ்டியைச்சொல்லிற்று.

ஸப்தாஸ்யாஸன் பரிதயஃ। த்ரிஸ்ஸப்த ஸமிதஃ க்ருதாஃ ।
தேவா யத்யஜ்ஞம் தந்வாநாஃ। அபத்நந் புருஷம் பஶும் ॥ ௭ ॥

| | |
|---|---|
| அஸ்ய | இந்த யஜ்ஞத்துக்கு |
| ஸப்த | ஏழுகளாயிருக்கிற |
| பரிதயஃ | (அக்நிக்கு மூன்றுபக்கத்திலும் வைக்கப்படுகிறபலாசம்முதலிய மரங்களின் கொம்புகளாகிற) பரிதிகள் |
| ஆஸன் | உண்டாயின |
| த்ரிஸ்ஸப்த | இருபத்தொன்றுகளான |
| ஸமிதஃ | அக்நியில் (ஹோமம் செய்யப்படுகிற பலாசம் முதலியவைகளின் கொம்புகளாகிற)ஸமித்துக்கள் |
| க்ருதாஃ | செய்யப்பட்டன |
| தேவாஃ | தேவர்கள் |
| யஜ்ஞம் | யஜ்ஞத்தை |
| தந்வாநாஃ | பண்ணுகிறவர்களாய்க்கொண்டு |
| புருஷம் | சதுர்முகப்ரஹ்மாவை |
| பஶும் | (அக்நியில் ஹோமம் செய்யவேண்டிய) பசுவாக |
| அபத்நந் | (யூபஸ்தம்பத்தில்) கட்டினார்கள் |

விசி.—ஸாத்யர்களென்று பெயரையுடைய நித்யசூரிகள்,ஸ்ருஷ்டிரூபமாகிய யஜ்ஞத்தில் ஏழுபதார்த்தங்களைப் பரிதியாகச்செய்தார்கள். அவையாவன—ப்ருதிவீ, ஜலம், தேஜஸ்ஸு, வாயு,ஆகாசம், ஆகிய ஐந்து பூதங்களும், அஹங்காரம், புத்திஆக ஏழு. பரிதியென்பது-அக்நிக்கு தெற்கு மேற்கு வடக்கு திக்குக்களிலும், உத்தரவேதிக்கு முன்கூறிய மூன்று திக்குக்களிலும் வைக்கக்கப்பட்ட ஆறு பலாசம் முதலியவைகளின் தண்டம்; கிழக்கு திக்கில் ஸூரியன் ஆக ஏழு லோகத்திற்செய்யப்பட்ட யஜ்ஞத்தில் ப்ரஸித்தமாயிருக்கிறது. ஹோமம்செய்யவேண்டிய ஸமித்துக்களாக இருபத்தொரு பதார்த்தங்களைச் செய்தார்கள். அவையாவன—ப்ருதிவீமுதலிய ஐந்து பூதங்கள், கந்தம், ரஸம், ரூபம், ஸ்பர்சம், சப்தம், ஆகிய ஐந்து தந்மாத்திரைகள், கண், காது, மூக்கு, நாக்கு,சர்மம், இவைகளிலிருக்கிற ஐந்து ஜ்ஞாநேந்திரியங்கள், வாய், கால், கை, பாதம், ஆண்பெண் குறிகள்,இவைகளிலிருக்கிறஐந்து கர்மேந்திரியங்கள், மனஸ்ஸு, ஆக இருபத்தொன்று. இந்த ஸாமக்ரிகளைக் கொண்டு யஜ்ஞம் செய்யத்தொடங்கி அதில் சதுர்முக ப்ரஹ்மாவைப் பசுவாகச்செய்தார்கள்.

வித்.—அந்த யஜ்ஞத்தில் காயத்ரீமுதலிய ஏழு சந்தஸ்ஸுக்களை ஏழுபரிதிகளாகவும் சித்திரைமுதல்பன்னிரண்டுமாஸம், வஸந்தம்முதல் ஐந்துருக்குகள், மூன்றுலோகங்கள், ஸூர்யன், ஆகிய இருபத்தொன்றையும் இருபத்தொரு ஸமித்துக்களாகவும் பாவித்தார்கள். புலஸ்தியர், புலஹர் முதலிய ப்ரஜாபதிகள், சரீரத்திற்குள்ளே ஸஞ்சரிக்கும் முக்யப்ராணன், இந்திரியங்களுக்கு அபிமாநி தேவதைகள் ஆகிய இந்த தேவர்கள் மாநஸயஜ்ஞத்தைப் பண்ணுகிறவர்களாய் அந்த யஜ்ஞத்தில் விராட்புருஷனையே யஜ்ஞபசுவாகப் பாவித்தார்கள். இதையுட்கொண்டே முன்பு "புருஷேணஹவிஷா" என்று சொல்லப்பட்டது.

மத்—இந்த பரமாத்மாவினிடத்திலிருந்து யஜ்ஞத்துக்குஉபயோகியாகிய ஏழு பரிதிகள் உண்டாயின."த்ரிஃ" என்கிற வித்தால் "ஸப்த" என்பதை மூன்றுதரம் சொல்லிக்கொள்ளவேணுமென்று அபிப்பிராயம் தோற்றுகிறது. யஜ்ஞத்துக்கு வேண்டிய இருபத்தொரு ஸமித்துக்கள் உண்டாயின. "தேவாஃ" என்றால் ஜ்ஞாநயோகநிஷ்டர்கள்; சென்றது நடக்கிறது நடக்கப்போகிறது ஆகிய

மூன்றுகாலங்களிலு முள்ளவைகளை யறிகிறவர்கள். பரமாத்மஜ்ஞாநத்தினால் முக்தியை யடையவேண்டுமென்றிருக்கிறவர்கள். இவர்கள் யஜ்ஞபுருஷனென்று பெயரையுடைய பரமாத்மாவைக் குறித்து யஜ்ஞத்தைச் செய்கிறவர்களாய் அந்த யஜ்ஞத்தில் சதுர்முக ப்ரஹ்மாவினுடைய பெரியபிள்ளையான ருத்ரனைப் பசுவாக நியமித்து நாராயணனென்கிற தேவதையைக் குறித்து ஸமர்ப்பித்தார்கள்.

தம் யஜ்ஞம் பர்ஹிஷி ப்ரௌக்ஷந் | புருஷம் ஜாதமக்ரத꞉ |
தேந தேவா அயஜந்த | ஸாத்யா ருஷயஶ்ச யே ||அ||

| | |
|---|---|
| அக்ரத꞉ | முதலில் |
| ஜாதம் | உண்டான |
| தம் | அந்த |
| யஜ்ஞம் | ஹோமஞ்செய்கைக்கு யோக்யமாயிருக்கிற |
| புருஷம் | சதுர்முகப்ரஹ்மாவாகிறபுருஷனை |
| பர்ஹிஷி | மூலப்ரக்ருதியில் (சேர்த்து) |
| ப்ரௌக்ஷந் | ப்ரோக்ஷித்தார்கள் |
| தேந | அந்தபசுவினால் |
| ஸாத்யா꞉ | ஸாத்யர்களென்றுபெயரையுடைய |
| தேவா꞉ | தேவர்கள் |
| யே | எந்த |
| ருஷய꞉ | ருஷிகள் (உண்டோ) |
| தே | அவர்கள், (போல) |
| அயஜந்த | யாகஞ்செய்தார்கள் |

விசே—இவ்விடத்தில் "யஜ்ஞம்" என்றால் யஜ்ஞத்தில் ஹோமஞ் செய்யவேண்டும் ஹவிஸ்ஸைச் சொல்லுகிறது. "பர்ஹி꞉" என்றால் ப்ரக்ருதிக்குப்பெயர். எல்லாருக்கும் முன்னே யுண்டான சதுர்முக ப்ரஹ்மாவாகிய ஹவிஸ்ஸை மூலப்ரக்ருதியிற் சேர்த்து இந்தயஜ்ஞத்தை யநுஷ்டிக்கிற ஸாத்யரென்கிற தேவர்களாகிய நித்யஸூரிகள் ப்ரோக்ஷணம் என்கிற ஸம்ஸ்காரத்தைச் செய்தார்கள். பின்பு

ப்ரோக்ஷித்த ப்ரஹ்மாவாகிற பசுவினால் யாகத்தைச்செய்தார்கள். பராபரங்களை யுள்ளபடி யறிந்துஇதர விஷயங்களை அல்பமாகவெண்ணி பரமாத்ம ப்ராப்தியாகிய மோக்ஷத்தை இச்சித்திருக்கிற ருஷிகள் பரமாத்மாவைக்குறித்து எப்படியாகம்செய்வார்களோ? அதாவது—யாகமென்பது ஒருத்ரவ்யத்தை ஒரு தேவதையையுத்தேசித்துக்கொடுப்பது. தன்னுடைய ஆத்மாவாகிய ஹவிஸ்ஸினால் பரமாத்மாவாகிய அக்நியில் யாகம்செய்வது ; ஜீவாத்மாவைப் பரமாத்மாவினிடத்தில் ஸமர்ப்பிப்பது ருஷிகள் செய்யும் யாகமென்று அர்த்தம். அப்படியே ஸ்ரீவைகுண்டத்தில் வாஸம் செய்கிற நித்யஸூரிகள் அநிருத்தநாராயணனாகிய அக்நியில் சதுர்முகப்ரஹ்மாவாகிய ஹவிஸ்ஸை ஸமர்ப்பிக்கையாகிய யஜ்ஞத்தைச் செய்தார்கள் என்று அர்த்தம். ருஷிகள் பரமாத்மாவினிடத்தில் ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணுகையாகிற யஜ்ஞத்தைச் செய்கிறார்கள் என்கிற இவ்வர்த்தம் "ப்ரஹ்மணேத்வா" என்கிற ஶ்ருதியிற் சொல்லியிருக்கிறது.

வித்—யஜ்ஞத்துக்கு ஸாதகமானபசுவாகபாவித்துயூபஸ்தம்தில் கட்டப்பட்டும் எல்லா ஸ்ருஷ்டிக்கும் முன்னே யுண்டாயிருக்கிற அந்த விராட்புருஷனை தாங்கள் செய்கிற மாநஸயஜ்ஞத்தில் உபயோகிக்கும்படி ஸம்ஸ்காரரூபமான ப்ரோக்ஷணத்தைச் செய்தார்கள். பின்பு ஸ்ருஷ்டிக்கு உபயோகியான ஸாதநங்களையுடையரான தக்ஷர் முதலிய ப்ரஜாபதிகளென்ன, முக்யப்ராணனென்ன, இவர்களும், இவர்களால் செய்யப்படுகிற ஸ்ருஷ்டிக்கு அநுகூலர்களாயும், அந்த ஸ்ருஷ்டிக் குபயோகியான வேதமந்திரங்களைத் தங்களுடைய தபஸ்ஸினால் பரமாத்மாவை ஸந்தோஷிப்பித்துஅவனிடத்திலிருந்து அடைந்தவர்களாயு மிருக்கிற ருஷிகளும் ப்ரோக்ஷணம் செய்யப்பட்ட விராட்புருஷரூபமான பசுவை மாநஸயஜ்ஞத்தில் ஹோமம் செய்தார்கள்.

மத்—யஜ்ஞபுருஷனென்றுபெயரையுடைய பரமாத்மாவைக்குறித்துச்செய்கிறமாநஸயக்ஞத்தில்இந்திரன்முதலியதேவர்களுக்கு முன்னே உண்டாயிருக்கிற ருத்ரனைப்ரோக்ஷித்தார்கள் யாகத்துவகுவேண்டிய ஸாதநங்களையுடையவர்களாய் மோக்ஷத்தை யடையவேணுமென்றிருக்கிற ஜ்ஞாநயோக நிஷ்டர்களான ருஷிகள் தங்களுக்கந்தர்யாமியான பரமாத்மாவினால் ப்ரேரேபிக்கப் பட்டவர்

களாய் ஸ்ரீமஹாவிஷ்ணுவை யுத்தேசித்து தங்கள் தங்கள் யோக்யதைக்குத் தகுந்தபடி மானஸ யஜ்ஞத்தைச் செய்தார்கள்.

𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌹𑍁𑌤𑌃। 𑌸𑌂𑌭𑍃𑌤𑌂𑌪𑍃𑌷𑌦𑌾𑌜𑍍𑌯𑌮𑍍 ॥
𑌪𑌶𑍂𑌁𑌸𑍍𑌤𑌾𑌁𑌶𑍍𑌚𑌕𑍍𑌰𑍇𑌵𑌾𑌯𑌵𑍍𑌯𑌾𑌨𑍍। 𑌆𑌰𑌣𑍍𑌯𑌾𑌨𑍍𑌗𑍍𑌰𑌾𑌮𑍍𑌯𑌾𑌶𑍍𑌚𑌯𑍇॥

| | |
|---|---|
| 𑌸𑌰𑍍𑌵𑌹𑍁𑌤𑌃 | (தன்சரீரத்தை)யெல்லாம் ஹோமம் செய்யப்பட்ட |
| 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | அந்த |
| 𑌯𑌜𑍍𑌞𑌾𑌤𑍍 | யஜ்ஞத்துக்கு ஸாதகமான ப்ரஹ்மாவினிடத்திலிருந்து |
| 𑌪𑍃𑌷𑌦𑌾𑌜𑍍𑌯𑌮𑍍 | தயிரோடுகூடிய நெய் (ஜகத்காரணபூதமான வீர்யம்) |
| 𑌸𑌂𑌭𑍃𑌤𑌮𑍍 | உண்டாயிற்று (அந்தப்ரஹ்மா) |
| 𑌤𑌾𑌨𑍍 | யஜ்ஞத்துக்கு ஸாதகமான |
| 𑌪𑌶𑍂𑌨𑍍 | பசுக்களையும் |
| 𑌵𑌾𑌯𑌵𑍍𑌯𑌾𑌨𑍍 | வாயுமார்க்கத்தில் ஸஞ்சரிக்கிற பக்ஷிகளையும் |
| 𑌆𑌰𑌣𑍍𑌯𑌾𑌨𑍍 | காட்டில் ஸஞ்சரிக்கிற ம்ருகங்களையும் |
| 𑌚𑌕𑍍𑌰𑍇 | ஸ்ருஷ்டித்தார் |
| 𑌯𑍇 | எந்த |
| 𑌗𑍍𑌰𑌾𑌮𑍍𑌯𑌾𑌃 | கிராமத்திலிருக்கிற ம்ருகங்களுண்டோ? |
| 𑌤𑌾𑌂𑌶𑍍𑌚 | அவைகளையும் |
| 𑌚𑌕𑍍𑌰𑍇 | ஸ்ருஷ்டித்தார் |

விசி—தன்னுடைய ஸகலசரீரத்தையும்அநிருத்தநாராயணனுகிறஅக்நியில்ப்ராணவத்தைஅநுஸந்தித்துக்கொண்டுஹோமம்செய்தவனுய் (பரமாத்மாவினிடத்தில் தன்னை ஸமர்ப்பணம் செய்தவனுய்) தேவர்கள் செய்த ஹோமத்துக்கு ஸாதநமாயிருக்கிற சதுர்முகப்ரஹ்மாவினிடத்திலிருந்து தயிரும் நெய்யும் உண்டாயிற்று ப்ருஷதாஜ்யமாவது—ஜகத் ஸ்ருஷ்டிக்குக் காரணமான வீர்யம் அந்த வீர்யஸ்ருஷ்டியாகிய ஸூக்ஷ்மஸ்ருஷ்டியும்சதுர்முகப்ரஹ்மா தானேபகவத் கடாக்ஷத்தினுல்செய்தனனென்கிறது. அநந்தரத்தில்

யாகத்துக்கு ஸாதகமாகிய தயிர்நெய்களைக் கொடுக்கிற பசுக்களை ஸ்ருஷ்டித்தார். வாயு ஸஞ்சாரத்துக்கு யோக்யமான ஆகாசத்தில் ஸஞ்சரிக்கிற பக்ஷிகளையும், காட்டில் ஸஞ்சரிக்கிற புலி கரடி முதலிய ஜந்துக்களையும் ஸ்ருஷ்டித்தார். ஊர்களிலும்க்ருஹங்களிலும் ஸஞ்சரிக்கிற பூனைமுதலியவைகளையும் ஸ்ருஷ்டித்தார்.

வித்—ஸர்வஹுத:-ஸகலபதார்த்தங்களின் ஸ்வரூபமாயிருக்கிறபரமாத்மாஎந்த யாகத்தில்அழைக்கப்படுகிறாரோ? அந்த யாகத்துக்கு ஸர்வஹுத் என்று பெயர் பரமாத்மாவைக் குறித்து ஹோமம் செய்யப்படுகிற அந்த மாநஸயஜ்ஞத்தில் நின்றும் தயிர் நெய் முதலிய போக்யவஸ்துக்கள் உண்டாயிற்று. வாயுவை தேவதையாகவுடைய லோகப்ரஸித்தமான பசுக்களை விராட்புருஷன் உண்டாக்கினார். அப்படியே காட்டில் ஸஞ்சரிக்கிற இரண்டு குளம்புகளையுடைய ம்ருகங்களையும் க்ராமங்களில் ஸஞ்சரிக்கிற குதிரை முதலியவைகளையும் ஸ்ருஷ்டித்தார். பசுக்களுக்கு அந்தரிக்ஷம் தேவதையாயிருக்க வாயுதேவதையென்று சொல்லுகிறது—பசுக்களுக்கு தேவதையாகிய அந்தரிக்ஷத்துக்கு வாயுதேவதையாகையால் வாயுவை பசுக்களுக்கு தேவதையென்கிறது.

மத்—யஜ்ஞனென்று பெயரையுடைய பரமாத்மாவினிடத்திலிருந்து யஜ்ஞத்துக்கு அங்கமாகியப்ராயணீயம்உதயநீயம்முதலிய ஹோமங்கள் உண்டாயின. "ஸம்ப்ருதம்" என்றால் யஜ்ஞத்துக்கு வேண்டிய ஸாமக்ரிகள். அவைகள் தயிர் நெய் முதலியவைகள். அவைகளு முண்டாயின. அந்த ஸ்ரீமஹாவிஷ்ணு ப்ரஹ்மாமுதலிய தேவர்களுக்காக வாயுவை தேவதையாகவுடைய ப்ரஸித்தமான ஸகலவிதபசுக்களையும், காட்டில் ஸஞ்சரிக்கிற பன்றிமுதலியவைகளையும்,க்ராமத்தில் ஸஞ்சரிக்கிற ஆடுமுதலிய ம்ருகங்களையும் ஸ்ருஷ்டித்தார்.

தஸ்மா᳚த்³யஜ்ஞாத்ஸ᳚ர்வஹு॒த꞉ । ருச॒ஸ்ஸாமா᳚நி ஜஜ்ஞிரே ।
ச²ந்தா³ꣳ॑ஸி ஜஜ்ஞிரே॒ தஸ்மா᳚த் । யஜு॒ஸ்தஸ்மா᳚த³ஜாயத ॥ ௧0 ॥

ஸர்வஹுத꞉ — (தன்சரீரத்தை)யெல்லாம் ஹோமம் செய்யப்பட்ட

தஸ்மாத் — அப்படி ப்ரஸித்தமான

யஜ்ஞாத் — யஜ்ஞத்துக்கு ஸாதகமாகிய சதுர்

| | |
|---|---|
| | முகப்ரஹ்மாவினிடத்திலிருந்து |
| ருசஃ | ருக்வேதங்களும் |
| ஸாமாநி | ஸாமவேதங்களும் |
| ஜஜ்ஞிரெ | உண்டாயின |
| தஸ்மாத் | அந்தப்ப்ரஹ்மாவினிடத்திலிருந்து |
| ச²ந்தா³ம்ஸி | சந்தஸ்ஸுக்கள் |
| ஜஜ்ஞிரெ | உண்டாயின |
| தஸ்மாத் | அந்தப்ப்ரஹ்மாவினிடத்திலிருந்து |
| யஜுஃ | யஜுர்வேதம் |
| அஜாயத | உண்டாயிற்று |

விசி—யஜ்ஞத்தில் தேவர்களால் பசுவாகபாவிக்கப்பட்டு அநிருத்தாக்நியில் ஹோமம் பண்ணப்பட்ட அந்தசதுர்முகப்ரஹ்மாவினிடத்திலிருந்து ருக்வேதம்,யஜுர்வேதம்,ஸாமவேதம், த்ரிஷ்டுப் முதலிய சந்தஸ்ஸு இவைகளுண்டாயின. "யோப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோவை வேதாம்சப்ரஹிணோதிதஸ்மை" என்று ஸ்ரீமந்நாராயணன் சதுர்முகப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்து அவருக்கு வேதங்களையும் உபதேசித்தார் என்றுசொல்லியபடி பரமாத்மாவினால் உபதேசிக்கப்பட்ட வேதங்களை ப்ரஹ்மாப்ரகாசிப்பித்தார் என்று தாத்பர்யம்.

வித்—சந்தாம்ஸி - காயத்ரீமுதலியவை.மிகுந்ததுஸ்பஷ்டம்.

மத்—ஸர்வயஜ்ஞபோக்தாவானஸ்ரீமஹாவிஷ்ணுவினிடத்திலிருந்து ருக்வேதத்துக்கு அபிமானிகளானதேவதைகளும்ஸாமவேதத்துக்குஅபிமானிகளான தேவதைகளும் யஜுர்வேதத்துக்கு அபிமானிகளான தேவதைகளும் உண்டாயின.முன்புள்ளவேதங்களே ப்ரகாசத்தை யடைந்தனவென்று பொருள்.

தஸ்மாத³ச்வா அஜாயந்த | யெகெசொப⁴யாத³தஃ |
கா³வோஹ ஜஜ்ஞிரெ தஸ்மாத் | தஸ்மாஜ்ஜாதா அஜாவயஃ || ௯க||

| | |
|---|---|
| தஸ்மாத் | அந்த சதுர்முக ப்ரஹ்மாவினிடத்திலிருந்து |
| அச்வாஃ | குதிரைகள் |
| அஜாயந்த | உண்டாயின |

| | |
|---|---|
| 𑌯𑍇𑌕𑍇𑌚 | ஒருபக்கத்திற் பற்களையுடைய பசுமுதலானவைகளும் |
| 𑌉𑌭𑌯𑌾𑌦𑌤𑌃 | இரண்டுபக்கத்திற் பற்களையுடைய கழுதைமுதலியவைகளும் |
| 𑌗𑌾𑌵𑌃 | (யஜ்ஞத்துக்கு உபயோகியான)பசுக்களும் |
| 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | அந்தப்ரஹ்மாவினிடத்திலிருந்து |
| 𑌜𑌜𑍍𑌞𑌿𑌰𑍇 | உண்டாயின |
| 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | அந்தப்ரஹ்மாவினிடத்திலிருந்து |
| 𑌅𑌜𑌾𑌃 | ஆடுகளும் |
| 𑌅𑌵𑌯𑌃 | பக்ஷிகளும் |
| 𑌜𑌾𑌤𑌾𑌃 | உண்டாயின |

விசி—குதிரைகளும்ஒருபக்கத்திற்பற்களையுடையபசுக்களும்இரண்டுபக்கத்திலும் பற்களையுடைய கழுதை முதலிய ம்ருகங்களும் யஜ்ஞத்தில் எந்தபசுக்களின் தயிர்பால் உபயோகிக்கிறதோ? அந்த பசுக்களும் ஆடுகளும் கருடன்முதலிய பக்ஷிகளும் ப்ரஹ்மாவினிடத்திலிருந்து உண்டாயின.

வித்—இரண்டு பக்கத்திலும்பற்களையுடைய கழுதைமுதலியவைகளும், கோவும், ஆடும், பக்ஷிகளும், குதிரையும் உண்டாயின.

மத்—அந்தஸ்ரீமஹாவிஷ்ணுவினிடத்திலிருந்துகுதிரைகளும், கீழும்மேலும் பற்களையுடைய மநுஷ்யர் முதலியவைகளும், பசுக்களும், ஆடுகளும், உண்டாயின. "ஆவய:" என்று பதச்சேதம். கம்பளி எந்த ஜந்துக்களின் மயிர்களினுலுண்டாகிறதோ ? அந்த ம்ருகங்களும் உண்டாயின.

𑌯𑌤𑍍𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌵𑍍𑌯𑌦𑌧𑍁𑌃 । 𑌕𑌤𑌿𑌧𑌾 𑌵𑍍𑌯𑌕𑌲𑍍𑌪𑌯𑌨𑍍 ।
𑌮𑍁𑌖𑌂 𑌕𑌿𑌮𑌸𑍍𑌯 𑌕𑍌 𑌬𑌾𑌹𑍂 । 𑌕𑌾𑌵𑍂𑌰𑍂 𑌪𑌾𑌦𑌾𑌵𑍁𑌚𑍍𑌯𑍇𑌤𑍇 ॥

| | |
|---|---|
| 𑌯𑌤𑍍 | எப்பொழுது |
| 𑌪𑍁𑌰𑍁𑌷𑌮𑍍 | சதுர்முகப்ரஹ்மாவை |
| 𑌵𑍍𑌯𑌦𑌧𑍁𑌃 | (பசுவாகச்) செய்தார்களோ ?(அப்பொழுது) |
| 𑌕𑌤𑌿𑌧𑌾 | எத்தனை ப்ரகாரமாக |

| | |
|---|---|
| வ்யகல்பயந் | கல்பித்தார்கள் |
| அஸ்ய | இந்த ப்ரஹ்மாவினுடைய |
| முகம் | முகமானது |
| கிம் | எதுவாக |
| ஆஸீத் | ஆயிற்று |
| பாஹூ | கைகள் |
| கௌ | யார்களாக |
| உச்யேதே | சொல்லப்படுகின்றன |
| ஊரூ | துடைகள் |
| கௌ | யார்களாக |
| உச்யேதே | சொல்லப்படுகின்றன |
| பாதௌ | திருவடிகள் |
| கௌ | யார்களாக |
| உச்யேதே | சொல்லப்படுகின்றன |

விசி—யஜ்ஞத்துக்குக்கர்த்தாக்களான ப்ராஹ்மணர்முதலியவர்களின் ஸ்ருஸ்டியை இனி சொல்லுகிறது. அதைப்ரச்நோத்தரரூபமாகச் சொல்லுகைக்காக முதலில் ப்ரஶ்நம் பண்ணுகிறார்.—தேவர்களான நித்யஸூரிகள் மாநஸயஜ்ஞத்தில் ப்ரஹ்மாவைப் பசுவாகக் கற்பித்தபோது ப்ரஹ்மாவினுடைய அவயவங்கள் எத்தனை விதமாகக் கற்பிக்கப்பட்டன. எந்த எந்த அவயவங்களில் நின்றும் எந்த எந்த பதார்த்தங்கள் ஸ்ருஷ்டிக்கப்பட்டனவென்று ப்ரஶ்நம் செய்து இனி விசேஷமாகக் கேட்கப்படுகிறது. முகம் எதுவாகவாயிற்று. கைகள், துடைகள், திருவடிகள், இவைகள் யாராகவானார்கள். முகம், கை, துடை, திருவடி, இந்த அவயவங்களில் நின்றும் யாரார் உண்டானார்களென்று ப்ரஶ்நத்தின் தாத்பர்யம்.

வித்.—ப்ரஶ்நோத்தர ரூபமாக ப்ரஹ்மாதி ஸ்ருஷ்டிகளைச் சொல்லுகைக்காக முதலில் ப்ரஶ்நத்தைச் சொல்லுகிறது—விராட்புருஷனை தேவர்கள் தங்கள் ஸங்கல்பத்தினால் உண்டுபண்ணினபொழுது எத்தனைவிதமாகச் செய்தார்கள். இனி ஒவ்வொரு அவயவங்களையும் பிரித்துக் கேட்கிறது. முகம், கை, துடை, கால் இவைகளில் நின்றும் யாரார் உண்டானார்கள்.

மத்.—ஜ்ஞானவான்கள் ஸ்ரீமஹாவிஷ்ணுவைத் தாங்கள் செய்யப்போகிற யஜ்ஞத்தில் ஆராதிக்கத்தகுந்தவராக தியானித்த போது எந்த எந்த அவயவங்களை எந்த எந்த ஜாதிக்கு உத்பாதகங்களென்று தியானித்தார்கள். முகம், கை, துடை, கால் இந்த அவயவங்கள் எந்தெந்த ஜாதிக்கு உத்பாதகங்களாக ஆயின.

𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍋𑌽𑌸𑍍𑌯 𑌮𑍁𑌖𑌮𑌾𑌸𑍀𑌤𑍍 । 𑌬𑌾𑌹𑍂 𑌰𑌾𑌜𑌨𑍍𑌯𑌃 𑌕𑍃𑌤𑌃 ।
𑌊𑌰𑍂 𑌤𑌦𑌸𑍍𑌯 𑌯𑌦𑍍𑌵𑍈𑌶𑍍𑌯𑌃 । 𑌪𑌦𑍍𑌭𑍍𑌯𑌾𑌗𑍍𑌂 𑌶𑍂𑌦𑍍𑌰𑍋 𑌅𑌜𑌾𑌯𑌤 ॥

| | |
|---|---|
| 𑌅𑌸𑍍𑌯 | இந்த சதுர்முகப்ரஹ்மாவினுடைய |
| 𑌮𑍁𑌖𑌂 | முகமானது |
| 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌃 | ப்ராஹ்மணனாக |
| 𑌆𑌸𑍀𑌤𑍍 | ஆயிற்று |
| 𑌬𑌾𑌹𑍂 | திருக்கைகள் |
| 𑌰𑌾𑌜𑌨𑍍𑌯𑌃 | க்ஷத்திரியனாக |
| 𑌕𑍃𑌤𑌃 | செய்யப்பட்டது |
| 𑌊𑌰𑍂 | துடை |
| 𑌤𑌤𑍍 | அப்பொழுது |
| 𑌵𑍈𑌶𑍍𑌯𑌃 | வைஶ்யனாக ஆயிற்று |
| 𑌪𑌦𑍍𑌭𑍍𑌯𑌾𑌂 | திருவடிகளில்நின்றும் |
| 𑌶𑍂𑌦𑍍𑌰𑌃 | சூத்திரன் |
| 𑌅𑌜𑌾𑌯𑌤 | உண்டானான் |

விசி.—உத்தரம் சொல்லுகிறது. இந்த ப்ரஹ்மாவினுடைய முகம் ப்ராஹ்மணனாயிற்று. என்றால் ப்ராஹ்மணன் இவருடைய திருமுகத்தில் நின்றும் உண்டானான் என்றர்த்தம். இப்படியே மேல் இடங்களிலும் திருக்கை திருத்துடை திருவடிகளிலிருந்து கிரமமாக க்ஷத்திரியன், வைஶ்யன், சூத்திரன், இவர்கள் உண்டானார்கள் என்று அர்த்தம் சொல்லவேணும். சதுர்முகனை சரீரமாகவுடைய அநிருத்தநாராயணன் தன்னுடைய அவயவங்களிலிருந்து இவர்களை ஸ்ருஷ்டித்தார்.

வித்.—விராட் புருஷனிடத்திலிருந்து ப்ராஹ்மணாதி ஜாதியினுத்பத்தியைச் சொல்லுகிறது. விராட்புருஷனுடைய முகம்கை

துடை கால் இவ்வவயவங்களில்நின்றும்ப்ராஹ்மணன்க்ஷத்திரியன் வைஸ்யன் சூத்திரன் இவர்கள் ஸ்ருஸ்டிக்கப்பட்டார்கள். ஏழாவது காண்டத்தில் ப்ராஹ்மணாதி வர்ணங்களினுத்பத்தி இவ்விதமாகவே சொல்லியிருக்கிறபடியால் இங்குள்ள ப்ரச்நோத்தர வாக்கியங்களுக்கு இதே அர்த்தமென்று கொள்ளவேணும்.

மத்.—புருஷனென்கிற பெயரையுடைய இந்த ஸ்ரீமஹாவிஷ்ணுவினுடைய முகத்தில் நின்றும் ப்ராஹ்மணஜாதிக்கு அபிமானியான ப்ரஹ்மாவும் ப்ராஹ்மணஜாதியும் உண்டானார்கள். கைகளில் நின்றும்க்ஷத்திரியஜாதிக்கு அபிமானியான ஸ்வாயம்புவ மநுவும் க்ஷத்திரிய ஜாதியும் உண்டானார்கள். துடையிலிருந்து வைஸ்யஜாதிக்குஅபிமானியான வஸுவும் வாஸ்துஎன்கிற தேவதையும் வைஸ்ய ஜாதியும் உண்டானார்கள். காலிலிருந்து சூத்திரஜாதிக்கு அபிமானியான அஸ்விநி தேவதையும் க்ருத்யை என்கிற தேவதையும் சூத்திரஜாதியும் உண்டானார்கள்.

𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌾 𑌮𑌨𑌸𑍋 𑌜𑌾𑌤𑌃 । 𑌚𑌕𑍍𑌷𑍋𑌃 𑌸𑍂𑌰𑍍𑌯𑍋 𑌅𑌜𑌾𑌯𑌤 ।
𑌮𑍁𑌖𑌾𑌦𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌶𑍍𑌚𑌾𑌗𑍍𑌨𑌿𑌶𑍍𑌚 । 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌦𑍍𑌵𑌾𑌯𑍁𑌰𑌜𑌾𑌯𑌤 ॥௧௪॥

| | |
|---|---|
| 𑌮𑌨𑌸𑌃 | மனதில்நின்றும் |
| 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌾𑌃 | சந்திரன் |
| 𑌜𑌾𑌤𑌃 | உண்டானான் |
| 𑌚𑌕𑍍𑌷𑍋𑌃 | கண்ணில்நின்றும் |
| 𑌸𑍂𑌰𑍍𑌯𑌃 | ஸூர்யன் |
| 𑌅𑌜𑌾𑌯𑌤 | உண்டானான் |
| 𑌮𑍁𑌖𑌾𑌤𑍍 | முகத்தில்நின்றும் |
| 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌶𑍍𑌚 | இந்திரனும் |
| 𑌅𑌗𑍍𑌨𑌿𑌶𑍍𑌚 | அக்நியும் (உண்டானார்கள்) |
| 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌤𑍍 | ப்ராணனிடத்தில் நின்றும் |
| 𑌵𑌾𑌯𑍁𑌃 | வாயுவானவன் |
| 𑌅𑌜𑌾𑌯𑌤 | உண்டானான் |

விசி.—ஸர்வலோகத்துக்கும் உபகாரமான ஸ்ருஷ்டியைச் சொல்லுகிறது. அநிருத்தநாராயணனுடைய சரீரரூபியான சதுர்முகப்ரஹ்மாவினுடைய மனதில் நின்றும் லோகத்திலெல்லாருக்

ரும் ஸந்தோஷத்தை யுண்டுபண்ணுகிற சந்திரன் உண்டானான். கண்ணிலிருந்து லோகத்தி னிருளைப் போக்கி ஸமஸ்த வஸ்துக்களையும் ப்ரகாசிப்பிக்கிற ஸூர்யன் உண்டானான். முகத்திலிருந்து இந்திரனும் அக்நியும் உண்டானார்கள். ப்ராணனில் நின்றும் ஸர்வ ப்ராணிகளுடைய ஜீவனத்துக்கு ஹேதுவாகிய வாயு உண்டானான்.

வித்.—தயிர்முதலிய த்ரவ்யங்கள், கோமுதலிய பசுக்கள், ருக்குமுதலிய வேதங்கள், ப்ராஹ்மணர்முதலிய மநுஷ்யர்கள், இவைகள் விராட்புருஷனிடத்தில் நின்றும் உண்டானாற்போல சந்திரன் முதலிய தேவர்களும் அவரிடத்திலிருந்தே உண்டானார்கள்.

மத்.—ஸ்ரீ மஹாவிஷ்ணுவினுடைய மனதிலிருந்து சந்திரனும், கண்ணிலிருநது பன்னிரண்டு ஆதித்யர்களிலொருவனான விவஸ்வான் என்று பெயரையுடைய ஸூர்யனும், முகத்திலிருந்து இந்திரனும், வைச்வாநரன் என்று பெயரையுடைய அக்நியும், ப்ராணனிடத்திலிருந்து பிரதான வாயுவும் உணடானார்கள்.

𑌨𑌾𑌭𑍍𑌯𑌾 𑌆𑌸𑍀𑌦𑌨𑍍𑌤𑌰𑌿𑌕𑍍𑌷𑌮𑍍। 𑌶𑍀𑌰𑍍𑌷𑍍𑌣𑍋 𑌦𑍍𑌯𑍌𑌃 𑌸𑌮𑌵𑌰𑍍𑌤𑌤।
𑌪𑌦𑍍𑌭𑍍𑌯𑌾𑌂 𑌭𑍂𑌮𑌿𑌰𑍍𑌦𑌿𑌶𑌃 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌾𑌤𑍍। 𑌤𑌥𑌾 𑌲𑍋𑌕𑌾𑌁 𑌅𑌕𑌲𑍍𑌪𑌯𑌨𑍍 ॥

| | |
|---|---|
| 𑌨𑌾𑌭𑍍𑌯𑌾𑌃 | கொப்பூழில்நின்றும் |
| 𑌅𑌨𑍍𑌤𑌰𑌿𑌕𑍍𑌷𑌮𑍍 | ஆகாசமானது |
| 𑌆𑌸𑍀𑌤𑍍 | உண்டாயிற்று |
| 𑌶𑍀𑌰𑍍𑌷𑍍𑌣𑌃 | சிரஸ்ஸில் நின்றும் |
| 𑌦𑍍𑌯𑍌𑌃 | ஸ்வர்க்கலோகமானது |
| 𑌸𑌮𑌵𑌰𑍍𑌤𑌤 | செவ்வையா யுண்டாயிருந்தது |
| 𑌪𑌦𑍍𑌭𑍍𑌯𑌾𑌂 | கால்களில் நின்றும் |
| 𑌭𑍂𑌮𑌿𑌃 | பூலோகமானது |
| 𑌆𑌸𑍀𑌤𑍍 | உண்டாயிற்று |
| 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌾𑌤𑍍 | காதில்நின்றும் |
| 𑌦𑌿𑌶𑌃 | திக்குகள் |
| 𑌆𑌸𑌨𑍍 | உண்டாயின |
| 𑌤𑌥𑌾 | அப்படியே |
| 𑌲𑍋𑌕𑌾𑌨𑍍 | லோகங்களை |
| 𑌅𑌕𑌲𑍍𑌪𑌯𑌨𑍍 | உண்டுபண்ணினார் |

"அகல்பயந்" என்று பஹுவசநமாயிருப்பது. சாந்தஸம் என்றுவது சொல்லவேணும். இவ்விதமாக சதுர்முகப்ரஹ்மாவைக்கொண்டு விஷ்வக்ஸேநர் முதலிய நித்யஸூரிகள் உலகத்தை ஸ்ருஷ்டித்தார்கள் என்றர்த்தம் என்றுவது சொல்லவேணும்.

விசி.—அநிருத்த நாராயணனுடைய சரீரரூபியான சதுர்முகப்ரஹ்மாவினுடைய நாபியிலிருந்து ஆகாசமும், சிரஸ்ஸூக்களிலிருந்து ஸ்வர்க்கலோகமும் உண்டாயின. ஸ்வர்க்கலோகத்தைச்சொன்னது ஸ்வர்க்கலோகம் முதல் ஸத்யலோகம் வரையிலும் மேல்பாகத்திலிருக்கிற எல்லா லோகங்களுக்கும் உபலக்ஷணம். மேல் லோகங்கள் உண்டாயிற்றென்றர்த்தம். திருவடிகளிலிருந்து பூலோகமுண்டாயிற்று. இங்கும் பூலோகத்தைச் சொன்னது பூலோகம் முதல் பாதாளம் வரையிலும் கீழ்பாகத்திலுள்ள லோகங்களுக்கு உபலக்ஷணம். கீழ்லோகங்களெல்லாம் திருவடிகளிலிருந்து உண்டாயிற்றென்று அர்த்தம். காதில்நின்றும் திக்குகள் உண்டாயின. அப்படியே அந்த சதுர்முகப்ரஹ்மா ஸப்தத்வீபங்களினல் பிரிக்கப்பட்டு இருக்கிற லோகங்களையும் ஸ்ருஷ்டித்தார். ப்ருதிவீ, ஜலம், தேஜஸ்ஸூ, வாயு, ஆகாசம், அஹங்காரம், மஹத், ஆகிய ஏழு தத்வங்களினல் சூழப்பட்டிருக்கிற இந்த ப்ரஹ்மாண்டத்தையும், இதுபோலவே யிருக்கிற அநந்தமான ப்ரஹ்மாண்டங்களையும் பரவாஸுதேவன் ஸ்ருஷ்டித்தார். அண்டத்துக்கு உள்ளிருக்கிற ஸமஸ்தலோகங்களையும் அநிருத்த நாராயணனுடைய சரீரரூபியான சதுர்முகப்ரஹ்மா ஸ்ருஷ்டித்தார் என்று தாத்பர்யம்.

வித்.—இந்திரன்முதலிய தேவர்கள் விராட்புருஷனிடத்திலிருந்து எப்படி உண்டானர்களோ? அப்படியே ப்ராணன் இந்த்ரியம்முதலிய தேவர்கள் அந்தரிக்ஷம் ஸ்வர்க்கம் முதலிய லோகங்களைப்ரஜாபதியினுடைய நாபி முதலிய அவயவங்களில் நின்றும் ஸ்ருஸ்டித்தார்கள்.

மத்.—ஸ்ரீமஹாவிஷ்ணுவினுடைய நாபிகமலத்தில் நின்றும் ஆகாசமும், சிரஸ்ஸில்நின்று ஸ்வர்க்கமும் உண்டாயிற்று. கீழ்லோகம் மேல்லோகம் மத்யலோகம் என்று லோகக்தை மூன்றுகச் சொல்லும்போது அம்மூன்றும் ஸ்ரீமஹாவிஷ்ணுவினுடைய அங்

கங்களில் நின்றும் உண்டாயிற்றென்று சொல்லி, லோகத்தைப் பதினாலாகச் சொல்லும்போது அப்பதினாலு லோகங்களும் அவருடைய அங்கங்களில் நின்றும் உண்டாயிற்றென்று சொல்லுகிறது. "ததாலோகாந்" என்றுதொடங்கி, பாதாளம்முதலியபதினாலு லோகங்களும் பகவானுடைய பாதம் முதலிய அங்கங்களில் நின்றும் உண்டாயினவென்று ஜ்ஞாநவான்கள் தியாநம் செய்தார்கள்.

𑌵𑍇𑌦𑌾𑌹𑌮𑍇𑌤𑌂𑌪𑍁𑌰𑍁𑌷𑌂𑌮𑌹𑌾𑌨𑍍𑌤𑌮𑍍। 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌵𑌰𑍍𑌣𑌂𑌤𑌮𑌸𑌸𑍍𑌤𑍁𑌪𑌾𑌰𑍇 । 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿𑌰𑍂𑌪𑌾𑌣𑌿𑌵𑌿𑌚𑌿𑌤𑍍𑌯𑌧𑍀𑌰𑌃। 𑌨𑌾𑌮𑌾𑌨𑌿𑌕𑍃𑌤𑍍𑌵𑌾𑌽𑌭𑌿𑌵𑌦𑌨𑍍𑌯𑌦𑌾𑌸𑍍𑌤𑍇 ॥௧௬॥

| | |
|---|---|
| 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 | ஸமஸ்தமான |
| 𑌰𑍂𑌪𑌾𑌣𑌿 | சரீரங்களை |
| 𑌵𑌿𑌚𑌿𑌤𑍍𑌯 | உண்டுபண்ணி |
| 𑌨𑌾𑌮𑌾𑌨𑌿 | பெயர்களை |
| 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 | செய்து |
| 𑌅𑌭𑌿𑌵𑌦𑌨𑍍 | சொல்லாநின்றுகொண்டு |
| 𑌯𑌤𑍍 | எந்தபரமாத்மா |
| 𑌆𑌸𑍍𑌤𑍇 | இருக்கிறாரோ? |
| 𑌤𑌂 | இப்படிப்ரஸித்தராயும் |
| 𑌮𑌹𑌾𑌨𑍍𑌤𑌂 | ச்ரேஷ்டராயும் |
| 𑌤𑌮𑌸𑌃 | மூலப்ரக்ருதிக்கு |
| 𑌪𑌾𑌰𑍇 | அக்கரையில் |
| 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌵𑌰𑍍𑌣𑌂 | ஸூர்யனுடைய காந்திபோன்ற காந்தியை யுடையவராயுமிருக்கிற |
| 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 | புருஷனாயிருக்கிற ச்ரிய:பதியை |
| 𑌧𑍀𑌰𑌃 | புத்திமானாயிருக்கிற |
| 𑌅𑌹𑌂 | அஹம்சப்தத்துக்கு அர்த்தமாயிருக்கிற ஜீவன் (எவன்) |
| 𑌵𑍇𑌦 | அறிகிறானோ? (அவன் முக்தியை யடையக்கடவன்) |

விசி.—எந்த ஸர்வேஶ்வரன், ஜீவாத்மாக்களிடத்தில் தன்னுடைய நிர்ஹேதுகக்ருபையினால் அவர்கள் படுமநர்த்தத்தைப்போக்கி மோக்ஷத்தை யளிக்கைக்காக அவரவர் கர்மாநுகுணமாக அவரவர்களுக்கு சரீரத்தைக்கொடுத்து அவர்களுக்கு தேவனென்றும் மநுஷ்யனென்றும் இது முதலான பெயர்களையிட்டு அப்பெயர்கள் உலகத்தில் ப்ரஸித்தமாம்படி தான் அந்த நாமங்களை யுச்சரித்து, முன்கல்பத்தில் இந்த ஜகத்தெப்படி யிருந்ததோ? அதே ப்ரகாரமாக இந்த கல்பத்திலும் இந்த ஜகத்தை ஸ்ருஷ்டித்தும் அதுக்கோரபத்துவாராமல் ரக்ஷித்துக்கொண்டும் போந்து, ஸத்வம், ரஜஸ்ஸு, தமஸ்ஸு, என்கிற குணத்ரயரூபமாயிருக்கிற தமஸ்ஸு என்று சொல்லப்படுமே மூலப்ரக்ருதிக்கு மேல்பாகத்தில் கேவலம் ஸத்வமயமாயிருக்கிற பரமபதத்தில் ஒரேகாலத்தில் ஆயிரம் ஸூர்யன் உதித்தாற்போல்மஹாதேஜஸ்ஸையுடையவராய் எழுந்தருளியிருக்கிறாரோ? இப்படிப்பட்ட மஹாமஹிமசாலியாய் ஸமஸ்தகல்யாணகுண பரிபூர்ணராய், ஸமஸ்த வஸ்துக்களைக்காட்டிலும் ஶ்ரேஷ்டராய், ஸர்வாந்தர்யாமியாய், ஸகல ஜகத்துக்கும் நியாமகராய், ஆஶ்ரிதருடைய அல்பமான குணத்தையும் அத்யதிகமாய் நினைத்திருக்கிறவராய்,புருஷசப்த வாச்யரானஶ்ரிய:பதியை "அஹம்" என்கிற ப்ரத்யயத்துக்கு விஷயமாயிருக்கிற புருஷன் யாவனொருவன் பரமாத்ம த்யாநத்தில மிருந்த ப்ரீதியையுடையவனாய்க்கொண்டு பக்தியோகத்தினால்ஶ்ரிய:பதியை ஸாக்ஷாத்கரிக்கிறானோ? (அவன் மோக்ஷத்தை யடைவனென்று மேலோடு அந்வயம்.)

வித்.—மேற்சொல்லப்பட்ட விராட்புருஷனுடைய த்யாநம் இங்கு ப்ரதிபாதிக்கப்படுகிறது. இந்த அநுவாகத்தைப் பரம புருஷனுடைய அநுக்ரஹத்தினால் பெற்று நாராயணனென்கிற ருஷி தன்னுடைய த்யாநத்தில் விராட்புருஷனை ஸாக்ஷாத்கரித்தபடியை ச்சொல்லுகிறார். எந்த விராட்புருஷன் தேவனென்றும் மநுஷ்யனென்றும் பசுவென்றும் பக்ஷியென்றும் சொல்லப்படுகிற அநேக ஜீவன்களுடைய சரீரத்தை ஸ்ருஷ்டித்து, அதற்கு தேவன் மநுஷ்யன் பசு பக்ஷி என்கிற பெயரையுமிட்டு, அப்பெயர் உலகத்தில் வழங்கும்படி தானே அதை முதலில் வ்யவஹரித்தவராயிருக்கிறாரோ?அப்படிப்பட்டஸமஸ்தகுணங்களையுடைய ஸூர்யனைப்போல்

ப்ரகாசித்துக்கொண்டிருக்கிற விராட்புருஷனை நான்ஸாக்ஷாத்கரித்தேன். அவர் அஜ்ஞானத்துக்கப்பால் வஸிக்கிறார். ஆகையால் ஒரு குருவை யாஶ்ரயியாமலும் சாஸ்த்ரத்தை யதிகரியாமலு மிருக்கிற மூடர்களுக்குக் கண்டனுபவிக்கப் போகிறதில்லை.

இந்த மந்த்ரத்துக்கும் மேல் மந்த்ரத்துக்கும் மத்வபாஷ்யம் கிடைக்கவில்லை.

யாதாவுரஸ்தாதுதாஜஹார | ஶக்ரப்ரவித்வான் ப்ரதிஶஶ்சதஸ்ரஃ| தமேவம்வித்வானம்ருத இஹ பவதி | நாந்யஃபந்தா அயனாய வித்யதே ||௧௭||

| | |
|---|---|
| யம் | எந்த ஸ்ரீயஃபதியை |
| புரஸ்தாத் | முன்னே |
| தாதா | ப்ரஹ்மாவானவர் |
| உதாஜஹார | உதஹரித்தாரோ? (த்யானம்செய்தாரோ) |
| ப்ரவித்வான் | இவனைவிசேஷமாய் பரமாத்மாவென்றறிந்த |
| ஶக்ரஃ | இந்திரன் |
| புரஸ்தாத் | முன்னே |
| யம் | எந்த ஸ்ரீயஃபதியை |
| உதாஜஹார | உதஹரித்தாரோ? (த்யானம்செய்தாரோ |
| சதஸ்ரஃ | (கிழக்குமுதலிய) நாலுதிக்குகளும்(நாலுதிக்குகளிலுள்ளருஷிகளும்) |
| ப்ரதிஶஃ | (அக்நிமூலைமுதலிய) நாலு விதிக்குக்களும்(விதிக்குக்களிலுள்ளருஷிகளும் |
| புரஸ்தாத் | முன்னே |
| யம் | எந்த ஸ்ரீயஃபதியை (உபாஸநம் செய்தார்களோ) |
| தம் | அந்த ஸ்ரீயஃபதியை |

| | |
|---|---|
| 𑌸𑌏𑌵𑌂 | இந்தப்ரகாரம் (எவன்) |
| 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 | அறிகிறானோ? (அவன்) |
| 𑌇𑌹 | இந்த ஜந்மத்திலேயே |
| 𑌅𑌮𑍃𑌤𑌃 | முக்தனாக |
| 𑌭𑌵𑌤𑌿 | ஆகிறான் |
| 𑌅𑌯𑌨𑌾𑌯 | மோக்ஷத்தின் பொருட்டு |
| 𑌅𑌨𑍍𑌯𑌃 | வேறொரு |
| 𑌪𑌨𑍍𑌥𑌾𑌃 | வழியானது |
| 𑌨𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 | இல்லை |

விசி.—இவ்வளவு மஹிமையையுடையஸ்ரீயஃபதியை இதற்கு முன் யாராவது ஆராதித்தார்களோவென்னில் ஆராதித்தவர்கள் அனேகர் உண்டென்று இதில் சொல்லுகிறது. சதுர்முகப்ரஹ்மா இந்த ஜகத்தை ஸ்ருஷ்டிக்கைக்கு முன்பு ஸ்ரீமந்நாராயணனை த்யாநம்செய்தார். நூறு அஸ்வமேதயாகத்தைச் செய்து இப்பொழுது இந்த்ர பதவியை யடைந்து த்ரிலோகாதிபதியா யிருக்கிற இந்திரனும் இவரையே ஸமஸ்தகல்யாணகுண பரிபூர்ணரான பரமாத்மாவென்று த்யாநம் செய்து அந்த பதவியை யடைந்தார். மேல்மந்வந்தரத்தில் இந்த்ரபதவியை யடைந்து த்ரிலோகாதிபதியாகைக்காக பலிசக்ரவர்த்தியும் ஸ்ரீயஃபதியை பரப்ரஹ்மமென்று உபாஸநம்செய்தார். கிழக்குமுதலான திக்குக்களைச் சொல்லுகிற "சக்ரஃ" என்கிற பதமும் அக்நிகோணம் முதலானமூலைகளைச்சொல்லுகிற "ப்ரதிசஃ" என்கிற பதமும் அந்தந்த திக்குக்களிலுள்ள இந்திரன் அக்நிமுதலான திக்பாலகர்களையும், ப்ருகு, மரீசி, கர்தமர், தக்ஷர், வஸிஷ்டர், நாரதர், வால்மீகி, பராசரர், வ்யாஸர், சுகர், சௌனகர், யாஜ்ஞவல்க்யர், ஆபஸ்தம்பர், முதலிய ருஷிகளையும் சொல்லுகிறது. இவர்களெல்லாரும் ஸ்ரீயஃபதியை யாராதித்து மேன்மையையடைந்தார்கள். இப்படி அனேகம்ஜ்ஞாநாதிகர்களால் உபாஸிக்கப்பட்டிருக்கிற ஸ்ரீயஃபதியானஸ்ரீமந்நாராயணனை கீழ்ச்சொன்ன குணங்களோடு கூடியவராக எவனொருவன் உபாஸிக்கிறானோ? அவன் பகவத்ப்ராப்தியாகிய மோக்ஷத்துக்கு ஸாதகமாகிய பக்தியை யநுஷ்டிக்கும்போதே ஜநநமரணங்களில்லாமலிருக்கிற முக்தனானவன்போல் ஸுகியாயிருப்பன். (அல்லது) இஹ - என்கிறதற்கு இந்த ஸம்ஸாரத்திலேயே என்றர்த்தம். (அல்லது)

இந்த ஜந்மாவஸாநத்தில் முக்தியையடைகிருனென்றர்த்தம். ஸ்ரிய பதியே ரக்ஷகன். அவனே உபாயமும் உபேயமும் என்கிற அத்யவஸாயத்தைக் காட்டிலும் வேறுவிதமான மார்க்கம் மோக்ஷத்துக்குக் கிடையாது. ஸ்ரிய:பதியே உபாயோபேயமென்றிருக்கிறவனுக்கு மோக்ஷம் ஸித்தமென்றும் அப்படி இராதவனுக்கு மோக்ஷம் கிடையாதென்றும் தாத்பர்யம். நிர்விசேஷ சிந்மாத்ரம்ப்ரஹ்மமென்றும் அந்தப்ரஹ்மவிஷயகமான அத்வைத ஜ்ஞாநத்தினுலே முக்தியென்றும் சொல்வதுஸமஸ்தப்ரமாணபாதிதங்களாகையால் ஜீவப்ரஹ்மாத்வைத ஜ்ஞாநம்முதலியவை முக்திக்கு ஸாதகமாக மாட்டாதென்றும் தாத்பர்யம்.

வித்—ப்ரஹ்மாவானவர் இந்தவிராட்புருஷனுடைய ஸ்வரூபத்தை எல்லாருமறிந்து த்யாநிக்கைக்காக ப்ரகாசிப்பித்தார். ப்ரதி சப்சதஸ்ர: - எல்லாதிக்குக்களிலுமுள்ள ப்ராணிகளே, ப்ரவித்வாந் - நன்ருய் அறிந்த, சக்ர: - இந்திரன், இந்திரன் ஸமஸ்தப்ராணிகளுடைய துர்தசையைக் கண்டு அவர்களிடத்தில் தயையையுடையவராய் அவர்களுடைய க்ஷேமத்துக்காக இந்த விராட்புருஷனுடைய ஸ்வரூபத்தை எல்லாருமறியும்படி ப்ரகாசிப்பித்தான். அந்த விராட் புருஷனைக் கீழ் ப்ரதிபாதித்தபடி எவனறிகிருனே? அவன் இந்த ஜந்மத்திலேயே முக்தனுய் விடுவன். எப்பொழுது நான் விராட்புருஷன் என்று ஜீவாத்மஸ்வரூபமும் பரப்ரஹ்மஸ்வரூபமும் ஒன்றென் றறிகிருனே? அப்பொழுது தன் சரீரம் முதலியவைகளில் ஆத்மப்ராந்தி கழிந்து ஜ்ஞாநியானபடியால் முன்புஆத்மாவாக எண்ணியிருந்த சரீரம் அழிந்தாலும் தன்னை அழிந்தவனுக நினைக்கமாட்டான். மோக்ஷத்துக்கு இப்படிப்பட்டவிராட்புருஷனுடைய ஸாக்ஷாத்காரமொழிய வேறு வழி கிடையாது. கர்மம் ஸந்தாநம், தநம் முதலியவைகள் மோக்ஷத்துக்குக் காரணமன்றென்று சொல்லியிருக்கிறபடியால் அத்வைத ஜ்ஞாநமே மோக்ஷத்துக்கு ஸாதகமென்று தாத்பர்யம்.

யஜ்ஞேந யஜ்ஞமயஜந்த தேவா: | தாநி தர்மாணி ப்ரதமாந்யாஸந் | தே ஹ நாகம் மஹிமாந: ஸசந்தே | யத்ர பூர்வே ஸாத்யா: ஸந்தி தேவா: ||

| | |
|---|---|
| தேவா: | நித்யஸூரிகளாகிய தேவர்கள் |
| யஜ்ஞேந | யஜ்ஞத்துக்கு ஸாதகனுயிருக்கிற ப்ரஹ்மாவினுலே |
| யஜ்ஞம் | ஸ்ருஷ்டி ரூபமான யஜ்ஞத்தை |
| அயஜந்த | செய்தார்கள் |
| தாநி | அந்த |
| தர்மாணி | யஜ்ஞம்முதலிய தர்மங்கள் |

| | |
|---|---|
| ப்ரதமாநி | முக்யங்களாக |
| ஆஸந் | ஆயின |
| யத்ர | எந்தபரமபதத்தில் |
| பூர்வே | ப்ராசீநர்களான |
| ஸாத்யா: | ஸாத்யர்களென்று பெயரையுடைய |
| தேவா: | தேவர்கள் |
| ஸந்தி | வாஸம்செய்கிறார்களோ? (அந்த) |
| நாகம் | பரமபதத்தை |
| தே | இவ்விதமாக அநுஸந்திக்கிறவர்கள் |
| மஹிமாந: | மாஹாத்ம்யத்தை யுடையவர்களாய் |
| ஸசந்த | அடைகிறார்கள். |

விசி.—ஸாத்யர் என்று பெயரையுடைய நித்யஸூரிகள் செய்த ஸ்ருஸ்டிரூபமான யஜ்ஞத்தைச் சொல்லிமுடிக்கிறது வேதம். சதுர்முகப்ரஹ்மாவைப் பசுவாகச்செய்து அந்த ஹவிஸ்ஸினால் ஜகத்ஸ்ருஷ்டிரூபமான யஜ்ஞத்தை நித்யஸூரிகள் செய்தார்கள். ப்ரஹ்மாவைக்கொண்டு ஜகத்தை ஸ்ருஷ்டித்தார்கள் என்று தாத்பர்யம். அவர்கள்செய்த இந்த ஸ்ருஷ்டியாகிற யஜ்ஞமானது ஸமஸ்தபுருஷார்த்தங்களுக்கு முபயோகியாகையால் முக்யமாயிருந்தது. இந்த ஜகத்தில் பிறந்து யாகம், தபஸ்ஸு, தாநம், முதலியவைகளைச் செய்தால் தர்மார்த்த காமமோக்ஷங்களாகிய புருஷார்த்தத்தை யடையலாமாகையால் ஸ்ருஷ்டி முக்யமாயிற்று. இதை யார் அர்த்தத்துடன் அநுஸந்திக்கிறார்களோ? அவர்கள்மஹா மஹிமசாலிகளாய் நித்யஸூரிகளாகிய அநந்த கருட விஷ்வக்ஸேநாதிகள் வாஸம்செய்கிற ஸ்ரீவைகுண்டத்தை யடைந்து ஸுகத்தை யநுபவிப்பார்கள்.

வித்.—இந்த அநுவாகத்தினர்த்தத்தைச் சுருக்கமாகச்சொல்லுகிறது இந்த மந்த்ரம். ப்ராணன்முதலிய தேவர்கள் கீழ்ச்சொல்லப்பட்ட மாநஸயஜ்ஞத்தினால் விராட்புருஷனை யாராதித்தார்கள். இவ்விதமாக ஜகத்து விகாரத்தை யடைகைக்குக் காரணமாய் ப்ரஸித்தமாயிருக்கிற முக்யமான பஞ்சபூதங்கள் உண்டாயின. எந்தவிராட்ஸ்வரூபத்தில் பகவத்பக்தியையுடைய பெரியோர்கள் வஸிக்கிறார்களோ? (பகவத்பக்தியைச் செய்து எந்தவிராட் ஸ்வரூபத்தைப்பெரியோர்களடைந்தார்களோ)? அந்த விராட் ஸ்வரூபமாகிய ஸ்வர்க்கத்தை அந்த விராட்ஸ்வரூபத்தை யுபாஸித்தவர்கள் அடைகிறார்கள். இந்த மந்த்ரத்தில் முன்பாதியினால் இந்த அநுவாகத்திற் சொல்லிய ஸ்ருஷ்டி ப்ரகாரமும், பின்பாதியினால்

“வேதாஹம்” என்கிற மந்த்ரத்திற் சொல்லிய பகவதுபாஸநமும் அதின் பலமும் சொல்லப்பட்டது.

மத்.—ஜ்ஞாநவான்கள் கீழ்ச்சொன்ன யாகத்தினால் பகவானை யாராதித்தார்கள். ஆதலால் அவர்கள் இந்த ஜகத்துக்கு ஆதாரமாக ஆனார்கள். இப்படி பகவானை யாராதித்து மஹாமஹிமசாலிகளாய்க்கொண்டு நித்யஸூரிகள் வாஸம்பண்ணுகிறமோக்ஷத்தை யடைந்தார்கள்.

---

ஸ்ரீ

# உத்தராநுவாகம்.

𑌅𑌦𑍍𑌭𑍍𑌯𑌸𑍍𑌸𑌂𑌭𑍂𑌤𑌃 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑍈 𑌰𑌸𑌾𑌚𑍍𑌚। 𑌵𑌿𑌶𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌸𑍍𑌸𑌮𑌵𑌰𑍍𑌤𑌤𑌾𑌧𑌿। 𑌤𑌸𑍍𑌯 𑌤𑍍𑌵𑌷𑍍𑌟𑌾 𑌵𑌿𑌦𑌧𑌦𑍍𑌰𑍂𑌪𑌮𑍇𑌤𑌿। 𑌤𑌤𑍍𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯 𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑌾𑌜𑌾𑌨𑌮𑌗𑍍𑌰𑍇 ॥௧॥

| | |
|---|---|
| 𑌅𑌦𑍍𑌭𑍍𑌯𑌃 | (ப்ரஹ்மாண்டமானது) ஜலத்தில் நின்றும் |
| 𑌸𑌂𑌭𑍂𑌤𑌃 | உண்டாயிற்று |
| 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑍈 | பூமியினுடைய ஸம்பந்தியாகிய |
| 𑌰𑌸𑌾𑌤𑍍 | அந்நரஸத்தில் நின்றும் |
| 𑌸𑌂𑌭𑍂𑌤𑌃 | (சராசரரூபமாகிய ப்ரபஞ்சம்) உண்டாயிற்று |
| 𑌵𑌿𑌶𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 | ஸர்வேஸ்வரனிடத்தில் நின்றும் |
| 𑌅𑌧𑌿𑌸𑌮𑌵𑌰𑍍𑌤𑌤 | விலக்ஷணமாக உண்டாயிற்று |
| 𑌤𑍍𑌵𑌷𑍍𑌟𑌾 | ஸர்வேஸ்வரன் |
| 𑌤𑌸𑍍𑌯 | அந்தப்ரபஞ்சத்தினுடைய |
| 𑌰𑍂𑌪𑌮𑍍 | ஸ்வரூபத்தை |
| 𑌵𑌿𑌦𑌧𑌤𑍍 | தரித்தவனாய் |
| 𑌏𑌤𑌿 | வ்யாபிக்கிறான் |
| 𑌤𑌤𑍍 | ஆகையினால் |
| 𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑍍 | ஜகத்து |
| 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯 | ஸர்வேஸ்வரனுக்கு (சேஷமென்று) |
| 𑌅𑌗𑍍𑌰𑍇 | முன்னமே |
| 𑌆𑌜𑌾𑌨𑌮𑍍 | அறிந்தேன் |

விசி.—இந்த ப்ரஹ்மாண்டமானது ஜலத்தில் உண்டாயிற்று. அதிலுள்ள தேவமநுஷ்யாதி ப்ராணிகள் பூமியிலுள்ள அந்நரஸத்தினால் வ்ருத்தியடைந்தார்கள். உண்டாகும்போது தங்கள் தங்கள் கர்மாநுகுணமாக பகவானால் ஸ்ருஷ்டிக்கப்பட்டு உயர்வு தாழ்வு

களை யடைந்தார்கள். பரமாத்மா இதை ஸ்ருஷ்டித்து இதை ஸம்ரக்ஷிக்கைக்காக இதில் அந்தர்யாமியாய் ப்ரவேசித்தார். ஆகையால் இந்த ஜகத்தைப்பரமாத்மாவுக்குசேஷபூதமென்றுநானறிந்தேன்.

வித்.—விராட்என்றுசொல்லப்படும்ப்ரஹ்மாண்டமானதுஜலத்திலும் பூமியிலும் உண்டாயிற்று. இதில் கடினமான பாகம் பூமியும் ம்ருதுவானபாகம் ஜலமுமாய் சேர்ந்து அண்டமாயிற்று. இந்த அண்டம் ஸர்வேஸ்வரனாலுண்டாயிற்று. ஸர்வேஸ்வரனென்பவன் ப்ரஹ்மாண்டத்துக்கு அபிமானி புருஷன். அந்த ஸர்வேஸ்வரன் அண்டத்திலுள்ள லோகங்களை ஸ்ருஷ்டித்து அவைகளில் தான் தேவமநுஷ்யாதிப்ராணிகளாகவானான். சராசரங்களோடு கூடிய இந்த ஜகத்துஸ்ருஷ்டிக்கும்போதே அநேகமாயுண்டாயிற்று.

வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம் | ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத் | தமேவம் வித்வாநம்ருத இஹ பவதி | நாந்ய: பந்தா வித்யதே(அ)யநாய ||௨||

| | |
|---|---|
| ஏதம் | இந்த |
| மஹாந்தம் | பெரியவனாயிருக்கிற |
| ஆதித்யவர்ணம் | ஸூர்யனுடைய காந்திபோன்ற காந்தியையுடைய |
| தமஸ: | மூலப்ரகிருதிக்கு |
| பரஸ்தாத் | அக்கரையிலிருக்கிற |
| புருஷம் | ஸ்ரிய:பதியை |
| அஹம் | நான் |
| வேத | அறிகிறேன் |
| தம் | அந்தஸ்ரிய:பதியை |
| ஏவம் | இந்தப்ரகாரம் |
| வித்வாந் | அறிகிறவன் |
| இஹ | இந்த ஜந்மத்திலே |
| அம்ருத: | முக்தனாக |
| பவதி | ஆகிறான் |
| அயநாய | மோக்ஷத்தின்பொருட்டு |
| அந்ய: | வேறுவிதமான |
| பந்தா: | மார்க்கம் |
| ந வித்யதே | இல்லை |

விசி.—ஸகலஜகத்துக்கும் காரணமாய் ப்ரக்ருதிமண்டலத்துக்கு அப்புறத்தில் சுத்த ஸத்வமயமான ஸ்ரீவைகுண்டத்தில் ஆயிரம் ஸூர்யனோடு ஸமானமாய் ப்ரகாசித்துக்கொண்டிருக்கிற பரம புருஷனை ஸ்ரிய:பதியை நானறிகிறேன் என்று வேதபுருஷன்

சொல்லுகிறான். இப்படியறிந்தவனுக்கு பலம் சொல்லுகிறது மேல். இந்த ஶ்ரியஃபதியை உபாயோபேயமாக எவனறிகிறானோ? அவனிந்த ஜந்மத்திலேயே மோக்ஷத்தையடைவன். ஸித்தோபாயஸ்வரூபமான இந்த ஶ்ரியஃபதியைக் காட்டிலும் மோக்ஷத்துக்கு வேறு உபாயமும் கிடையாது.

வி—இதற்கர்த்தம் முன்னநுவாகத்தில் "வேதாஹமேதம்" என்கிற மந்த்ரத்திற்சொல்லியபடி யறிக.

ப்ரஜாபதிஶ்சரதி கர்பே அந்த:| அஜாயமாநோ பஹுதா விஜாயதே| தஸ்ய தீரா: பரிஜாநந்தி யோநிம் | மரீசீநாம் பதமிச்சந்தி வேதஸ:|| ரு ||

| | |
|---|---|
| ப்ரஜாபதி: | பரமாத்மா |
| கர்பே | உள்ளே |
| அந்த: | அந்தர்யாமியாய் |
| சரதி | ஸஞ்சரிக்கிறார் |
| அஜாயமாந: | உத்பத்தியில்லாதவன் |
| பஹுதா | அநேகப்ரகாரமாய் |
| விஜாயதே | அவதரிக்கிறான் |
| தஸ்ய | அந்த ஶ்ரியஃபதியினுடைய |
| யோநிம் | அவதாரகாரணத்தை |
| தீரா: | புத்திமான்கள் |
| பரிஜாநந்தி | அறிகிறார்கள் (அவர்கள்) |
| வேதஸ: | பரமாத்மாவினுடைய ஸம்பந்தியான |
| மரீசீநாம் | ஸூர்ய கிரணம்போல்ப்ரகாசிக்கிற நித்யஸூரிகளுடைய |
| பதம் | ஸ்தாநத்தை |
| இச்சந்தி | ஆசைப்படுகிறார்கள் |

விசே.—ஸித்தோபாயமான பரமபுருஷன் சேதநர்களுக்குத் தன்னிடத்தில் அத்வேஷத்தையும் ஆபிமுக்யத்தையும் பிறப்பிக்கைக்காக அந்தர்யாமியாயிருக்கிறான். பின்பு, தானிந்த லோகத்திலவதரிக்கைக்கு வேறொரு ப்ரயோஜநமில்லாவிடினும் தன்னுடைய திவ்யமங்கள விக்ரஹத்தை இவர்களுக் கநுபவிப்பிக்கைக்காக நரஸிம்ஹராமக்ருஷ்ணாதி அநேக அவதாரங்களை ப்ரதியுகம் செய்கிறார். இந்த அவதாரங்கள் ஆஶ்ரித ஸம்ரக்ஷணத்துக்காகவென்று ஜ்ஞாநிகளறிகிறார்கள். நித்யஸூரிகள் வஸிக்கிற

பரமபதத்தை ஆசைப்பட்டு அதற்காக ஶ்ரியஃபதியினுடைய அவதார ரஹஸ்யத்தை யறிகிறார்கள்.

வித்—ப்ரஹ்மாண்டத்துக்கபிமாநியான புருஷன் ப்ரஹ்மாண்டத்திற்குள் தேவமநுஷ்யாதி சரீரத்தைப் பரிக்ரஹித்து ஸஞ்சரிக்கிறார். அவருடைய ஸ்வரூபம் ஜ்ஞாநாநந்தஸ்வரூபமாகையால் உத்பத்தியில்லாவிடினும் மாயையை யங்கீகரித்து அநேகரூபமாய் ஜந்மிக்கிறார். அவருடைய வாஸ்தவஸ்வரூபத்தை ஜ்ஞாநிகளறிகிறார்கள். அத்ரிமுதலிய ருஷிகள் இவரை யாராதநம்செய்தே உலகத்தை ஸ்ருஷ்டிக்க ஆசைப்படுகிறார்கள்.

𑌯𑍋 𑌦𑍇𑌵𑍇𑌭𑍍𑌯 𑌆𑌤𑌪𑌤𑌿 । 𑌯𑍋 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌪𑍁𑌰𑍋𑌹𑌿𑌤𑌃 ।
𑌪𑍂𑌰𑍍𑌵𑍋 𑌯𑍋 𑌦𑍇𑌵𑍇𑌭𑍍𑌯𑍋 𑌜𑌾𑌤𑌃 । 𑌨𑌮𑍋 𑌰𑍁𑌚𑌾𑌯 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌯𑍇 ॥

| | |
|---|---|
| 𑌯𑌃 | எந்தஶ்ரியஃபதியானவன் |
| 𑌦𑍇𑌵𑍇𑌭𑍍𑌯𑌃 | நித்யஸூரிகளுக்காக |
| 𑌆𑌤𑌪𑌤𑌿 | (பாபங்களை) நாசம்செய்கிறாரோ? |
| 𑌯𑌃 | எந்த ஶ்ரியஃபதி |
| 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 | நித்யஸூரிகளுக்கு |
| 𑌪𑍁𑌰𑌃 | முன்னே |
| 𑌹𑌿𑌤𑌃 | ஹிதத்தைக்கொடுக்கிறாரோ? |
| 𑌯𑌃 | எவர் |
| 𑌦𑍇𑌵𑍇𑌭𑍍𑌯𑌃 | நித்யஸூரிகளைக்காட்டிலும் |
| 𑌪𑍂𑌰𑍍𑌵𑌃 | முதல்வராகஆனாரோ ?(அப்படிப் பட்ட) |
| 𑌰𑍁𑌚𑌾𑌯 | ப்ரகாசித்துக்கொண்டிருக்கிற |
| 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌯𑍇 | பரப்ரஹ்மஸ்வரூபமான ஶ்ரியஃபதியின்பொருட்டு |
| 𑌨𑌮𑌃 | நமஸ்காரம் |

விசி.—ப்ரபந்நன் கைங்கர்யத்தை ப்ரார்த்திக்கக் கடவன் என்று காட்டுகிறது இந்த மந்த்ரம். எந்த பரமாத்மா நித்யஸூரிகளுக்கு ஸ்வாநுபவ விரோதியான ப்ரதிபந்தகங்களைப் போக்கி ஸ்வாநுபவத்தைக் கொடுத்து அவர்கள் செய்கிற உபசாரங்களைத் தான் முன்னின்று அங்கீகரிக்கிறாரோ? உஜ்வலமான திவ்யமங்கள விக்ரஹத்தையுடைய அந்த பரமாத்மஸ்வரூபத்தின்பொருட்டு நித்யமாகக் கைங்கர்யம் பண்ணக்கடவேன்.

வித்.—எந்த ஸர்வேஶ்வரன் தேவதைகளுடைய ஹ்ருதயத்தில் ப்ரவேசித்து தேவதையாக ப்ரகாசிக்கிறானோ? எவன் ப்ருஹஸ்பதியாயிருக்கிறானோ? எவன் தேவர்களுக்கு மூத்தவனான ப்ரஹ்மாவாயிருக்கிறானோ? அந்த ஸ்வயம்ப்ரகாச ஸ்வரூபமாகிய ஸ்வரூபத்துக்கு நமஸ்காரம்.

𑌰𑍁𑌚𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌂 𑌜𑌨𑌯𑌨𑍍𑌤𑌃। 𑌦𑍇𑌵𑌾 𑌅𑌗𑍍𑌰𑍇 𑌤𑌦𑌬𑍍𑌰𑍁𑌵𑌨𑍍 ।
𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑍈𑌵𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍋 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌤𑌸𑍍𑌯 𑌦𑍇𑌵𑌾 𑌅𑌸𑌨𑍍 𑌵𑌶𑍇 ॥

| | |
|---|---|
| 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌂 | ப்ரப்ரஹ்மத்தினுடைய ஸம்பந்தியான |
| 𑌰𑍁𑌚𑌂 | ப்ரீதியை |
| 𑌜𑌨𑌯𑌨𑍍𑌤𑌃 | உண்டுபண்ணுகிற |
| 𑌦𑍇𑌵𑌾𑌃 | பக்தர்கள் |
| 𑌅𑌗𑍍𑌰𑍇 | [பகவானுடைய] எதிரில் |
| 𑌤𑌤𑍍 | அந்தநமஃஎன்கிறசொல்லை |
| 𑌅𑌬𑍍𑌰𑍁𑌵𑌨𑍍 | சொன்னார்கள் |
| 𑌯𑌸𑍍𑌤𑍁 | எந்த |
| 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌃 | ப்ரஹ்மஸ்வரூபத்தை யறிந்தவன் |
| 𑌏𑌵𑌂 | இவ்விதமாக |
| 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍 | அறிகிறானோ? |
| 𑌤𑌸𑍍𑌯 | அவனுடைய |
| 𑌵𑌶𑍇 | ஸ்வாதீநத்தில் |
| 𑌦𑍇𑌵𑌾𑌃 | ப்ரஹ்மாதி தேவர்கள் |
| 𑌅𑌸𑌨𑍍 | ஆகிறார்கள் |

விசி.—கைங்கர்ய ப்ரார்த்தநையில் சிஷ்டாசாரத்தை காட்டுகிறது இந்தமந்த்ரம். கைங்கர்யப்ரார்த்தனையை விட்டு வேறு ப்ரயோஜநமில்லாத நித்யஸூரிகள் ஶ்ரியஃபதிக்கு எதிரில்நின்று கைங்கர்யத்தை ப்ரார்த்தித்து பகவந்முகோல்லாஸத்தை யுண்டுபண்ணினார்கள். இந்த கைங்கர்யப்ரார்த்தனையை எவனறிகிறானோ? அவனுக்குப்ரஹ்மாதிகளும் ஸ்வாதீநராயிருப்பார்கள்.

வித்—ஸ்ருஷ்டிகாலத்தில் தேவர்கள் ப்ரஹ்மஸ்வரூபத்தை யறிந்து அந்தப்ரஹ்மஸ்வரூபத்தைஸம்போதித்துச்சொன்னார்கள். அதென்னவென்றால்; பரமாத்மாவே! உன்னுடைய ஸ்வரூபத்தை எவனறிகிறானோ? அவன் வசத்தில் ப்ரஹ்மாதிதேவர்கள் இருப்பார்கள். ப்ரஹ்மஜ்ஞாநீதான் பரப்ரஹ்மமாகையால் தானே தேவர்களுக்கு அந்தர்யாமியாகையால் தன்வசத்தில் அவர்கள் இருப்பார்களென்று கருத்து.

𑌹𑍍𑌰𑍀𑌶𑍍𑌚 𑌤𑍇 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌶𑍍𑌚 𑌪𑌤𑍍𑌨𑍍𑌯𑍌 । 𑌅𑌹𑍋𑌰𑌾𑌤𑍍𑌰𑍇 𑌪𑌾𑌰𑍍𑌶𑍍𑌵𑍇 । 𑌨𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌰𑍂𑌪𑌮𑍍 । 𑌅𑌶𑍍𑌵𑌿𑌨𑍌 𑌵𑍍𑌯𑌾𑌤𑍍𑌤𑌮𑍍 । 𑌇𑌷𑍍𑌟𑌂 𑌮𑌨𑌿𑌷𑌾𑌣 । 𑌅𑌮𑍁𑌂 𑌮𑌨𑌿𑌷𑌾𑌣 । 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌮𑌨𑌿𑌷𑌾𑌣 ॥ ௯ ॥

தே - உமக்கு, ஹ்ரீச்ச - பூமிதேவியும், லக்ஷ்மீச்ச - ஸ்ரீமஹாலக்ஷ்மியும், பத்ந்யௌ - பார்யைகள்; (அவர்கள்) அஹோராத்ரே - பகலுமிரவும், பார்ச்வே - பக்கத்திலிருக்கிறார்கள்; ரூபம் - (உம்முடைய) விக்ரஹம், நக்ஷத்ராணி - நக்ஷத்ரம்போலழகாயிருக்கிறது; அச்விநௌ - அச்விநிதேவர்கள் போல், வ்யாத்தம் - (உம்முடைய முகம்) அழகாயிருக்கிறது; இஷ்டம் - இஷ்டத்தை, இஷாண - கொடும்; அமும் - இந்த கைங்கர்யத்தை, இஷாண - கொடும்; ஸர்வம் - எல்லாவற்றையும், இஷாண - கொடும்.

விசி.—லக்ஷ்மியோடு கூடிய நாராயணனுக்கே கைங்கர்யம் செய்யவேணுமென்று சொல்லுகிறது. லக்ஷ்மீஎன்கிறபதத்தோடு கூடியிருக்கிறஹ்ரீஃஎன்கிறபதத்துக்குபூமிதேவி அர்த்தம். ஸ்ரீதேவி பூதேவிகள் ஆகிற இருவரும் உம்முடைய பார்யைகள். இவர்களிருவரும் உம்முடைய பக்கத்திலே எப்போதும் வஸிக்கிறார்கள். உம்முடைய திவ்யமங்களவிக்ரஹம் மிகவுமழகியதாயிருக்கிறது. திருமுகமண்டலமும் மலர்ந்து ஸுந்தரமாயிருக்கிறது. இப்படிப்பட்ட திவ்யமங்கள விக்ரஹத்தோடு கூடிய தேவரீருடைய விஷயத்தில் அடியேன் ப்ரார்த்தித்த கைங்கர்யத்தையும் இன்னும் ஸகலஇஷ்டங்களையும் தந்தருளவேணும்.

விசிஷ்டாத்வைதபாஷ்யம் ஸம்பூர்ணம்.

வித்.—ஹ்ரீஃஎன்று லஜ்ஜைக்கு அபிமாநிதேவதை. லக்ஷ்மீஃ என்று ஐச்வர்யத்துக்கு அபிமாநிதேவதை. இவர்களிருவரும்உமக்கு பார்யைகள் போலிருக்கிறார்கள். பகலுமிரவும் உம்முடைய சரீரத்துக்கு இரண்டு பக்கங்களாயிருக்கிறதுகள். நக்ஷத்ரங்கள் உமக்கு சரீரங்களாகவும், அச்விநிதேவர்கள் முகமாகவும் இருக்கிறார்கள். நானபேக்ஷித்த தத்வஜ்ஞாநத்தையும், இந்தலோகத்திலுண்டான பசுதநம் முதலியவைகளையும் கொடும்.

புருஷஸூக்த வித்யாரண்யபாஷ்யம் ஸம்பூர்ணம்.

## புருஷஸூக்த பாஷ்யம்

முற்றிற்று.

---



ஸ்ரீரஸ்து.

# ஸ்ரீ ஸூக்தம்.

𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌵𑌰𑍍𑌣𑌾𑌂 𑌹𑌰𑌿𑌣𑍀𑌂 𑌸𑍁𑌵𑌰𑍍𑌣𑌰𑌜𑌤𑌸𑍍𑌰𑌜𑌾𑌮𑍍 ।
𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌂 𑌹𑌿𑌰𑌣𑍍𑌮𑌯𑍀𑌂 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌂 𑌜𑌾𑌤𑌵𑍇𑌦𑍋 𑌮 𑌆𑌵𑌹 ॥ க.

ப்ரதிபதம்.

| | |
|---|---|
| 𑌜𑌾𑌤𑌵𑍇𑌦𑌃 | பகவானே |
| 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌵𑌰𑍍𑌣𑌾𑌮𑍍 | ஸுவர்ணத்தின் காந்திபோன்ற காந்தியுடையவளாயும் |
| 𑌹𑌰𑌿𑌣𑍀𑌮𑍍 | ஸமஸ்தமான பாபங்களைப் போக்குகிறவளாயும் |
| 𑌸𑍁𑌵𑌰𑍍𑌣𑌰𑌜𑌤𑌸𑍍𑌰𑌜𑌾𑌮𑍍 | தங்கத்தினாலும் வெள்ளியினாலும் செய்யப்பட்ட மாலையையுடையவளாயும் |
| 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌮𑍍 | ஸந்தோஷத்தை யுண்டுபண்ணுகிறவளாயும் |
| 𑌹𑌿𑌰𑌣𑍍𑌮𑌯𑍀𑌮𑍍 | ஸுவர்ணம் முதலான ஸமஸ்த ஸம்பத்துக்களையதிகமாக வுடையவளாயுமிருக்கிற |
| 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌮𑍍 | ஸ்ரீமஹாலக்ஷ்மியை |
| 𑌮𑌮 | எனக்கு |
| 𑌆𑌵𑌹 | கிட்டும்படி பண்ணும். |

விசேஷார்த்தம்.

ஜாதவேத: - புண்யம் முதலான காரணங்களினால் வந்ததன்றிக்கே எப்போதுமுண்டான செல்வத்தையுடைய விஷ்ணுவே! ஹிரண்யவர்ணாம் - ஆஶ்ரிதர்க் கபேக்ஷித்ததைக் கொடுக்கைக்குத் தகுந்த அழகியதான ஸமஸ்த லக்ஷணங்களையுடையவள், ஹரிணீம் - பாபத்தைப் போக்குகிறவள்; மான்போலழகிய கண்ணையுடையவள், ஸுவர்ணரஜதஸ்ரஜாம - தன்னழகுக்குத் தகுந்த பொன் வெள்ளியினால் செய்யப்பட்ட ஆபரணங்களையுடையவள், சந்த்ராம் - எல்லாரையு மாநந்திப்பிக்கிறவள், ஹிரண்மயீம் - ஸமஸ்ததநங்களையுடையவள், லக்ஷ்மீம் - எல்லாராலும் ஸேவிக்கத்தக்கவள்; ஸமஸ்த குணங்களையுடையவள். இப்படிப்பட்ட லக்ஷ்மியை, மம - எனக்கு, ஆவஹ - அடைவிப்பியும்.

விசிஷ்டாத்வைதபாஷ்யம்.

ஜாதவேத: - ஸமஸ்தமான வஸ்துக்களின் ஸமூஹத்தில் வஸம்பன்னுகிற பகவானே! ஹிரண்யவர்ணாம் - ஹிரண்யமென்று விஷ்ணுவுக்குப் பெயர். விஷ்ணுவினுடைய பத்நியானவள். ஹரிணீம் - ஆஸ்ரிதர்களுடைய ஸம்ஸார தாபத்தைப் போக்குகிறவள், ஸுவர்ணரஜதஸ்ரஜாம் - வாடாமலும் அநேகமான வர்ணங்களையுமுடைய புஷ்பமாலையையுடையவள், சந்த்ராம் - எல்லாருக்கு மாநந்தத்தை யுண்டாக்குகிறவள், ஹிரண்மயீம்-பவித்ர ஸ்வரூபமானவள், லக்ஷ்மீம் - ஸமஸ்த லக்ஷணங்களையுமுடையவள், இப்படிப்பட்ட-மோக்ஷலக்ஷ்மியை, மம - எனக்கு, ஆவஹ - அடைவிப்பியும்.

வித்யாரண்யபாஷ்யம்.

ஜாதவேத: - வேதத்தை யறிகிறவன்; புத்திமான்; அப்படிப்பட்ட அக்நியே! ஹிரண்யவர்ணாம் - ஸுவர்ணம்போன்ற காந்தியையுடையவள், ஹரிணீம் - பசுமையான ரூபத்தையுடையவள்; மானுருவத்தைத் தரித்தவள், ஸுவர்ணரஜதஸ்ரஜாம் - தங்கத்தினாலும் வெள்ளியினாலும் செய்யப்பட்ட புஷ்பங்களினால் கோர்க்கப்பட்ட மாலையையுடையவள்; தங்கத்தினாலும் வெள்ளியினாலும் செய்யப்பட்ட அரைநூல் மாலையையுடையவள்; அழகிய வெள்ளியினால் செய்யப்பட்ட மாலையையுடையவள்; அப்படிப்பட்ட அரைநூல் மாலையையுடையவள், சந்த்ராம் - சந்திரன்போல் ப்ரகாசிக்கிறவள், ஹிரண்மயீம் - ஸுவர்ணரூபமாயிருக்கிறவள்; ஸுவர்ணம் போன்ற விக்ரஹத்தையுடையவள், லக்ஷ்மீம் - ஸமஸ்த லக்ஷணங்களையுடையவள். இப்படிப்பட்ட லக்ஷ்மியை, மம - எனக்கு, எனக்காக; ஆவஹ - கூப்பிடும்.

தாம் ம ஆவஹ ஜாதவேதோ லக்ஷ்மீமநபகா³மிநீம்|
யஸ்யாம் ஹிரண்யம் விந்தேயம் கா³மஶ்வம் புருஷாநஹம்|| உ.

| | |
|---|---|
| ஜாதவேத: | லக்ஷ்மீபதியே! |
| யஸ்யாம் | எந்த லக்ஷ்மி, (வந்தால்) |
| ஹிரண்யம் | பொன் முதலிய தநத்தையும் |
| கா³ம் | பசுக்களையும் |
| அஶ்வம் | யானை முதலிய வாஹநங்களையும் |
| புருஷாந் | (சிஷ்யர் முதலிய புருஷர்களையும் |
| அஹம் | நான் |

| | |
|---|---|
| விந்தேயம் | அடைவேனே ; |
| தாம் | அந்த லக்ஷ்மியை |
| அநபகாமிநீம் | (என்னைவிட்டுப்) பிரியாதவளாக |
| மே | என்பொருட்டு |
| ஆவஹ | அடைவிப்பியும். |

விசி.—ஹே ஜாதவேதஃ - பகவானே! அஹம் - நான், எந்த மோக்ஷலக்ஷ்மியினால் தநம், பசு, வாஹநம், பிள்ளைகள் இவைகளை யடைவேனோ? ஸ்திரமான அந்த மோக்ஷலக்ஷ்மியை எனக்கடைவிப்பிக்கவேணும். எந்த மோக்ஷலக்ஷ்மியின் க்ருபையினால் ஜ்ஞாநம் ஐஸ்வர்யம் ஸுகம் முதலானவை யடையப்படுகிறதோ? அந்த மோக்ஷலக்ஷ்மியை என்னிடத்தில் ஸ்திரமாயிருக்கும்படி பண்ணும் என்று தாத்பர்யம்.

வித்.—ஹே ஜாதவேதஃ-ஓ அக்கியே! எந்த ஸ்ரீமஹாலக்ஷ்மியினால் நான் ஸமஸ்தமான ஐஸ்வர்யத்தையுமடைவேனோ? அப்படிப்பட்ட லக்ஷ்மியை என்னிடத்தில் எப்போது மிருக்கும்படி செய்விக்க வேண்டும்.

அஶ்வபூர்வாம் ரதமத்யாம் ஹஸ்திநாதப்ரபோதிநீம் ।
ஶ்ரியம் தேவீமுபஹ்வயே ஶ்ரீர்மா தேவீ ஜுஷதாம் ॥ ௩.

| | |
|---|---|
| அஶ்வபூர்வாம் | (ப்ரயாணம் புறப்படும்போது ஸேனையின்) முன்னே குதிரைகளையுடையவளாயும் |
| ரதமத்யாம் | நடுவில் தேர்களையுடையவளாயும் |
| ஹஸ்திநாதப்ரபோதிநீம் | (தனக்கிருப்பிடமான தாமரைப்பூவிலிருக்கிற) யானைகளின் சப்தத்தினால் எழுப்பப்பட்டவளாயும் |
| ஶ்ரியம் | பகவானுடைய திருமார்பை யாஶ்ரயித்திருக்கிறவளாயும் |
| தேவீம் | (தன் பதியான ஸ்ரீமஹாவிஷ்ணுவை) க்ரீடிப்பிக்கிறவளாயு மிருக்கிற ஸ்ரீமஹாலக்ஷ்மியை |
| உபஹ்வயே | ஸமீபத்திலழைக்கிறேன் |
| தேவீ | ப்ரகாசிக்கிற |
| ஶ்ரீஃ | (அந்த) ஸ்ரீமஹாலக்ஷ்மியானவள் |

உா என்னை
ஜுஷதாம் ப்ரீதிபண்ணிவைக்கட்டும்.

விசே.—அச்வ:-எங்கும் வ்யாபித்துள்ள பகவான்; அவனைமுன்னிட்டுக்கொண்டு அவதரித்து லோகத்தை ஸம்ரக்ஷிக்கிறவள், ரதமத்யாம் - ஜீவாத்மாக்களுடைய ஹ்ருதயத்தில் வாஸம்பண்ணுகிறவள், பகவானுடைய விக்ரஹத்தின் நடுவில் திருமார்பில் வாஸம்பண்ணுகிறவள், ஹஸ்திநாதப்ரபோதிநீம - ஸ்ரீகஜேந்த்ராழ்வான் முதலையினால் நோவுபட்டு கூப்பிட்டபோது அந்த சப்தத்தைக்கேட்டு அவனை சீக்கிரத்தில் ரக்ஷிக்கவேணுமென்று அதிக த்வரையையுடையவள்.

விசி.—தன் கோயிலில் முதல் ப்ராகாரத்தில் குதிரைகளையும், நடுப்ராகாரத்தில் தேர்களையும் உடையவளாய், மூன்றாவது ப்ராகாரத்திலிருக்கிற யானைகளின் சப்தத்தினால் எழுப்பப்பட்டவளாய், எல்லாராலும ஆஸ்ரயிக்கப்பட்டவளான மோக்ஷலக்ஷ்மியை அழைக்கிறேன். ப்ரகாசித்துக்கொண்டிருக்கிற அந்த மோக்ஷலக்ஷ்மி என்னை யடையட்டும், ஸமஸ்தமான ஐஸ்வர்யங்களையுடைய மோக்ஷலக்ஷ்மியானவள் என்னுடைய ப்ரார்த்தனையை உபேக்ஷியாமலங்கீகரித்து என்னை யடையட்டும்.

வித்.—குதிரைகளை முன்னேயும்தேர்களை நடுவிலுமுடையதாய் யானைக்கூச்சலினால் தானிருந்த விடத்தை யறிவிக்கிறதாய், மிகவும் ப்ரகாசித்துக்கொண்டிருக்கிற ஸேநாரூபமான லக்ஷ்மியை ஸமீபத்திலழைக்கிறேன். அல்லது - அப்படிப்பட்ட ஸ்ரீமஹாலக்ஷ்மியை யழைக்கிறேன். இப்படிப்பட்ட ஸ்ரீமஹாலக்ஷ்மீ என்னை யடையட்டும். "அஸ்வபூர்ணாம" என்றும் பாடமுண்டு. அப்போது குதிரைகளினால் நிறைந்த ஸேநை என்று அர்த்தம்.

காம்ஸோஸ்மிதாம்ஹிரண்யப்ராகாராமார்த்ராம் ஜ்வலந்தீம்த்ருப்தாம்தர்பயந்தீம் | பத்மேஸ்திதாம்பத்மவர்ணாம் தாமிஹோபஹ்வயேஶ்ரியம் ||

காம் ஸுகஸ்வரூபத்தையுடையவளாயும்
ஸோஸ்மிதாம் வெளிப்புறப்பட்டிருக்கிறபுன்சிரிப்போடு கூடினவளாயும்
ஹிரண்யப்ராகாராம் ஸுவர்ணமயமானமதிலையுடையவளாயும்
ஆர்த்ராம் (யானைகள் அம்ருதகலசங்களினால் திருமஞ்சனம் செய்வதினால்)ஈரமாயிருக்கிற விக்ரஹத்தை யுடையவளாயும்

| | |
|---|---|
| ஜ்வலந்தீம் | (லாவண்யத்தினால்) ப்ரகாசிக்கிறவளாயும் |
| த்ருப்தாம் | (பகவதநுபவத்தினாலுண்டான ஆநந்தத்தினால்) பரிபூர்ணையாயும் |
| தர்ப்பயந்தீம் | (ஆஸ்ரிதர்களைத் தன் கடாக்ஷத்தினால்) ஆநந்திப்பிக்கிறவளாயும் |
| பத்மே | (தனக்காஸநமான) கமலத்தில் |
| ஸ்திதாம் | இருக்கிறவளாயும் |
| பத்மவர்ணாம் | தாமரைப்பூப்போன்ற ரூபத்தையுடையவளாயுமிருக்கிற |
| தாம் | அந்த |
| ச்ரியம் | லக்ஷ்மியை |
| இஹ | இந்த என்னிடத்தில் |
| உபஹ்வயே | அழைக்கிறேன் (என்னிடத்தில் ப்ரஸந்நையாகும்படிச் செய்கிறேன். |

விசே.—த்ருப்தாம் - தயையினால் பரிபூர்ணமான மநஸ்ஸையுடையவள்.

விசி.—காம் - ப்ரஹ்மஸ்வரூபிணியாய், (அல்லது) வாசாமகோசரமான குணங்களையுடையவளாய், புன்சிரிப்பையுடையவளாய், பரிசுத்தமான மதிளையுடையவளாய், க்ஷீரஸமுத்ரத்தைக்கடையும்போது அந்த அம்ருதகணங்களினால் நனைந்த விக்ரஹத்தையுடையவளாய், ப்ரகாசமானையாய், நிரதிசயாநந்தத்தை யுடையவளாய், எல்லாருக்கும் ஆநந்தத்தைக் கொடுக்கிறவளாய், ஆஸ்ரிதர்களுடைய ஹ்ருதயகமலத்தில் வாஸம்பண்ணுகிறவளாய், தாமரைப் பூப்போன்ற நிறத்தையுடையவளான மோக்ஷலக்ஷ்மியை என்னுடைய ஸமீபத்திலழைக்கிறேன்.

வித்.—ஒருவராலுமறியப்போகாத மாஹாத்ம்யத்தையுடையவளாய், நாலுபக்கங்களிலும் பரவாநின்ற புன்சிரிப்பையுடையவளாய், ஸுவர்ணம்போல் மிகவுமழகிய விக்ரஹத்தையுடையவளாய், ருத்ரரூபிணியாய், ஒளியையுடையவளாய், தானும் ஸந்தோஷித்து ஆஸ்ரிதர்களையும் இஷ்டங்களை யளித்து ஸந்தோஷிப்பிக்கிறவளாய், கமலப்பூவில் வாஸம்பண்ணுகிறவளாய், கமலப்பூவின் நிறத்தையுடையவளான அந்த ஸ்ரீமஹாலக்ஷ்மியை ஸமீபத்தில் கூப்பிடுகிறேன்.

சந்த்ராம் ப்ரபாஸாம் யசஸா ஜ்வலந்தீம் ச்ரியம் லோகே தேவஜுஷ்டாம் உதாராம் | தாம்* பத்மிநீம் ஈம் சரணமஹம் ப்ரபத்யே அலக்ஷ்மீர்மே நச்யதாம் த்வாம் வ்ருணே || ௫.

| | |
|---|---|
| சந்த்ராம் | (ஆச்ரிதரை) ஸந்தோஷிப்பிக்கிறவளுமாய் |
| ப்ரபாஸாம் | ச்ரேஷ்டமான காந்தியை யுடையவளுமாய் |
| லோகே | ஜகத்தில் |
| யசஸா | (ஆச்ரிதஸம்ரக்ஷணத்தினாலுண்டான கீர்த்தியினால் |
| ஜ்வலந்தீம் | ப்ரகாசிக்கிறவளுமாய் |
| தேவஜுஷ்டாம் | (ப்ரஹ்மாதி) தேவர்களால் ஸேவிக்கப்பட்டவளுமாய் |
| உதாராம் | (அவர்கள் இஷ்டத்தை) அளிக்கிறவளுமாய் |
| பத்மிநீம் | மஹாபத்மம் முதலான நிதியையுடையவளுமாய் |
| தாம் | வேதங்களில் ப்ரஸித்தமாகச் சொல்லப்பட்டவளுமாய் |
| ஈம் | ஈ என்கிற எழுத்துக்கு அர்த்தமாயிருக்கிறவளுமான |
| ச்ரியம் | ஸ்ரீமஹாலக்ஷ்மியை |
| அஹம் | நான் |
| ப்ரபத்யே | ப்ரபத்தி பண்ணுகிறேன் |
| மே அலக்ஷ்மீ: | என்னுடைய, தாரித்ரியமானது |
| நச்யதாம் | அழியட்டும் (என்னுடைய இஷ்டத்தை நான் பெறுகைக்காக) |
| த்வாம் | உம்மை |
| சரணம் | உபாயமாக |
| வ்ருணே | நினைக்கிறேன். |

விசே.—"பத்மிநீம்" என்கிறவிடத்தில் "பத்மநேமீம்" என்னும் பாடம். அதினர்த்தம் - நேமி யென்பது - வண்டிச்சக்கரத்தின் உருளையை. அது வண்டியிலுள்ள பொருளை வேறிடத்தில் அடைவிப்பிக்க ஸாதகமாயிருக்கும். அதுபோல் ஸ்ரீமஹாலக்ஷ்மீ தன் கையிலிரு

* பத்மநேமீம்.

க்கிற தாமரைப்பூவாகிற ரேமியினால் ஆஶ்ரிதர்களுடைய கஷ்டத்தைப் போக்கி, அவர்களிஷ்டத்தை யளித்துக் கடைசியில் தன் திருவடியில் சேர்த்துக் கொள்ளுகிறாள்.

விசி.—ஸந்தோஷத்தையுண்டுபண்ணுகிறவளாயும், உயர்ந்த நிறத்தையுடையவளாயும், கீர்த்தியினால் ப்ரகாசித்துக்கொண்டிருக்கிறவளாயும், ஸ்வர்க்கலோகத்திலுள்ள தேவர்களால் ஸேவிக்கப்பட்டவளாயும், எங்கும் வ்யாபிக்கிறவளாயும், மஹாபத்மம் முதலான நிதிகளையுடையவளாயும், ஈ என்கிற சப்தத்தினால் சொல்லப்பட்டவளாயுமிருக்கிற மோக்ஷலக்ஷ்மியை என்னுடைய அநிஷ்டம்நசிக்கைக்காகச் சரணமடைகிறேன்; என்னுடைய அஜ்ஞானம் விஷயசாபல்யம் முதலியதுர்கதி அழியட்டும். மோக்ஷலக்ஷ்மியே! நான் இஷ்டத்தைப்பெறுகைக்காகவும் உன்னையே சரணமாக வடைகிறேன்.

வித்.—சந்த்ரன்போல் ப்ரகாசிக்கிறவளுமாய், மிக்க லாவண்யத்தை யுடையவளுமாய், ப்ரஸித்தமான கீர்த்தியையுடையவளுமாய், ஸ்வர்க்கலோகத்திலுள்ள தேவர்களும் ப்ரீதியுடன் ஸேவிக்கத்தக்கவளுமாய், கம்பீர ஸ்வபாவமுடையவளுமாய், தாமரைலதாரூபிணியுமாய், (அல்லது) தாமரை புஷ்பஸ்வரூபிணியுமாயிருக்கிற ஸ்ரீமஹாலக்ஷ்மியை, இந்த லோகத்தில் என்னை ரக்ஷிக்கவேணுமென்று ப்ரபத்திபண்ணுகிறேன். ஆகையால், என்னுடைய அமங்களமெல்லாம் நசிக்கட்டும். அப்படி அமங்களங்களைப் போக்கத்தகுந்த உன்னை நான் சரணமாக அங்கீகரித்தேன்.

ஆதித்யவர்ணே தபஸோऽதிஜாதோ வநஸ்பதிஸ்தவ வ்ருக்ஷோऽத பில்வ: । தஸ்ய ஃபலாநி தபஸா நுதந்து *மாயாந்தராயாஶ்ச பாஹ்யா அலக்ஷ்மீ: ॥ ௬

| | |
|---|---|
| ஆதித்யவர்ணே | ஸூர்யனுடைய காந்திபோன்ற காந்தியையுடையவளே! |
| தவ | உன்னுடைய |
| தபஸ: | அநுக்ரஹத்தினால் |
| வநஸ்பதி: | பூவில்லாமல் காய்க்கிற |
| பில்வ: | தேஜஸ்ஸாகிற |
| வ்ருக்ஷ: | மரமானது |
| அதிஜாத: | உண்டாயிருக்கிறது |
| அத | அதுக்குப் பிற்பாடு |

* மாயாந்தராயாஶ்ச

அ 𑌶𑍍𑌰𑍀𑌸𑍂𑌕𑍍𑌤𑌮𑍍.

| | |
|---|---|
| 𑌤𑌸𑍍𑌯 | அந்த தேஜஸ்ஸாகிற மரத்தினுடைய |
| 𑌫𑌲𑌾𑌨𑌿 | ஜ்ஞாநமாகிற பழங்கள் |
| 𑌤𑌪𑌸𑌾 | (உம்முடைய) அநுக்ரஹத்தினால் |
| 𑌅𑌨𑍍𑌤𑌰𑌾𑌃 | உள்ளேயிருக்கிற |
| 𑌮𑌾𑌯𑌾𑌃 | அஜ்ஞாநங்களென்ன |
| 𑌯𑌾𑌶𑍍𑌚 | எந்த |
| 𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌃 | வெளியிலிருக்கிற தோஷங்களோ? அவைகளென்ன |
| 𑌤𑌾𑌃 | அவ்விரண்டு விதமான |
| 𑌅𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌃 | துர்க்கதிகளை |
| 𑌨𑍁𑌦𑌨𑍍𑌤𑍁 | போக்கட்டும். |

விசே.—"மாயாந்தராயாம்ஶ்ச" என்றும் பாடம். அப்போது, மாயாந்தராயாந் - அஜ்ஞாநத்தையும் பகவத் பஜநத்துக்கு விரோதியான விக்நங்களையும் என்று அர்த்தம்.

விசி —ஸூர்யன்போல் அதிககாந்தியையுடைய மோக்ஷலக்ஷ்மியே! உமமுடைய அநுக்ரஹத்தினால் என்னிடத்தில் தேஜஸ்ஸூ என்கிற பூவில்லாமல் காய்க்கும்படியான ஒருமரம் உண்டாயிருக்கிறது, ஜ்ஞாநமென்பது அதின் பழம் - அந்த பழம், உம்முடைய அநுக்ரஹத்தினால் என்னுடைய அஜ்ஞாநத்தையும், இந்திரிய வ்யாபாரங்களையும் அழித்து விடட்டும்,

வித் —ஸூர்யன்போன்ற காந்தியையுடையவளே! உம்முடைய ஆஜ்ஞையினால் உமமுடைய கையில் பூவில்லாமல் காய்க்கிற வில்வமரமொன்றுண்டாயிற்று, அதின் பழங்கள் உம்முடைய அநுக்ரஹத்தினால் மநஸ்ஸூக்கும் நேத்ரம முதலானவைகளுக்கு முண்டான அலக்ஷ்மியைப் போக்கட்டும்.

𑌉𑌪𑍈𑌤𑍁 𑌮𑌾𑌂 *𑌦𑍇𑌵𑌸𑌖𑌃 𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌶𑍍𑌚 𑌮𑌣𑌿𑌨𑌾 𑌸𑌹 ।
𑌪𑍍𑌰𑌾𑌦𑍁𑌰𑍍𑌭𑍂𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑍇𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌮𑍃𑌦𑍍𑌧𑌿𑌂 𑌦𑌦𑌾𑌤𑍁 𑌮𑍇 ॥ ௭.

| | |
|---|---|
| 𑌦𑍇𑌵𑌸𑌖𑌃 | தேவர்களுக்குத் தோழனை பகவானும் |
| 𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌶𑍍𑌚 | யசஸ்ஸூம் |
| 𑌮𑌣𑌿𑌨𑌾 𑌸𑌹 | ரத்நங்களோடுகூட |
| 𑌮𑌾𑌂 | என்னை |
| 𑌉𑌪𑍈𑌤𑍁 | அடையட்டும் |

* 𑌦𑍇𑌵𑌿𑌸𑌹.

| | |
|---|---|
| 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 | இந்த |
| 𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑍇 | லோகத்திலே |
| 𑌪𑍍𑌰𑌾𑌦𑍁𑌰𑍍𑌭𑍂𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 | உண்டானேன் |
| 𑌮𑍇 | என்பொருட்டு |
| 𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌂 | யசஸ்ஸையும் |
| 𑌋𑌦𑍍𑌧𑌿𑌂 | (ஸமஸ்தவஸ்துக்களின்)ஸம்ருத்தியையும் |
| 𑌦𑌦𑌾𑌤𑍁 | கொடுக்கட்டும், |

விசே.—"தேவஸக:" என்கிறவிடத்தில் "தேவிஸஹ" என்றும் பாடம், அப்பொழுது, தேவி - லக்ஷ்மியே! ஸஹ - ஒரேகாலத்தில் என்று அர்த்தம்.

விசி.—பகவான் என்னிடத்தில் ப்ரஸந்நனாகட்டும்; வித்யையினாலும் ஐச்வர்யத்தினாலும் எனக்கு ப்ரஸித்தியுண்டாகட்டும்; அநேக விதமான ரத்நங்கள் என்னிடத்தில் சேரட்டும். இந்த லோகத்திற் பிறந்த எனக்கு யசஸ்ஸையும் ஸமஸ்தவஸ்துக்களினுடைய பூர்த்தியையும கொடுக்கட்டும்.

வித்.—தேவனென்றால் மஹாதேவன். அவனுக்குத்தோழன் குபேரன். கீர்த்தியென்றால் யசஸ்ஸுக்கு அதிஷ்டான தேவதையான யக்ஷகன்னிகை. (அல்லது) குபேரனுடைய பணம் வைக்கும் வீடு. மணியென்றால் சிந்தாமணி யென்கிற கேட்டதைக்கொடுக்கிற ஒரு ரத்நம்; (அல்லது) குபேரனுடைய பணத்துக்கு அதிகாரி. இவர்கள் என்னை யடையட்டும். இந்த லோகத்திற் பிறந்த எனக்கு யசஸ்ஸையும், ஸமஸ்தவஸ்துக்களின் பூர்த்தியையும் கொடுக்கட்டும்.

𑌕𑍍𑌷𑍁𑌤𑍍𑌪𑌿𑌪𑌾𑌸𑌾𑌮𑌲𑌾𑌂 𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌾𑌮𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌂 𑌨𑌾𑌶𑌯𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ।
𑌅𑌭𑍂𑌤𑌿𑌮𑌸𑌮𑍃𑌦𑍍𑌧𑌿𑌂 𑌚 𑌸𑌰𑍍𑌵𑌾𑌂 𑌨𑌿𑌰𑍍𑌣𑍁𑌦 𑌮𑍇 𑌗𑍃𑌹𑌾𑌤𑍍 ॥ ௮.

| | |
|---|---|
| 𑌕𑍍𑌷𑍁𑌤𑍍𑌪𑌿𑌪𑌾𑌸𑌾𑌮𑌲𑌾𑌂 | பசிதாஹம் இவையாகிற மாலிந்யத்தை யுண்டுபண்ணுகிற |
| 𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌾𑌂 | பெரியவளான |
| 𑌅𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌂 | அலக்ஷ்மியை |
| 𑌅𑌹𑌂 | நான் |
| 𑌨𑌾𑌶𑌯𑌾𑌮𑌿 | (உம்முடைய அநுக்ரஹத்தால்) போக்கடிக்கிறேன் |
| 𑌅𑌭𑍂𑌤𑌿𑌂 | தாரித்ரியத்தையும் |

| | |
|---|---|
| ஸர்வாம் | ஸமஸ்தமான |
| அஸம்ருத்திம் ச | வ்ருத்தியில்லாமையையும் |
| மே | என்னுடைய |
| க்ருஹாத் | வீட்டில் நின்றும் |
| நிர்ணுத | போக்கடியும். |

விசே.—அபூதிம்-க்ருஹம், பூமி, தோட்டம் முதலான ஸம்பத்துக்கு விரோதியும், அஸம்ருத்திம் - ரத்நம், வஸ்த்ரம், தாந்யம் முதலான ஸம்ருத்திக்கு விரோதியுமான-அலக்ஷ்மியைப் போக்கடியும்.

விசி.—பசி தாஹம் முதலிய அசுத்த ஸ்வரூபமாயும் இதற்கு முன்பு வெகுநாளாய் வ்ருத்தியடைந்து மிருக்கிற அஜ்ஞாநம் தாரித்ர்யம் முதலான அலக்ஷ்மியை உம்முடைய ஆஶ்ரய பலத்தினால் நான் அழித்து விடுகிறேன். இதுக்கு முன்புள்ள அஜ்ஞாநம் விஷயசாபல்யம் முதலான அலக்ஷ்மியை என்னுடைய சரீரத்தில் நின்றும் துறத்தும்.

வித்.—பசி தாஹம் முதலிய அசுத்தத்தையுண்டாக்குகிறவளும் ஸ்ரீமஹாலக்ஷ்மியான உமக்கு முன்னே பிறந்தவளுமான அலக்ஷ்மியை நான் நாசம்செய்து விடுகிறேன். ஸ்ரீ மஹாலக்ஷ்மியே! ஏழ்மையையும் குறைவையும் என்வீட்டில் நின்றும் வெளியில் துறத்தும்.

கந்தத்வாராம் துராதர்ஷாம் நித்யபுஷ்டாம் கரீஷிணீம் ।
ஈஶ்வரீꣳ ஸர்வபூதாநாம் தாமிஹோபஹ்வயே ஶ்ரியம் ॥ ௯.

| | |
|---|---|
| கந்தத்வாராம் | பரிமளத்தை லக்ஷணமாக வுடையவளும் (தன்னுடைய வாஸஸ்தாநத்தைப் பரிமளிக்கப்பண்ணுகிறவளும்) |
| துராதர்ஷாம் | (பிறரால்) அவமாநம் பண்ணப்படாதவளும் |
| நித்யபுஷ்டாம் | எப்போதும் பரிபூர்ணையும் |
| கரீஷிணீம் | எல்லா ஸம்ருத்திகளையுடையவளும் |
| ஸர்வபூதாநாம் | ஸமஸ்த ப்ராணிகளுக்கும் |
| ஈஶ்வரீம் | நியமநத்தைப் பண்ணுகிறவளுமான |
| தாம் | அந்த |
| ஶ்ரியம் | ஸ்ரீ மஹாலக்ஷ்மியை |
| இஹ | இந்த க்ருஹத்தில் |
| உபஹ்வயே | அழைக்கிறேன். |

விசே.—கந்தத்வாராம் - தன் வரவுக்குப் பரிமளத்தை ஸாதநமாகவுடையவள்; தன்னுடைய ஆராதநத்துக் குபயோகியாக சந்தநம் புஷ்பம் தூபம் முதலிய பரிமள த்ரவ்யங்களையுடைய க்ருஹத்தில் வஸிக்கிறவள். துராதர்ஷாம் - பரிமள வஸ்துவில்லாதவர்களுக்கு அடையப்போகாதவள். நல்ல பரிமளமுள்ள விடத்திலேயே லக்ஷ்மீ வாஸம்செய்வள் என்று தாத்பர்யம்.

விசி.—எவ்விடத்தில் நிரதிசயமான பரிமளம்வீசுகிறதோ? அந்த பரிமளத்தைக்கொண்டு இவ்விடத்தில் லக்ஷ்மி வஸிக்கிறாளென்று அறியத் தகுந்தவளும்மாய், அஜ்ஞாநிகளுக்கு எவ்விதத்தாலு மறியப் போகாதவளுமாய், எப்போதும் நிறைந்த ஐச்வர்யத்தையுடையவளுமாய், யானை குதிரை முதலான ஸம்பத்துக்களை யுடையவளுமாய், ஸர்வ ப்ராணிகளுக்கும் ஆதாரமுமாயிருக்கிற அந்த மோக்ஷலக்ஷ்மியை என்னிடத்தில் அழைக்கிறேன்.

வித்.—வாஸனையை லக்ஷணமாகவுடையவளாயும், ஒருவராலும் சலிப்பிக்க வொண்ணாதவளாயும், எப்போதும் பயிர் முதலியவைகளால் நிறைந்தவளாயும், பசுக்கூட்டத்தின் ஸம்ருத்தியையுடையவளாயும், ஸமஸ்த ஜீவன்களுக்கு மாதாரமாயுமிருக்கிற பூமிஸ்வரூபமான ஸ்ரீமஹாலக்ஷ்மியை இந்த லோகத்திலழைக்கிறேன்.

𑌮𑌨𑌸𑌃 𑌕𑌾𑌮𑌮𑌾𑌕𑍂𑌤𑌿𑌂 𑌵𑌾𑌚𑌃 𑌸𑌤𑍍𑌯𑌮𑌶𑍀𑌮𑌹𑌿 |
𑌪𑌶𑍂𑌨𑌾𑌂 𑌰𑍂𑌪𑌮𑌨𑍍𑌨𑌸𑍍𑌯 𑌮𑌯𑌿 𑌶𑍍𑌰𑍀𑌃 𑌶𑍍𑌰𑌯𑌤𑌾𑌂 𑌯𑌶𑌃 || கo.

| | |
|---|---|
| 𑌮𑌨𑌸𑌃 | மனஸ்ஸினுடைய |
| 𑌕𑌾𑌮𑌂 | ஆசையையும் |
| 𑌆𑌕𑍂𑌤𑌿𑌂 | ஸந்தோஷத்தையும் |
| 𑌵𑌾𑌚𑌃 | வாக்கினுடைய |
| 𑌸𑌤𑍍𑌯𑌂 | உண்மையையும் |
| 𑌪𑌶𑍂𑌨𑌾𑌂 | பசுக்களுடைய |
| 𑌰𑍂𑌪𑌂 | ஸ்வரூபத்தையும் |
| 𑌅𑌨𑍍𑌨𑌸𑍍𑌯 | தான்யத்தினுடைய |
| 𑌰𑍂𑌪𑌂 | ஸ்வரூபத்தையும் |
| 𑌯𑌶𑌃 | கீர்த்தியையும் |
| 𑌅𑌶𑍀𑌮𑌹𑌿 | அடைவோம் |
| 𑌶𑍍𑌰𑍀𑌃 | ஸ்ரீமஹாலக்ஷ்மி |

| | |
|---|---|
| மயி | என்னிடத்தில் |
| ஶ்ரயதாம் | ஆச்ரயிக்கட்டும் (இருக்கட்டும்). |

விசே —மநஸ்ஸினலாசைப்பட்டது, மநோரதத்தினல் ஸங்கல்பித்தது, வாயினல் யாசித்தது, பசுக்களையும் தாந்யத்தையுமுடையவனென்கிற ப்ரஸித்தி இவைகளை நாங்கள் அநுபவிக்கக்கடவோம். இதற்காக ஸ்ரீமஹாலக்ஷ்மி என்னை யடையட்டும்.

விசி.—மநஸ்ஸின் விச்சித்தது, ஆநந்தம், வாக்கின் உண்மை, பசு அந்நம் இவைகளின் ஸம்ருத்தி; இவைகளை யடையக்கடவோம். மோக்ஷலக்ஷ்மியும் கீர்த்தியும் என்னை யடையட்டும்.

வித்.—பசுக்களின் பால் நெய் முதலியவை, அநேக ரஸங்களோடுகூடிய அந்நம் இவைகளை புஜிப்போம். ஸம்பத்தும் யசஸ்ஸும் எனக்குண்டாகட்டும். மிகுந்தது முன்போல்.

கர்தமேந ப்ரஜாபூதா மயி ஸம்பவ கர்தம।
ஶ்ரியம் வாஸய மே குலே மாதரம் பத்மமாலிநீம்॥ கக.

| | |
|---|---|
| கர்தமேந | கர்த்தமனென்று பேரையுடைய உன்னாலே |
| ப்ரஜாபூதா | (ஸ்ரீமஹாலக்ஷ்மி) பெண்ணாக ஆனாள் |
| கர்தம | கர்த்தமனே! |
| மயி | என்னிடத்தில் |
| ஸம்பவ | இருக்கும் |
| மே | என்னுடைய |
| குலே | வம்சத்தில் |
| மாதரம் | (எனக்குத்) தாயாரான |
| பத்மமாலிநீம் | தாமரைப்பூமாலையையுடைய |
| ஶ்ரியம் | ஸ்ரீமஹாலக்ஷ்மியை |
| வாஸய | வாஸம்பண்ணும்படி செய்யும். |

விசே.—ஸ்ரீமஹாலக்ஷ்மி க்ஷீரஸமுத்ரத்தில் அவதரித்தபோது கர்த்தமர் என்கிற ருஷி அந்த ஸ்ரீமஹாலக்ஷ்மியை நீ எனக்குப் பெண்ணாகவேணுமென்று எடுத்து வளர்த்தார் அதுமுதல் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்குக் கர்த்தமர் தகப்பனாரானார்.

விசி.—கர்த்தமரே! மோக்ஷலக்ஷ்மீ தன் கடாக்ஷத்தினலும்மை ஶ்ரேஷ்டராகச் செய்தாள். அப்படி லக்ஷ்மீகடாக்ஷம் பெற்றநீர் என்

னிடத்தி லநுக்ரஹம் பண்ணவேணும். நீர் புருஷகாரம்பண்ணி ஸகல ஜகத்தையும் ஸ்ருஷ்டிக்கிறவளாய் தாமரைப் பூமாலையை யணிந்திருக்கிற மோக்ஷலக்ஷ்மியை என்னுடைய குலத்திலே நித்யவாஸம் பண்ணும்படி செய்யும்.

வித்.—கர்த்தமரே! உம்மால் ஸ்ரீமஹாலக்ஷ்மீ நல்ல பிள்ளையை யுடையவளாக ஆனாள். அப்படி ஸ்ரீமஹாலக்ஷ்மிக்குப் புத்ரரான நீர் என்னுடைய க்ருஹத்தில் வாஸம் செய்யவேணும். கமலமாலையைத் தரித்த உம்முடைய மாதாவான ஸ்ரீமஹாலக்ஷ்மியை என்னுடைய குலத்தில் வாஸம்பண்ணும்படி செய்யும்.

ஆப: ஸ்ருஜந்து ஸ்நிக்தாநி சிக்லீத வஸ மே க்ருஹே।
நி ச தேவீம் மாதரம் ஶ்ரியம் வாஸய மே குலே॥　　க௨.

| | |
|---|---|
| ஆப: | ஜலமானது (உம்மால் அநுப்பப்பட்டதாய்) |
| ஸ்நிக்தாநி | தயிர்நெய்முதலிய ஸ்நேஹத்தையுடைய வஸ்துக்களை |
| ஸ்ருஜந்து | உண்டுபண்ணட்டும் |
| சிக்லீத | சிக்லீதரே! |
| மே | என்னுடைய |
| க்ருஹே | க்ருஹத்தில் |
| வஸ | வாஸம்பண்ணும் |
| தேவீம் | ப்ரகாசித்துக்கொண்டிருக்கிற |
| மாதரம் | எனக்குத்தாயாரான |
| ஶ்ரியம் | ஸ்ரீமஹாலக்ஷ்மியை |
| மே | என்னுடைய |
| குலே | க்ருஹத்தில் |
| நிவாஸய | வாஸம்பண்ணிவையும் |
| ச | அவ்யயம். |

விசே.—சிக்லீதர் என்பவர் ஸ்ரீமஹாலக்ஷ்மியின் கோயிலில் த்வாரபாலர் என்று புராணங்களில் ப்ரஸித்தம்.

விசி.—சிக்லீதரே! அம்ருத ஸ்வரூபிணியான மோக்ஷலக்ஷ்மி உம்முடைய புருஷகாரத்தால் ஜகத்தை நல்ல குணங்களையுடையதாக ஸ்ருஷ்டிக்கட்டும். நீர் என்னுடைய க்ருஹத்திலே வாஸம்செய்யவேணும். அவ்வளவே யன்றிக்கே, ஸகல ஜகத்துக்கும் காரண

மாய் மிகவும் விளங்காநின்றுள்ள மோக்ஷலக்ஷ்மியை என்னுடைய வம்சத்தில் ஸ்திரமாக வாஸம் செய்விக்கவேணும்.

வி.த.—ஸ்ரீமஹாலக்ஷ்மிக்குப் புத்ரரான சிக்லீதரே! ஜலதேவதை பால் தயிர் முதலான ஸ்நேஹத்தையுடைய வஸ்துக்களை யுண்டாக்கட்டும். நீர் என் க்ருஹத்தில் வாஸம் செய்யவேணும். உமக்குத் தாயாரான ஸ்ரீதேவியை என்னுடைய குலத்தில் வாஸம் செய்விக்க வேணும்.

𑌆𑌰𑍍𑌦𑍍𑌰𑌾𑌂𑌪𑍁𑌷𑍍𑌕𑌰𑌿𑌣𑍀𑌂*𑌪𑍁𑌷𑍍𑌟𑌿𑌂𑌪𑌿𑌙𑍍𑌗𑌲𑌾𑌂𑌪𑌦𑍍𑌮𑌮𑌾𑌲𑌿𑌨𑍀𑌮𑍍।
𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌂𑌹𑌿𑌰𑌣𑍍𑌮𑌯𑍀𑌂𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌂𑌜𑌾𑌤𑌵𑍇𑌦𑍋𑌮𑌆𑌵𑌹॥ ௧௩.

| | |
|---|---|
| 𑌜𑌾𑌤𑌵𑍇𑌦𑌃 | பகவானே! |
| 𑌆𑌰𑍍𑌦𑍍𑌰𑌾𑌮𑍍 | (க்ஷீரஸமுத்ரத்தின் திவலைகளினால்) நனைந்தவளாயும் |
| 𑌪𑍁𑌷𑍍𑌕𑌰𑌿𑌣𑍀𑌮𑍍 | கமலப்பூவில் வாஸமசெய்கிறவளாயும் |
| 𑌪𑍁𑌷𑍍𑌟𑌿𑌮𑍍 | புஷ்டிஸ்வரூபையாயும் |
| 𑌪𑌿𑌙𑍍𑌗𑌲𑌾𑌮𑍍 | பிங்களமென்கிற (பொன்போன்ற) நிறத்தையுடையவளாயும் |
| 𑌪𑌦𑍍𑌮𑌮𑌾𑌲𑌿𑌨𑍀𑌮𑍍 | தாமரைப் பூமாலையையுடையவளாயும் |
| 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌮𑍍 | ஸந்தோஷிப்பிக்கிறவளாயும் |
| 𑌹𑌿𑌰𑌣𑍍𑌮𑌯𑍀𑌮𑍍 | ஹிரண்யம் முதலான தநங்களையுடையவளாயுமிருக்கிற |
| 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌮𑍍 | ஸ்ரீமஹாலக்ஷ்மியை |
| 𑌮𑍇 | எனக்கு |
| 𑌆𑌵𑌹 | அடைவிப்பியும். |

விசே.—ஆர்த்ராம் - தயையினால் பூர்ணமானவள். "புஷ்டிம்" என்கிற விடத்தில் "யஷ்டிம்" என்றும் பாடம். அப்போது ஸகல யஜ்ஞங்களையும் நிறைவேற்றிக் கொடுக்கிறவள்; அல்லது தடிபோலிருக்கிற விக்ரஹத்தையுடையவள்.

வி.சி.—ஸ்ரீமஹாவிஷ்ணுவே! அம்ருதத்தினால் நனைந்திருக்கிற திருமேனியையுடையவளுமாய், அந்தரிக்ஷலோகத்துக்கு ஈச்வரியுமாய்,(அல்லது) எல்லாருடைய ஹ்ருதயகமலத்தில் வஸிக்கிறவளுமாய், தாமரைமாலையையுடையவளுமாய், ஆநந்தஜநகையுமாய், பரிசுத்தையுமாயிருக்கிற மோக்ஷலக்ஷ்மியை என்னிடத்தில் சேர்ப்பியும்.

* 𑌯𑌷𑍍𑌟𑌿𑌂.

வித்.—புஷ்கரிணீம் - யானைகளின் தும்பிக்கையினால் அபிஷேகம் செய்யப்பட்டு அதினால் நனைந்திருக்கிற விக்ரஹத்தையுடையவள், புஷ்டிக்கு அபிமானிதேவதையாய், (அல்லது) புஷ்டிஸ்வரூபையானவள். மிகுந்தது முன்போல்.

ஆர்த்ராம் *யஃகரிணீம் யஷ்டிம் ஸுவர்ணாம் ஹேமமாலினீம் |
ஸூர்யாம் ஹிரண்மயீம் லக்ஷ்மீம் ஜாதவேதோ மமாவஹ || ௧௪.

| | |
|---|---|
| ஜாதவேத: | ஸ்ரீ மஹாவிஷ்ணுவே ! |
| ஆர்த்ராம் | அம்ருதத்தினால் நனைந்திருக்கிற திருமேனியையுடையவளாயும் |
| யஃகரிணீம் | செங்கோலைத் திருக்கையிலுடையவளாயும் |
| யஷ்டிம் | தண்டம்போல் ருஜுவாயிருக்கிற திருமேனியையுடையவளாயும் |
| ஸுவர்ணாம் | நல்ல நிறத்தையுடையவளாயும் |
| ஹேமமாலினீம் | ஸுவர்ணத்தினால் செய்யப்பட்ட மாலையையுடையவளாயும் |
| ஸூர்யாம் | ஸூர்யனைப்போல் ப்ரகாசிக்கிறவளாயும் |
| ஹிரண்மயீம் | ஹிரண்யம் முதலிய தங்கங்களையுடையவளாயுமிருக்கிற |
| லக்ஷ்மீம் | ஸ்ரீ மஹாலக்ஷ்மியை |
| மம | என்னுடைய (விஷயத்தில்) |
| ஆவஹ | ஆவாஹநம்பண்ணும்; ஸ்திரப்படுத்தும். |

விசே.—"யஃகரிணீம்யஷ்டிம்" என்கிறவிடத்தில் "புஷ்கரிணீம் புஷ்டிம்" என்றும் பாடம். அப்போது, புஷ்கரிணீம் என்றதற்கு முன் சொன்னதே அர்த்தம். புஷ்டிம் - புஷ்டி ஸ்வரூபமானவள். ஸூர்யாம் - லோகத்தை செவ்வையாய் நடப்பிக்கிறவள்.

விசி.—யஃகரிணீம்-லோகபரிபாலநத்துக்காக செங்கோலைக்கையிலுடையவள். யஷ்டிம் - தர்மதண்ட ரூபமாயிருக்கிறவள். ஸூர்யாம் - வாக்ரூபமாயிருக்கிறவள். அந்த மோக்ஷலக்ஷ்மியை என்னிடத்தில் அடைவிப்பியும். மிகுந்தது முன்போல.

வித்.—யஃகரிணீம் - செங்கோலையுடையவள். (அல்லது) பாபம் செய்தவர்களை சிக்ஷிக்கிறவள். (அல்லது) தண்டம் என்கிற ஆயுத

* புஷ்கரிணீம் புஷ்டிம்.

த்ரைதக் கையிலுடையவள். யஷ்டிம - தண்டஸ்வரூபையானவள். ஸுவர்ணாம் - விசேஷமான அழகையுடையவள். ஸூர்யாம்-ஸூர்யரூபையாயிருக்கிறவள். மிகுந்தது முன்போல்.

𑌤𑌾𑌂 𑌮 𑌆𑌵𑌹 𑌜𑌾𑌤𑌵𑍇𑌦𑍋 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌮𑌨𑌪𑌗𑌾𑌮𑌿𑌨𑍀𑌮𑍍 । 𑌯𑌸𑍍𑌯𑌾𑌂 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌭𑍂𑌤𑌂 𑌗𑌾𑌵𑍋 𑌦𑌾𑌸𑍍𑌯𑍋𑌽𑌶𑍍𑌵𑌾𑌨𑍍 𑌵𑌿𑌨𑍍𑌦𑍇𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌨𑌹𑌮𑍍 ॥ கரு.

| | |
|---|---|
| 𑌜𑌾𑌤𑌵𑍇𑌦𑌃 | ஸ்ரீமஹாவிஷ்ணுவே ! |
| 𑌯𑌸𑍍𑌯𑌾𑌮𑍍 | எந்த ஸ்ரீமஹாலக்ஷ்மி (என்னுடைய க்ருஹத்தில் வாஸம்செய்தால்) |
| 𑌪𑍍𑌰𑌭𑍂𑌤𑌮𑍍 | அதிகமான |
| 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌮𑍍 | தநத்தையும் |
| 𑌗𑌾𑌵𑌃 | பசுக்களையும் |
| 𑌦𑌾𑌸𑍍𑌯𑌃 | பரிசாரிகைகளையும் |
| 𑌅𑌶𑍍𑌵𑌾𑌨𑍍 | குதிரைகளையும் |
| 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌨𑍍 | புத்ரபௌத்ரர்களையும் |
| 𑌅𑌹𑌮𑍍 | நான் |
| 𑌵𑌿𑌨𑍍𑌦𑍇𑌯𑌮𑍍 | அடைவேனோ |
| 𑌤𑌾𑌮𑍍 | அப்படிப்பட்ட |
| 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌮𑍍 | மோக்ஷலக்ஷ்மியை |
| 𑌮𑍇 | என்பொருட்டு |
| 𑌅𑌨𑌪𑌗𑌾𑌮𑌿𑌨𑍀𑌮𑍍 | சலநமில்லாதவளாக |
| 𑌆𑌵𑌹 | அடைவிப்பியும். |

விசி.—எந்த மோக்ஷலக்ஷ்மியின் கடாக்ஷத்தினுல் தநம், பசுக்கள், பரிசாரிகைகள், குதிரைகள், புத்ராதிகள் இவை முதலான ஐஸ்வர்யத்தை யடைவேனோ; ஸ்வாமீ! அந்த மோக்ஷலக்ஷ்மி என்னிடத்தில் எப்போதும் வஸிக்கும்படி செய்யவேணும்.

வித்.—எந்த ஸ்ரீமஹாலக்ஷ்மியின் கடாக்ஷத்தினுல் தநம் கோ முதலிய இந்த ஸம்பத்துக்களுண்டாகுமோ? அந்த ஸ்ரீமஹாலக்ஷ்மி என் க்ருஹத்திலே நித்யமாய் வஸிக்கும்படி செய்யவேணும்.

ஸ்ரீரயநம:.

ஸம்பத்தைக் கோருகிறவன் இந்த ஸ்ரீஸூக்தத்தில் பதினைந்து ருக்குக்களையும் தினந்தோறும் ஜபிக்கக்கடவன். ஜபத்துக்கு முத

மில் இந்த ருக்குக்களைக்கொண்டே ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு ஆராதநம் செய்யவேண்டும், அதின் க்ரமம்.—இதில் ஹிரண்யவர்ணாம் என்கிற முதல் ருக்கினால ஸ்ரீமஹாலக்ஷ்மியை ஆவாஹநம்செய்து, தாமம ஆவஹ என்கிற இரண்டாவது ருக்கினால் ஆஸநமும், அஸ்வபூர்வாம் என்கிற மூன்றாவது ருக்கினால் அர்க்யமும, காமஸோஸ்மிதாம் என்கிற நாலாவது ருக்கினால் பாத்யமும், சந்த்ராமபராஸாம் என்கிற ஐந்தாவது ருக்கினால் ஆசமநமும, ஆதித்யவர்ணே என்கிற ஆறாவது ருக்கினால் ஸ்நாநமும, உபைதுமாம் என்கிற ஏழாவது ருக்கினால் வஸ்த்ரமும, க்ஷுத்பிபாஸாம் என்கிற எட்டாவது ருக்கினால் திருவாபரணங்களும, கந்தத்வாராம் என்கிற ஒன்பதாவது ருக்கினால் சந்தனமும், மநஸஃகாமம என்கிற பத்தாவது ருக்கினால் புஷ்பமும், கர்தமேந என்கிற பதினோராவது ருக்கினால் தூபமும, ஆபஸ்ஸ்ருஜந்து என்கிற பன்னிரண்டாவது ருக்கினால் தீபமும், ஆர்த்ராம் புஷ்கரிணீம் என்கிற பதின்மூன்றாவது ருக்கினால் நெய் சர்க்கரை சேர்த்த பாயஸாந்ந நிவேதநமும, ஸமர்ப்பித்து, ஆர்த்ராம் யஃகரிணீம் என்கிற பதினாலாவது ருக்கினால் ப்ரதக்ஷிணம் செய்யவேண்டியது, ஸ்நாநம், வஸ்த்ரம், நைவேத்யம், ஸமர்ப்பித்த பின்பு ஆசமநம் ஸமர்ப்பிக்கவேண்டியது. பின்பு அக்நியை ப்ரதிஷ்டைபண்ணி பரிஷேசநம் பண்ணி அநந்தரம நெய்யினால் ஒவ்வொரு ருக்குக்கும்ஆதியில்ப்ரணவத்தையும் கடைசியில் ஸ்வாஹாஎன்கிறதையும சேர்த்து ஹோமம் செய்யவேண்டியது, பின்பு வில்வமரத்தின் ஸமித்தினாலும் பலாசமரத்தின் ஸமித்தினாலும் முன்போலவே ஒவ்வொரு ருக்கினாலும ஹோமமசெய்து பின்பு நெய்யினால் ஹோமமசெய்து ஹோமத்தை முடித்து அதற்குப்பிற்பாடுஸ்ரீமஹாலக்ஷ்மியைத்யாநித்துக்கொண்டு ருக்குக்களின் முதலில் ப்ரணவத்தைச்சேர்த்து இருபத்தெட்டுதரம் ஸ்ரீஸூக்தத்தை ஜபம்செய்து கடைசியில் தாம்மஆவஹஎன்கிற பதினைந்தாவது ருக்கினால் உத்வாஸநம் செய்யவேண்டியது. இப்படி தினந்தோறும்செய்தால் அகண்டமான ஐச்வர்யத்தையடைவன். இதின் ஒவ்வொரு ருக்கை ஜபித்தால் ஒவ்வொரு பலத்தைக் கொடுக்கும் அதில்-௧-வது தேஜஸ்ஸௌபாக்ய சக்ரவர்த்தித்வங்களையும், ௨-வது பசுதாஸீதாஸர்களையும, ௩-வது ராஜ்யசத்ருநாசங்களையும, ௪-வது வித்யையையும, ௫-வது புத்ரபௌத்ர ராஜஸந்மாநங்களையும், ௬-வது சாஸ்வதமான தநத்தையும், ௭-வது குபேரதாசநம சிந்தாமணி நவநிதிகளின் ப்ராப்தியையும், ௮-வது தாரித்ர்ய நாசத்தையும், ௯-வது க்ருஷி

யினால் தநவ்ருத்தி பசுதாந்ய ஸம்ருத்திகளையும், ௧௦-வது வாக்ஸித்தியையும், ௧௧-வது ஸந்தாநத்தையும், ௧௨-வது உயர்ந்த அந்நத்தையும், ௧௩-வது யானை குதிரைகளையும், ௧௪-வது ராஜ்யத்தையும், ௧௫-வது வித்யையையும் கொடுக்கும். தநத்தை எல்லாம் கொடுக்கும்.

𑌸𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌨𑌂 𑌶𑍍𑌰𑍀𑌸𑍂𑌕𑍍𑌤𑌂 𑌸𑌮𑍍𑌪𑍂𑌰𑍍𑌣𑌮𑍍.

---

𑌶𑍍𑌰𑍀𑌰𑌸𑍍𑌤𑍁.

# பூஸூக்தம்.

—:o:—

𑌭𑍂𑌮𑌿𑌰𑍍𑌭𑍂𑌮𑍍𑌨𑌾𑌦𑍍𑌯𑍌𑌰𑍍𑌵𑌰𑌿𑌣𑌾𑌽𑌨𑍍𑌤𑌰𑌿𑌕𑍍𑌷𑌂𑌮𑌹𑌿𑌤𑍍𑌵𑌾।
𑌉𑌪𑌸𑍍𑌥𑍇𑌤𑍇𑌦𑍇𑌵𑍍𑌯𑌦𑌿𑌤𑍇𑌽𑌗𑍍𑌨𑌿𑌮𑌨𑍍𑌨𑌾𑌦𑌮𑌨𑍍𑌨𑌾𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌦𑌧𑍇॥ ௧.

| | |
|---|---|
| 𑌦𑍇𑌵𑌿 | பூமிதேவியே ! |
| 𑌭𑍂𑌮𑍍𑌨𑌾 | பாப்பினால் |
| 𑌭𑍂𑌮𑌿𑌃 | பூமியாகவும் |
| 𑌵𑌰𑌿𑌣𑌾 | மேன்மையினால் |
| 𑌦𑍍𑌯𑍌𑌃 | ஸ்வர்க்கலோகமாகவும் |
| 𑌮𑌹𑌿𑌤𑍍𑌵𑌾 | மாஹாத்ம்யத்தினால் |
| 𑌅𑌨𑍍𑌤𑌰𑌿𑌕𑍍𑌷𑌂 | அந்தரிக்ஷலோகமாகவும் ஆகிறீர் |
| 𑌅𑌦𑌿𑌤𑍇 | அகண்டமாயிருக்கிறவளே ! |
| 𑌤𑍇 | உம்முடைய |
| 𑌉𑌪𑌸𑍍𑌥𑍇 | ஸமீபத்தில் |
| 𑌅𑌨𑍍𑌨𑌾𑌦𑌂 | பரமாத்மாவை யநுபவிக்கயோக்யனையும் |
| 𑌅𑌗𑍍𑌨𑌿𑌂 | (ஸ்வர்க்கம் மோக்ஷம் முதலான) மேல் லோகங்களுக்குப்போக யோக்யனையுமிருக்கிற (இந்த ஜீவாத்மாவை) |
| 𑌅𑌨𑍍𑌨𑌾𑌦𑍍𑌯𑌾𑌯 | பரமாத்மாநுபவத்துக்கு யோக்யமான ஜ்ஞாநத்தையும்பொருட்டு |
| 𑌆𑌦𑌧𑍇 | (உம்மிடத்தில்) வைக்கிறேன் |

விசிஷ்டாத்வைதம்.

பூமிதேவியென்பவள் க்ஷமை என்கிற குணத்துக்கு அதிஷ்டாந தேவதை. க்ஷமையாவது - பிறர் தன்னிடத்தில் எவ்வளவு குற்றம் செய்தபோதிலும் அவர்களைத் தண்டிக்கத் தனக்கு வல்லமையிருந்த போதிலும் தண்டியாமல் அக்குற்றங்களைப் பொறுத்தல். அந்த பூமி தேவி, பூமி முதலிய கீழ்லோகங்களென்ன, ஸ்வர்க்கம் முதலிய மேல்லோகங்களென்ன, நடுவிலுள்ள அந்தரிக்ஷ லோகமென்ன ஆக மூன்றுவகைப்பட்ட லோகங்களின் ஸ்வரூபமாயிருக்கிறாள். அதாவது - அவைகளுக்கு அந்தர்யாமியாயிருந்து அந்த லோகங்களையும் அதின் மூலமாய் அங்கங்குள்ள வஸ்துக்களையும் கீழ்விழாமல் தரித்துக்கொண்டிருக்கிறாள். அங்கங்குள்ள ப்ராணிகள் மலமூத்திரங்களைச் செய்தல், வெட்டுதல், குத்தித்தல் முதலிய அநேகமான பிழைகளைச் செய்தபோதிலும் அவைகளைப் பொறுத்துப் பின்பு அவர்களுக்குவேண்டிய ஆஹாரத்தையும தங்களிஷ்டப்படி க்ரீடிக்க இடத்தையும் கற்பித்துக்கொடுத்து ரக்ஷிக்கிறாள். அப்படிப்பட்ட பூமிதேவியைத் தனக்கு பரமாத்மாவினிடத்தில் பக்தியையுண்டாக்கித் தரவேணுமென்று ப்ரார்த்திக்கிறது.

பூமிதேவியே! உமக்கு, வ்யாபித்தல், மேன்மை, மஹத்வம் என்கிற குணங்களுண்டு. அவைகளில் வ்யாபித்தலென்கிற குணத்தையுடையவளாய் பூமியில் ப்ரவேசித்து அங்குள்ள ப்ராணிகளுக்கு இடுக்கின்றிக்கே யதேச்சமாய் ஸஞ்சரிக்கைக்குத் தகுந்த பரப்பையுடைய பூமியாயிருக்கிறீர். மேன்மை என்கிற குணத்தையுடையவளாய் ஸ்வர்க்கத்தில் ப்ரவேசித்து எல்லாருக்கு மனுகவொணாதாய் புண்யவான்களுக்கே யோக்யமான மேன்மையையுடைய ஸ்வர்க்கலோகமாயிருக்கிறீர். மஹத்வம் என்கிற குணத்தையுடையவளாய், அந்தரிக்ஷம் என்றால் ஆகாசத்தில் ப்ரவேசித்து, நிராதாரமாய் ஸஞ்சரிக்கிற ஸூர்யன் சந்த்ரன் முதலிய க்ருஹங்கள் பக்ஷிகள் இவைகளைக் கீழேவிழாமல் தாங்கிக்கொண்டிருக்கையாகிற மஹத்வத்தையுடைய அந்தரிக்ஷ லோகமாயிருக்கிறீர். அல்லது - பூமியென்கிறது தாந்யம் ரத்நம முதலான சிறந்த வஸ்துக்கள் உண்டாகும் தேசம். திவ் என்கிறது தேவர்கள் க்ரீடிக்க ஆசைப்படும்படியான தேசம. அந்தரிக்ஷமென்கிறது நிராதாரமான ஸூர்ய சந்த்ராதிகள் ஸஞ்சரிக்கும் தேசம். இவைகளில் நீர் ப்ரவேசித்து பூமியை முற்கூறிய சிறந்த வஸ்துக்களுண்டாகுகைக்குத் தகுந்த பரப்

மையுடையதாகவும், ஸ்வர்க்கத்தை தேவர்களும் ஆசைப்படும்படியான மேன்மையுடையதாகவும், ஆகாசத்தையும் நக்ஷத்ரங்களையும் பக்ஷிகளையும் தாங்கிக்கொள்ளும்படியான மஹத்வத்தையுடையதாகவும் செய்து அந்தந்த ஸ்வரூபமாயிருக்கிறீர் உம்முடைய மாஹாத்ம்யம் இவ்வளவென்றொருவராலும் பரிச்சேதிக்கப்போகாது. மோக்ஷத்தையடைந்து அங்குள்ள பகவானை யநுபவித்து ஆநந்திக்கத்தக்க இந்த ஆத்மாவை உம்மிடத்தில் ஸமர்ப்பிக்கிறேன். இந்த ஆத்மாவுக்கு பகவானிடத்தில் பக்தியையுண்டாக்கித் தரவேணும். அல்லது ஸமஸ்தலோகங்களையு மநுபவிக்கத்தக்க இந்த ஆத்மாவை உம்மிடத்தில் ஸமர்ப்பித்தேன். இந்த ஆத்மாவுக்கு அந்நம் முதலான ஸமஸ்த ஸம்பத்துக்களையும் உண்டாக்கித்தரவேணும்.

இந்த மந்த்ரம் முதல் ஆறுமந்த்ரங்கள் தைத்திரீய ஸம்ஹிதையில் ஐந்தாவது ப்ரஸ்நத்தில் இருக்கின்றன. அவ்விடத்திலிம்மந்த்ரங்களை அந்த ப்ரகரணத்துக்குச் சேர்ந்தபடி பட்டபாஸ்கரரும் வித்யாரண்யரும வ்யாக்யாநம் செய்தார்கள்.

பட்டபாஸ்கரர்.

இவ்விடத்தில் கார்ஹபத்யாக்நியை பூமி ஸ்வரூபமாக ஸ்தோத்ரம் செய்கிறது. அகண்டிதமான பூமிதேவியே! நீ பரப்பினால் பூமியாகவும் பெருமையினால் ஸ்வர்க்கமாகவும் மாஹாத்ம்யத்தினால் அந்தரிக்ஷ லோகமாகவும் ஆனாய். கார்ஹபத்யரூபமான உன் மடியில் புரோடாசம் முதலிய ஹவிஸ்ஸை புஜிக்கிற அக்நியை அந்நம் முதலான போக்யவஸ்துக்களை யநுபவிக்கைக்குத் தகுந்த ஸம்பத்தின் ஸம்ருத்தி எனக்கு உண்டாகைக்காக ஸ்தாபநம்செய்கிறேன். அந்த ஸம்பத்தின் ஸம்ருத்தியைக் கொடுக்கவேணும்.

வித்யாரண்யர்.

கார்ஹபத்யாக்நியை மூன்றுலோக ஸ்வரூபமாக ஸ்தோத்ரம் செய்கிறது. கார்ஹபத்யாக்நியே! பரப்பினால் பூமியாகவும், மேன்மையினால் ஸ்வர்க்கமாகவும், மஹத்வத்தினால் அந்தரிக்ஷமாகவும் ஆனாய். கார்ஹபத்ய ஸ்வரூபமான அகண்டிதமான பூமியே! உன்னுடைய மடியில் அந்நத்தை புஜிக்கிற கார்ஹபத்யாக்நியை இந்த யாகத்தைச் செய்கிற யஜமானனுக்கு அந்நம் முதலான ஸம்பத்துக்கள் பூர்ணமாக உண்டாகைக்காக ஸ்தாபநம் செய்கிறேன். நீ யஜமானனுக்கு ஸமஸ்த ஸம்பத்தை யுண்டாக்கித் தரவேணும்.

ஆயங்கௌ: ப்ருச்நிரக்ரமீதஸநந்மாதரம்புந:।
பிதரஞ்ச ப்ரயந்த்ஸுவ:॥ உ

| | |
|---|---|
| கௌ: | பூமிதேவியே! |
| அயம் | இந்த |
| ப்ருச்நி: | வெண்மையான நிறத்தையுடைய ஸூர்யன் |
| ப்ரயந் | வேகமாகச் சென்றுகொண்டு |
| மாதரம் | (உலகத்துக்குத்) தாயாரான உன்னை |
| அக்ரமீத் | ஆக்ரமித்தான்; சுற்றும் ப்ரதக்ஷிணம்செய்கிறான் |
| புந: | மறுபடியும் |
| ஸுவ: | அழகிய கமநத்தையுடையவனாய் |
| பிதரம் | (ஜகத்தைப்) பாலநம் செய்கிற ஸ்ரீமந்நாராயணனை |
| அஸநத் | (தனக்கந்தர்யாமியாக) அடைந்தான். |

விசி.—வாரீர் பூமிதேவியே! தன்னுடைய உதயத்தினால் இருளைப்போக்கி ஸமஸ்தவஸ்துக்களையும் ப்ரகாசிப்பித்து உலகத்தை வாழ்விக்கிற ஸூர்யனும் உலகமாதாவான உன்னை ஓரிடத்திலும்நிற்காமல்மிக வேகமாகச்சென்று, ஸகல ஜகத்துக்கும் பாலகனை ஸ்ரீமஹாவிஷ்ணுவைத் தன் மத்யத்திலெழுந்தருளப் பண்ணிக்கொண்டு தினந்தோறும் ப்ரதக்ஷிணம் செய்துவருகிறான்.

பட்ட.—இப்பொழுது கார்ஹபத்யாக்நியை ஸூர்யரூபமாக ஸ்துதிசெய்கிறார். இந்த அக்நி-கௌ:-நடக்கிறதே ஸ்வபாவமாகவுடையவன் என்றால், அந்த ஸ்வபாவத்தையுடைய ஸூர்யன். ப்ருச்நி: - வெண்நிறத்தையுடையவன். இந்த அக்நியே ஸூர்யரூபனாய் எல்லா உலகங்களையும் ஆக்ரமிக்கிறான். ப்ரயந் - இடைவிடாமல் நடக்கிறவன். ஸுவ: - சோபநமான கதியையுடையவன்.

வித்.—ஆதித்யஸ்வரூபனான கார்ஹபத்யாக்நி மூன்று லோகத்தையும் ஆக்ரமித்தான். மாதரம் என்றால் - பூலோகம்; பிதரம் என்றால் ஸ்வர்க்கலோகம்; ச என்றதினால் அந்தரிக்ஷலோகமும் தோற்றுகிறது. பூமி மாதாவென்றும் ஸ்வர்க்கம் பிதாவென்றும் வேதத்தில் வேறிடத்திற் சொல்லியிருக்கிறது. மிகுந்தது முன்போல்.

த்ரிꣳஶத்³தா⁴ம விராஜதி வாக் பதங்கா³ய ஶிஶ்ரியே |
ப்ரத்யஸ்ய வஹ த்³யுபி⁴꞉ || ௩.

| | |
|---|---|
| த்ரிꣳஶத்³தா⁴ம | முப்பதுஸ்தானங்களில் (முப்பதுமுஹூர்த்தங்களில்) |
| ராஜதி | (அந்த ஸூர்யன் உம்மை ப்ரதக்ஷிணம் பண்ணிக்கொண்டே) ப்ரகாசிக்கிறான் |
| வாக் | வேதவாக்கானது |
| பதங்கா³ய | ஸூர்யனை |
| ஶிஶ்ரியே | ஆஶ்ரயிக்கிறது |
| த்³யுபி⁴꞉ | தேஜஸ்ஸுக்களினால் |
| அஸ்ய | இந்த என்னுடைய |
| ப்ரதி | ப்ரதிகூலநடத்தையை |
| வஹ | போக்கும். |

விசி.—இவ்விடத்தில் முஹூர்த்தமென்பது இரண்டு நாழிகை. இந்தஸூர்யன் ஒருக்ஷணமும் ஒழிவில்லாமல் உம்மை ப்ரதக்ஷிணம் செய்கிறபடியினால் எல்லாராலும் வணங்கபட்டவனாய் மிகவும் ப்ரகாசிக்கிறான். ஆகையால் வேதமும் அந்த ஸூர்யனை ஸ்தோத்ரம் செய்கிறது. அல்லது, அந்த ஸூர்யனிடத்தில் ஸ்ரீமஹாவிஷ்ணு எழுந்தருளியிருந்து ஜகத்தினுடைய பரிபாலநத்தில் கொஞ்சமும் ஆலஸ்யம் செய்யாமல் அறுபது நாழிகையும் ஜாக்ரதையாயிருந்து மிகவும் ப்ரகாசிக்கிறான். ஆகையாலவரைப் பிதாவென்கிறது. ஸமஸ்த ப்ராணிகளுடைய ஹ்ருதயத்திலும் வ்யாபித்திருக்கிற அந்த ஸ்ரீமஹாவிஷ்ணுவையே வேதம ஸ்தோத்ரம் செய்கிறது. ஸ்ரீமஹாவிஷ்ணுவே! உம்முடைய தேஜஸ்ஸினால் நான் செய்த பாபங்களைப் போக்கும்.

பட்ட.—ஒரு தினத்தில் முப்பது முஹூர்த்தங்கள் இருக்கிறதுகள். அந்த முப்பது முஹூர்த்தங்களிலும் வேதமானது ஸூர்யனையே ஸ்தோத்ரம செய்கிறது. அப்படிப்பட்ட மஹாநுபாவனான ஸூர்யனே நான் என்ன குற்றம செய்திருந்தபோதிலும், ப்ரதி குற்றத்தை, அஸ்ய - விடும். அந்த யொன்றையும் மனதில் வைக்கவேண்டாம். என்னிடத்தில் அநுக்ரஹத்தைச் செய்து நான் கொடுத்த ஹவிஸ்ஸை தன்னுடைய கிரணங்களினால் அங்கீகரியும்

விச.—ஆதித்யஸ்வரூபியான கார்ஹபத்யாக்நிக்கு முப்பது முஹூர்த்தங்களும் தேஜஸ்ஸுக்கள். அவை விசேஷமாய் ப்ரகாசிக்கின்றன. பக்ஷிபோல் ஆகாசத்தில் ஸஞ்சரிக்கிற அந்த ஆதித்யனையே வேதம் ஸ்தோத்ரம செய்கிறது. அப்படிப்பட்ட கார்ஹபத்யாக்நியே! உமக்கு நான் என்ன குற்றம் செய்தேனே? குற்றமாவது உம்மை உத்வாஸநம் செய்துவிட்டது. அதை யெல்லாம நினைக்கவேண்டாம், நாங்கள் கொடுத்த ஹவிஸ்ஸை உம்முடைய ஜ்வாலைகளினால் தேவர்களிட மடைவிப்பியும். அல்லது - ஸூர்யன் முப்பது நாழிகைகளிலும தேஜஸ்ஸினால் மிகவும் ப்ரகாசித்துக்கொண்டே இருக்கிறான். அந்தஸூர்யனை வேதம் ஸ்தோத்ரம் செய்கிறது. அதாவது - காலையில் ருக்வேதத்தினாலும், மத்யாஹ்நத்தில் யஜுர்வேதத்தினாலும், ஸாயங்காலத்தில் ஸாமவேதத்தினாலும ஸ்தோத்ரம செய்யப்படுகிறான் என்று வேதத்தில் வேறிடத்தில் சொல்லியிருக்கிறது.

அஸ்ய ப்ராணாதபாநத்யந்தச்சரதி ரோசநா।
வ்யக்யந்மஹிஷஸ்ஸுவ:॥ ௬.

| | |
|---|---|
| அஸ்ய | இந்த ஸ்ரீமஹாவிஷ்ணுவினுடைய |
| ரோசநா | தேஜஸ்ஸானது |
| ப்ராணாத் | ப்ராணநம் என்கிற வ்யாபாரத்தைச் செய்தபின்பு |
| அபாநதீ | அபாநநம் என்கிற வ்யாபாரத்தைச் செய்யாநின்றுகொண்டு |
| அந்த: | உள்ளே |
| சரதி | ஸஞ்சரிக்கிறது |
| மஹிஷ: | பெரிய சரீரத்தில் வாஸம்பண்ணுகிறதுமாய் |
| ஸுவ: | அழகியதுமாய்க்கொண்டு |
| வ்யக்யத் | ப்ரகாசிக்கிறது. |

விசு.—இந்த ஸ்ரீமஹாவிஷ்ணுவினுடைய தேஜஸ்ஸு ப்ராணிகளுடைய சரீரத்தினுள்ளே ப்ரவேசித்து நரம்பின் வழியாய் வாயுவை மேல்முகமாக வரும்படிச் செய்கையாகிற ப்ராணந வ்யாபாரத்தையும், நரம்பின் வழியாய் வாயுவைக் கீழ்முகமாக அடைவிப்பிக்கையாகிற அபாநந வ்யாபாரத்தையும் செய்து ப்ராணிகளை ரக்ஷித்

துக்கொண்டு எல்லாராலும் பூஜிக்கத் தகுந்ததாய் மிகவழகுடன் சரீரத்துக்குள் ப்ரகாசிக்கிறது.

பட்ட.—இந்த கார்ஹபத்யாக்நியின் தேஜஸ்ஸு ஜீவன்களுடைய சரீரத்திற்குள் ப்ரவேசிந்து வாயுவை மேற்புறமாகவும் கீழ்ப்புறமாகவும் அடைவிப்பித்துக்கொண்டு மிகவழகியதாய் ப்ரகாசிக்கிறது.

வித்.—இந்த ஸூர்யனுடைய தேஜஸ்ஸு, ப்ராணாத் - மூச்சு விடுகையோடு ஸமானமான உதயத்திற்குப் பின்பு, அபாநதீ - மூச்சு இழுக்கைக்கு ஸமானமான அஸ்தமனத்தைச் செய்துகொண்டு, அந்த: - பூமிக்கும் ஸ்வர்க்கத்திற்கும் நடுவில் ஸஞ்சரிக்கிறது. மஹிஷ: - பெரிய மண்டலத்தில் வாஸம்பண்ணுகிற ஸூர்யன். யஜமானனுக்கு ஸ்வர்க்கத்தைக் கொடுக்கிறான். ஆகாசத்தில் ஸஞ்சரிக்கிற ஸூர்யரூபமாக ஸ்தோத்ரம் செய்யப்பட்ட கார்ஹபத்யாக்நியே! உன்னை இனி ஆதாநம் செய்கிறேன் என்று தாத்பர்யம். அல்லது, ஸூர்யனுடைய தேஜஸ்ஸு சரீரத்திற்குள் முக்ய ப்ராணரூபமாயிருந்து ப்ராணனென்றும், அபாநனென்றும், வ்யாநனென்றும், உதாநனென்றும், ஸமாநனென்றும் ஐந்துவிதமாய் ஸஞ்சரிக்கிறது. இப்படிப்பட்ட காந்தியையுடைய ஸூர்யன் உதயம் முதல் அஸ்தமயம் வரையில் ஆகாசத்தை விளங்கச் செய்கிறான்.

யத் க்ருத்தஸ் த்யக்தவாந் ஶாபேநாஶக்த்யா ।
ஸுக்ருதம் ஹரே தத் தவ புநஸ்ஸ்வர்ஷீயாஸ்து ॥ ரு.

| | |
|---|---|
| ஹரே | ஸ்ரீமஹாவிஷ்ணுவே ! |
| அஶக்த்யா | சக்தியில்லாமையினால் |
| க்ருத்த: | கோபித்துக்கொண்ட நான் |
| ஶாபேந | சாபத்தினாலே |
| த்வாம் | உம்மை |
| த்யக்தவாந் | விட்டுவிட்டேன் (என்கிறது) |
| யத் | யாதுவோ ? |
| தத் | அது |
| தவ | உம்முடைய (அநுக்ரஹத்தினால்) |
| புந: | மறுபடியும் |
| ஸுக்ருதம் | நன்றாகச்செய்ததாக ஆகட்டும் |

| | |
|---|---|
| த்வா | உம்மை |
| உத்³வாஸயாமஸி | ஜ்வலிக்கும்படி செய்கிறோம் (த்யாகம்செய்கிறோம்). |

விசி.—இப்படி இந்த லோகத்தில் ரக்ஷித்து, பின்பு மோக்ஷத்தையும் கொடுத்து ரக்ஷிக்கிற ஸ்ரீமஹாவிஷ்ணுவே! உம்மை த்யாகிக்க சக்தியில்லாமல் கோபித்துக்கொண்டு த்யாகம் செய்யாமலிருந்துவிட்டேன். இனி எப்போதும் உம்மை நான் த்யாகிக்கும்படி என்னிடத்தில் அநுக்ரஹம் செய்யவேணும். உம்முடைய அநுக்ரஹம பெற்றவனாய் இனி எப்போதும் த்யாகம் செய்கிறேன்.

பட்ட.—அக்நியைத்தான் உத்வாஸநம் செய்கை அக்ருத்யமென்றறிந்து அதை மறந்து அக்நியே! நான் உத்வாஸநம் செய்ததும் செய்யவேண்டிய ஸத்க்ருத்யமென்றே செய்தேன். நான் செய்த அக்ருத்யமும் உம்முடைய அநுக்ரஹத்தினால் நன்னடத்தையாக வாகட்டுமென்று தாத்பர்யம்.

வித்.—தக்ஷிணாக்நியே! உம்மிடத்தில் ஹோமம் செய்யவேண்டிய புரோடாசம முதலானவைகளுக்கும் தார்யம் முதலியவைகளின் ஸம்ருத்தியில்லாமல் தாரித்ர்யத்தினால் கோபித்துக்கொண்டு உம்மை உத்வாஸநம் செய்துவிட்டேன், அதுவும் உம்முடைய அநுக்ரஹத்தினால் உமமை நன்றாக ஆராதித்ததாக வாகட்டும். இனியும்மை ஆதாநம் செய்கிறோம.

யத்தே மந்யுபரோப்தஸ்ய ப்ருதி²வீமநுதத்⁴வஸே |
ஆதி³த்யா விஶ்வே தத்³தே³வா வஸவஶ்ச ஸமாப⁴ரந் || ௯.

| | |
|---|---|
| மந்யுபரோப்தஸ்ய | கோபத்தினால்விடப்பட்ட |
| தே | உம்முடைய |
| யத் | எந்ததேஜஸ்ஸானது |
| ப்ருதி²வீம் | பூமியை யநுஸரித்து |
| அநுதத்⁴வஸே | லயத்தையடைந்ததோ? |
| தத் | அந்ததேஜஸ்ஸை |
| ஆதி³த்யா: | (பன்னிரண்டு) ஆதித்யர்களும் |
| விஶ்வேதே³வா: | விஶ்வேதேவர்களும் |
| வஸவஶ்ச | வஸுக்களும் |
| ஸமாப⁴ரந் | பரித்தார்கள். |

விசி.— நான் கோபத்தினால் உம்மை த்யாகியாமல் விட்டுவிட்ட பின்பு இந்த அர்க்யத்தினால் என்னிடத்தில் உமக்குண்டான கோபமானது பூமிதேவியினால் நசித்துவிட்டது. (என்றால்) நீர் கோபித்த காலத்தில் உமக்குத் தகுந்த ஸமாதானங்களைச் சொல்லி அக்கோபத்தைத் தீர்த்துவிட்டாள். அப்படிப்பட்ட உமதுடைய ஸ்வரூபத்தை ஆதித்யன் முதலான மஹாநுபாவர்கள் த்யானம் செய்கிறார்கள். அவர்களுடன் நானும் த்யானம் செய்யக்கடவேன் என்று தாத்பர்யம்.

விசி.— ஆஹவநீயாக்நியே! நானும்மைக் கோபத்தினால் உத்வாஸநம் செய்துவிட்டேன். அதுமுதல் உம்முடைய தேஜஸ்ஸு பூமியில் வீழ்ந்துவிட்டது. அந்த தேஜஸ்ஸை ஆதித்யர் முதலானவர்கள் தரிக்கட்டும்.

மேதிநீ தேவீ வஸுந்தரா ஸ்யாத்வஸுதா தேவீ வாஸவீ ।
ப்ரஹ்மவர்சஸ: பித்ருணாம் ச்ரோத்ரம் சக்ஷுர்மந: ॥ எ.
தேவீ ஹிரண்யகர்பிணீ தேவீ ப்ரஸூவரீ ।
ஸதநே ஸத்யாயநே ஸீத ॥ அ.
ஸமுத்ரவதீ ஸாவித்ரீ ஹநோ தேவீ மஹ்யங்கீ ।
மஹோதாரணீ மஹோவ்யதிஷ்டா: ॥ கூ.
ச்ருங்கே ச்ருங்கே யஜ்ஞே யஜ்ஞே விபீஷணீ ।
இந்த்ரபத்நீ வ்யாபிநீ ஸுரஸரிதிஹ ॥ க0.
வாயுமதீ ஜலசயநீ ச்ரியந்தா ராஜா ஸத்யந்தோ பரிமேதிநீ ।
ச்வோபரி யத்தங்காய ॥ கக.
விஷ்ணுபத்நீம் மஹீம் தேவீம் மாதவீம் மாதவப்ரியாம் ।
லக்ஷ்மீம் ப்ரியஸகீம் தேவீம் நமாம்யச்யுதவல்லபாம் ॥ கஉ.
ஓம். தநுர்தராயை வித்மஹே ஸர்வஸித்த்யை ச தீமஹி ।
தந்நோ தரா ப்ரசோதயாத் ॥ கங.

இந்த மந்த்ரங்களுக்கு ஒரு பாஷ்யமும் கிடையாது. இந்த ஏழு மந்த்ரங்களும் அதர்வணவேதத்தைச் சேர்ந்தவை என்று சொல்லுகிறார்கள். இப்போது வழங்கிவரும் அதர்வணவேதத்திலும் காணுகிறதில்லை. ஆகிலும் பூஸூக்தத்தில் இந்த மந்த்ரங்கள் எல்லாதேசத்திலும் எல்லாராலும் அநுஸந்திக்கப்பட்டு வருகின்றன. இதற்கு அர்த்தம்மாத்ரம் சில புஸ்தகங்களில் எழுதப்பட்டிருக்கின்றன.

அந்த அர்த்தமே இங்கு எழுதப்படுகிறது. இவைகளில் அநேகமாய் பூமிதேவியின் திருநாமமாயே யிருக்கும். இந்த மந்த்ரங்களினால் பூமிதேவி ப்ரார்த்திக்கப்படுகிறாள்.

| | |
|---|---|
| வஸுதாரா | ரத்நம் முதலான தநங்களை தரிக்கிற |
| வஸுதா | அந்த தநங்களைப்போஷிக்கிற |
| வாஸவீ | தாங்யநுபமான தநத்தையுடைய |
| தேவீ | ப்ரகாசித்துக்கொண்டிருக்கிற |
| ஶ்ரீபூதேவீ | பூமிதேவியானவள் |
| ஸ்ராக் | என்னிடத்தில் அநுக்ரஹத்தையுடையவளாக ஆகட்டும் |
| பித்ரூணாம் | (என்னை)ரக்ஷித்தவர்களுக்கும்(எனக்கும்) |
| ஶ்ரோத்ரம்-சக்ஷுர்மந: | காது, கண், மநஸ்ஸு முதலிய இந்திரியங்களையும் |
| ப்ரஹ்மவர்சஸ: | ப்ரஹ்மதேஜஸ்ஸையும் கொடுக்கட்டும் |
| ஸத்யாயநே | ப்ரஹ்மத்தை ஸ்தாநமாகவுடையவளே ! |
| ஸர்வே | ஸமஸ்த ப்ராணிகளுக்கும் வாஸஸ்தாநமாயிருக்கப்பட்டவளே ! |
| ஹிரண்யகர்பிணீ | ஸுவர்ணத்தைத்தன் மத்யத்திலேயுடைய |
| தேவீ | க்ரீடித்துக்கொண்டிருக்கிற |
| ப்ரஸூ: | உத்க்ருஷ்டமான வஸ்துக்களையுண்டுபண்ணுகிற |
| வரீ | வரம் என்கிற நிதியையுடைய |
| தேவீ | தேவனான ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்குப் பத்நியான நீர் |
| ஸீத | (என்னிடத்தில்) அநுக்ரஹத்தைப் பண்ணும் |
| ஸமுத்ரவதீ | ஸமுத்ரத்தையுடைய |
| ஸாவித்ரீ | ஜகத்காரணமான ஸ்ரீமஹாவிஷ்ணுவின் பத்நியான |
| ஜந: | ப்ராணிகளை ஜீவிப்பிக்கிற |
| மஹீ | மஹத்வத்தையுடைய |
| க்ஷீ | ஸமஸ்த க்ரியைகளுக்கும் ஸாதநமாயிருக்கிற |

| | |
|---|---|
| ஈட்ய: | கொண்டாடப்பட்டிருக்கிற |
| தாரணீ | ஸமஸ்தத்தையும் தரித்துக்கொண்டிருக்கிற |
| தேஜ: | தேஜோரூபமாயிருக்கிற |
| விபீஷணீ | (உம்மை யாச்ரயியாதவர்களுக்கு) பயங்கரமாயிருக்கிற |
| விஷ்ணுபத்னீ | ஸகலமான ஐச்வர்யங்களையுடைய ஸ்ரீமந்நாராயணனுக்குப் பத்நியான |
| ஸுராச்ரிதா: | தேவர்களாலாச்ரயிக்கப்பட்டிருக்கிற |
| இஹ | இந்த ஜகத்தில் |
| வ்யாபினீ | பரந்திருக்கிற |
| தேவீ | பூமிதேவியான நீர் |
| ச்ருங்கே ச்ருங்கே | சிகரம் முதலான உயர்ந்த ஸ்தானங்களிலும் |
| யஜ்ஞே யஜ்ஞே | யாகமுதலான ச்ரேஷ்டமான கார்யங்களிலும் |
| விதிஷ்டா: | இருக்கிறீர் |
| வாயுச்ரிதீ | வாயு முதலான வேறு பூதங்களுக்கு ஆதாரமாயிருக்கிற |
| ஜலசாயினீ | ஸமுத்ரஜலத்தின்மேல் படுத்துக்கொண்டிருக்கிற |
| ச்ரியந்தரா | ஸம்பத்து ரூபயான ஸ்ரீமஹாலக்ஷ்மியை தரித்துக்கொண்டிருக்கிற (ஸமஸ்த ஸம்பத்துக்களையுடைய) |
| அஜா | ஜந்மமில்லாமலிருக்கிற |
| அஜ்ஞானவர்தி | ஜ்ஞாநமில்லாதவர்கள்மேல் |
| ஸதீ | பூர்ணகடாக்ஷத்தை யுடையவளாயிருக்கிற |
| ஸா | அப்படிப்பட்ட |
| தேவீ | பூமிதேவியானவள் |
| அஜ்ஞாய | மோக்ஷத்தையும்பொருட்டு |
| உபரி | தன்மேலே |

| | |
|---|---|
| தாத்ரீ | ஸமஸ்த ப்ராணிகளையும் தரிக்கிறாள் (ப்ராணிகளுக்கு மோக்ஷஸாதநமான அநுஷ்டாநங்களைச் செய்கைக்குத்தானும் தாரமாயிருக்கிறாள்). |
| விஷ்ணுபத்நீம் | ஸ்ரீமஹாவிஷ்ணு ஜகத்தை ஸம்ரக்ஷிக்கைக்காக யத்நம் செய்யும்போது அதற்குத் தானும்கூட விருந்து அக்கார்யத்தை நிறைவேற்றி வைக்கிறவள் |
| மாதவப்ரியாம் | ஸ்ரீமஹாலக்ஷ்மியோடு ஸர்வேஶ்வரன் ஏகாஸநத்தில் கலந்திருக்கும்போது அந்த ஸ்ரீமஹாலக்ஷ்மிக்குத் தான் ஸ்தநம் முதலிய அவயவ ஸ்வரூபமாயிருந்து மாதவனை ஆநந்திப்பிக்கிறவள் |
| லக்ஷ்மீப்ரியஸகீம் | ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு இஷ்டமான தோழி அவளோடு ஸமாநமான குணங்களையுடையவள் |
| தேவீம் | குணங்களினாலும் அழகாலும் ப்ரகாசித்துக்கொண்டிருக்கிறவள் |
| ஆஶ்ரிதவத்ஸலாம் | ஸர்வேஶ்வரன் ஆஶ்ரித ஸம்ரக்ஷணத்தில் ப்ரவர்த்திக்கும்போது அவர்கள் குற்றங்களைக்கண்டு வெறுக்குங் காலத்தில் அவ்வெறுப்பைப்போக்கி அந்தந்த காலத்துக்குத் தக்கபடி அவன் ஸந்தோக்கும்படி செய்கிறவள் |
| நாயகீம் | ஸ்ரீயஃபதிக்கு நாயகியானவள் (அப்படிப்பட்ட) |
| பூமிதேவீம் | பூமிதேவியை |
| நமாமி | நமஸ்கரிக்கிறேன். |

ஶ்ருண்வந்தீ ஶ்ரோணாமம்ருதஸ்ய கோபாம்।
புண்யாமஸ்யா உபஶ்ருணோமி வாசம்।
மஹீம் தேவீம் விஷ்ணுபத்நீமஜூர்யாம்।
ப்ரதீசீமேநாம் ஹவிஷா யஜாம꞉॥ கச.

| | |
|---|---|
| அம்ருதஸ்ய | மோக்ஷத்துக்கு |
| கோபாம் | ரக்ஷையாயிருக்கிற |
| ஶ்ரோணாம் | ஸ்ரவணநக்ஷத்ரத்துக்கு ஸ்வாமினியான பூமிதேவியை |
| ஶ்ருண்வந்தி | (ஜ்ஞானிகள்) கேட்கிறார்கள் |
| அஸ்யா: | இவளுடைய விஷயமான |
| புண்யாம் | பரிசுத்தமான |
| வாசம் | வாக்கை (ஸ்தோத்ரத்தை) |
| உபஶ்ருணோமி | கேட்கிறேன் |
| மஹீம் | குணத்தால் பெரியவளாயும |
| தேவீம் | ப்ரகாசித்துக்கொண்டிருக்கிறவளாயும் |
| விஷ்ணுபத்னீம் | ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்கு நாயகியாயும் |
| அஜூர்யாம் | ஜ்வரம் முதலான ஸந்தாபங்களில்லாதவளாயும் |
| ப்ரதீசீம் | எங்கள் விஷயத்தில் அபிமுகையாயிருக்கிற |
| ஏனாம் | இந்த பூமிதேவியைக் குறித்து |
| ஹவிஷா | (ப்ராணனாகிற) ஹவிஸ்ஸினால் |
| யஜாம: | யாகம்செய்கிறோம். |

விசி.—இந்த பூமிதேவியே மோக்ஷத்தைக்கொடுத்து ரக்ஷிக்கிறவளென்று லோகத்தில் ப்ரஸித்தமாக எல்லாரும் காதினால் கேட்கிறார்கள். நானும அந்த பரிசுத்தமான இவளுடைய ஸம்பந்தமான வார்த்தைக் கேட்கிறேன். தோஷமில்லாதவளாய் குணத்தினால் பரிபூர்ணையான இந்த பூமிதேவியினிடத்தில் என்னுடைய ஆத்மாவை ஸமர்ப்பிக்கிறேன்.

வித்.—ஶ்ரவணநக்ஷத்ரரூபையாய் அவரவர்கள் செய்த கர்மாநுகுணமாக பலங்களைக் கொடுக்கிறவளுமான இந்த பூமியினுடைய கீர்த்தியை உலகத்திலெல்லாரும் கேட்கிறார்கள். நானும கேட்கிறேன். துக்கமில்லாமலும், குணவதியாயும், எங்களிடத்தி லாபிமுக்யத்தையுடையவளாயு மிருக்கிற விஷ்ணுவுக்கு ரக்ஷணீயையான இந்த பூமிதேவியைக் குறித்து நாங்கள் யஜ்ஞம செய்கிறோம்.

த்ரேதா விஷ்ணுருருகாயோ விசக்ரமே |
மஹீம் திவம் ப்ருதிவீமந்தரிக்ஷம் |

தம் ஶ்ரோணா ஶ்ரவ இச்சமாநா |
புண்யம் ஶ்லோகம் யஜமாநாய க்ருண்வதீ || ௪௫.

உருகாயஃ பெரிய கீர்த்தியையுடைய
விஷ்ணுஃ ஸ்ரீமஹாவிஷ்ணுவானவர்
மஹீம் பெரிய
ப்ருதிவீம் பூமியையும்
திவம் ஸ்வர்க்கத்தையும்
அந்தரிக்ஷம் ஆகாசத்தையும்
த்ரேதா மூன்று ப்ரகாரமாக
விசக்ரமே ஆக்ரமித்தார்
தம் அந்த விஷ்ணுவை
ஶ்ரோணா ஶ்ரவணநக்ஷத்ரத்துக்கு ஸ்வாமினியான பூமிதேவியானவள்
ஶ்ரவஃ கீர்த்தியை
இச்சமாநா ஆசைப்பட்டவளாய்க்கொண்டு
யஜமாநாய (தன்னை) பூஜிக்கிறவனுக்கு
புண்யம் பரிசுத்தமான
ஶ்லோகம் கீர்த்தியை
க்ருண்வதீ பண்ணுகிறவளாய்க்கொண்டு
ஏதி அடைகிறாள்.

விசே.—ஸ்ரீமஹாவிஷ்ணு எந்த த்ரிவிக்ரமாவதாரமெடுத்து பூமி, ஆகாசம், ஸ்வர்க்கலோகம் என்கிற மூன்று லோகத்தையும் தன் திருவடிகளினலளந்து லோகத்திலும் வேதத்திலும் பெரிய கீர்த்தியையுடையவனுய் ஸ்தோத்ரம செய்யப்படுகிறாரோ? தன்னை யாராதநம் செய்கிறவர்களுக்கு உத்தமமான கீர்த்தியை யளிக்கிற பூமிதேவி தன்னை யாஸ்ரயித்தவர்களுக்கு க்ஷேமத்தை யபேக்ஷித்தவளாய் அந்த த்ரிவிக்ரமாவதாரத்தைக் கிட்டி ப்ரார்த்திக்கிறாள். எம்பெருமான் ஸந்நிதியிற்சென்று ஆஸ்ரிதர் விஷயமாகத் தான் யாசித்து ஆஸ்ரிதர்களுக்கு மோக்ஷத்தைக் கொடுப்பிக்கிறாள் என்று தாத்பர்யம்.

வித்யாரண்ய பாஷ்யமும் விசிஷ்டாத்வைத பாஷ்யத்தோடொத்திருக்கிறபடியினால் அதை வேறாக எழுதவில்லை.

ஸவ்யாக்யாநம் பூஸூக்தம் ஸம்பூர்ணம்.

---



ஸ்ரீரஸ்து.

# நீளாஸூக்தம்.



நீளாம்தேவீம் சரணமஹம் ப்ரபத்யே க்ருணாஹி | க்ருதவதீ ஸவிதராதிபத்யை: பயஸ்வதீ ரந்திராசா நோ அஸ்து | த்ருவா திசாம் விஷ்ணுபத்ந்யகோராஸ்யேசாநா ஸஹஸோ யா மநோதா | ப்ருஹஸ்பதிர் மாதரிச்வோத வாயுஸ்ஸந்துவாநா வாதா அபி நோ க்ருணந்து | விஷ்டம்போ திவோ தருண: ப்ருதிவ்யா அஸ்யேசாநா ஜகதோ விஷ்ணுபத்நீ ||

| | |
|---|---|
| அஹம் | நான் |
| நீளாம்தேவீம் | நீளாதேவியை |
| சரணம் | ரக்ஷகமாக |
| ப்ரபத்யே | அடைகிறேன் |
| க்ருணாஹி | (நீளாதேவியே! எங்கள் விஷயத்தில்) ஹிதோபதேசத்தைப் பண்ணும் |
| ஸவித: | ஜகத்காரணமான பகவானே! |
| ஆசா | சேதனர்களை ஸம்ரக்ஷிக்கைக்காக வ்யாபித்திருக்கிற இந்த நீளாதேவி |
| க்ருதவதீ | நெய்யையுண்டுபண்ணுகிறவளாகவும் |
| ஆதிபத்யை: | ப்ரபுத்வங்களோடு (சேர்க்கிறவளாகவும்) |
| பயஸ்வதீ | பாலையுண்டுபண்ணுகிறவளாகவும் |
| ரந்தி: | ப்ரீதியையுண்டுபண்ணுகிறவளாகவும் |
| ந: | எங்கள் விஷயத்தில் |
| அஸ்து | ஆகட்டும் |
| யா | எந்த நீளாதேவி |
| திசாம் | அபராதம் செய்தவர்களுக்கு இடங்கொடுத்து ரக்ஷிக்கிறவர்களில் |
| த்ருவா | ப்ரதானையாயும் (ஆச்ரிதரக்ஷணத்தில்) அசஞ்சலையாயும் |
| விஷ்ணுபத்நீ | ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்குப் பத்நியாயும் |
| அகோரா | குளிர்ந்த ஸ்வரூபையாயும் |

| | |
|---|---|
| அஸ்ய | இந்த ஜகத்துக்கு |
| ஸம்ஸாநா | நியாமகையாயும் |
| ஸஹஸ: | பலத்துக்கு |
| ஸம்ஸாநா | நியாமகையாயும் |
| ஈடிதா | மனஸ்ஸினுல் பூஜிக்கப்பட்டவளாயுமிருக்கிறளோ? |
| தி³வ: | ஸ்வர்க்கத்துக்கு |
| விஷ்டம்ப: | அவலம்பமாயும |
| ப்ருதி²வ்யா: | பூமிக்கு |
| த⁴ருண: | ஆதாரமாயும் |
| அஸ்ய | இந்த |
| ஜக³த: | லோகத்துக்கு |
| ஸம்ஸாநா | நியாமகையாயுமிருக்கிற அந்த நீளாதேவியும் |
| ப்³ருஹஸ்பதி: | ப்ருஹஸ்பதியும் |
| மாதரிஶ்வா | விஷயவாயுவும் |
| வாயு: | ப்ராணவாயுவும் |
| ஸந்து⁴வாநா: | சலிப்பியாநிற்கிற வேறு வாயுக்களும் |
| ந: | எங்களை |
| அநுக்³ருண்ஹந்து | அநுக்ரஹிக்கட்டும். |

விசே.—நீளாதேவியைச் சரணமாக வடைகிறேன். அந்த நீளாதேவி எனக்கு இந்தலோகத்தி லநுபவிக்கவேண்டும் ஸுகங்களுக்கு ஸாதகமாக நெய் பால் முதலியவைகளின் ஸம்ருத்தியையும் ஸமஸ்தைச்வர்யங்களோடு கூடிய லோகாதிபத்யத்தையும் கொடுத்து, அநந்தரத்தில் நிரதிசயமான மோக்ஷஸுகத்தையும் கொடுக்கட்டும். எங்களுக்காக ஸர்வேஶ்வரன் விஷயத்தில் புருஷகாரத்தைப்பண்ணி எங்களை யங்கீகரித்தருள வேணும். ஆஶ்ரித ஸம்ரக்ஷணத்துக்காக ஸ்ரீதேவிபூதேவி முதலியவர்களிருந்தாலும் அவர்களில் நீரே ப்ரதானராயிருந்து ஆஶ்ரிதர் தோஷங்களைக் கொஞ்சமும் காட்டிக்கொடாமல் ரக்ஷிக்கிறீர். ஸர்வேஶ்வரனுக்கு அத்யந்தம் ப்ரியையாகவும், நாங்களும் ஆஶ்ரயிக்கும்படி ஸுமுகையாகவும், சேதநாபராதங்க

ளைப் பொறுப்பிக்கும்படியான பலத்தையுடையவளாயும, மனோவாக் காயங்களாகிற கரணத்ரயத்தினால் ஆராதிக்கத் தகுந்தவளாயும் ஸகல ஜகத்துக்கு மாதாரபூதையாயும், ஸ்வாமினியாயுமிருக்கிற நீர் உம்முடைய பரிஜனங்களுடன் கூட என்னைக் கடாக்ஷித் தங்கீகரித்தருள வேணும்.

ஸவ்யாக்யாநம் ஸ்ரீஸூக்தம் ஸம்பூர்ணம்.

---

ஸ்ரீரஸ்து.

# நாராயணஸூக்தம்.

—(:o:)—

ஸஹஸ்ரஶீர்ஷம் தேவம் விஶ்வாக்ஷம் விஶ்வஶம்புவம் । விஶ்வம் நாராயணம் தேவமக்ஷரம் பரமம் பதம் । விஶ்வத: பரமம் நித்யம் விஶ்வம் நாராயணம் ஹரிம் । விஶ்வமேவேதம் புருஷஸ்தத்விஶ்வமுபஜீவதி । பதிம் விஶ்வஸ்யாத்மேஶ்வரம் ஶாஶ்வதம் ஶிவமச்யுதம் । நாராயணம் மஹாஜ்ஞேயம் விஶ்வாத்மானம் பராயணம் । நாராயணபரம் ப்ரஹ்ம தத்த்வம் நாராயண: பர: । நாராயணபரோ ஜ்யோதிராத்மா நாராயண: பர: । யச்ச கிஞ்சிஜ்ஜகத்ஸர்வம் த்ருஶ்யதே ஶ்ரூயதேபி வா । அந்தர்பஹிஶ்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தித: । அனந்தமவ்யயம் கவிம் ஸமுத்ரேந்தம் விஶ்வஶம்புவம் । பத்மகோஶப்ரதீகாஶம் ஹ்ருதயம் சாப்யதோமுகம் । அதோ நிஷ்ட்யா விதஸ்த்யாந்தே நாப்யாமுபரி திஷ்டதி । ஹ்ருதயம் தத்விஜாநீயாத்விஶ்வஸ்யாயதனம் மஹத் । ஸந்ததம் ஸிராபிஸ்து லம்பத்யாகோஶஸந்நிபம் । தஸ்யாந்தே ஸுஷிரம் ஸூக்ஷ்மம் தஸ்மின் ஸர்வம் ப்ரதிஷ்டிதம் । தஸ்ய மத்யே மஹானக்நிர்விஶ்வார்சிர்விஶ்வதோமுக: । ஸோக்ரபுக்விபஜந்திஷ்டன்னாஹாரமஜர: கவி: । ஸந்தாபயதி ஸ்வம் தேஹமாபாததலமஸ்தக: । தஸ்ய மத்யே வஹ்நிஶிகா அணீயோர்த்வா வ்யவஸ்தித: ।

நீலதோயதமத்யஸ்தா வித்யுல்லேகேவ பாஸ்வரா । நீவாரஶூகவ த்தந்வீ பீதா பாஸ்வத்யணூபமா । தஸ்யா: ஶிகாயா மத்யே பரமாத்மா வ்யவஸ்தித: । ஸ ப்ரஹ்ம ஸ ஶிவ: ஸ ஹரி: ஸேந்த்ர: ஸோऽக்ஷர: பரம: ஸ்வராட் । இதி ஷஷ்டப்ரஶ்நே ஏகாதஶோநுவாக: ॥

முன்னனுவாகத்தில் தஹரவித்யையில் த்யானிக்கப்படுமென்ற தேவதை நாராயணனென்று சொல்லப்பட்டது. இந்த அநுவாகத்தில் எல்லா வித்யைகளிலும் சிவ சம்பு பரப்ரஹ்ம பரஞ்ஜோதி பரதத்வ பரமாத்ம முதலிய சப்தங்களால் த்யானிக்கப்படும் தேவதை சொல்லப்பட்டிருத்தலால் அச்சப்தங்களுக்கும் நாராயணனே பொருளென்று சொல்லப்படுகிறது.

ஸஹஸ்ரஶீர்ஷம் - ஆயிரம் தலைகளையுடையவனும், தேவம் - விளங்குகிறவனும், விஶ்வாக்ஷம் - எல்லாப்பொருள்களையும் பார்க்கிறவனும், விஶ்வஶம்புவம் - எல்லாவற்றிற்கும் க்ஷேமத்தைச் செய்பவனும், விஶ்வம் - எல்லாப் பொருள்களுக்கும் ஆத்மாவானவனும், தேவம் - அப்படி ஆத்மாவானாலும் அதின் தோஷங்களற்றவனும, அக்ஷரம் - அழிவில்லாதவனும், பரமம் - உயர்ந்தவனும், ப்ரபும் - யஜமானனுமாயிருக்கிறவன், நாராயணம் - நாராயணனை, விஶ்வத: பரமம் - எல்லாவற்றிற்கு முயர்ந்தவனும், நித்யம் - உத்பத்தியில்லாதவனும், விஶ்வம் - எல்லாப்பொருளுமாயிருக்கிறவனும், நாராயணம் - (ஸமஸ்த ப்ராணிகளுக்கும்) ப்ராப்யமாயும் அந்த ப்ராப்யத்துக்கு ப்ராபகமாயுமிருக்கிறவனும, ஹரிம் - மகாவிஷ்ணுவே. ஆனால் எல்லாப் பொருளும நாராயணனாக எப்படிக் கூடுமெனில் மேல் சொல்லுகிறது, இதம் - இந்த, விஶ்வம் - ப்ரபஞ்சமானது, புருஷ ஏவ - அந்த மகாபுருஷன்தான், தத் - அவன் அந்தராத்மாவாகையினாலே, விஶ்வம் - ப்ரபஞ்சமானது, உபஜீவதி - அவனையடைந்து ஜீவிக்கிறது, விஶ்வஸ்ய - ப்ரபஞ்சத்திற்கு, பதிம் - நாயகனும், ஆத்மேஶ்வரம் - எல்லா ஆத்மாக்களுக்கும் நாயகனும், ஶாஶ்வதம் - ஜனனமரணமில்லாதவனும், ஶிவம் - சிவனென்று சொல்லப்பட்டவனும,

அச்யுதம் - அடைந்தவர்களை நழுவவிடாதவனும், மஹாஜ்ஞேயம் - முக்கியமாக அறியத்தக்கவனும், விஶ்வாத்மாநம் - எல்லாவற்றிற்கும் ஆத்மாவும், பராயணம் - எல்லாவற்றிற்கும் கதியும், நாராயணம் - நாராயணனே. பரம்ப்ரஹ்ம - பரப்ரஹ்மமும், நாராயணஃ - நாராயணனே. பரஃ - உயர்ந்த, தத்வம் - வாஸ்தவமான பொருளும், நாராயணஃ - நாராயணனே. பரஃ - உயர்ந்த, ஜ்யோதிஃ - சோதியும், நாராயணஃ - நாராயணனே. பரஃ - உயர்ந்த, ஆத்மா - ஆத்மாவும், நாராயணஃ - நாராயணனே. அஸ்மிந் - இந்த, ஜகதி - உலகத்தில், யத்கிஞ்சித் - யாதொன்று, த்ருஶ்யதே - காணப்படுகிறதோ; ஶ்ரூயதே அபி வா - கேட்கவாவது படுகிறதோ; தத் - அந்த, ஸர்வம் - எல்லாப்பொருளையும், அந்தஃ - உள்ளும், பஹிஶ்ச - வெளியிலும், வ்யாப்ய - நிறைந்து, நாராயணஃ - நாராயணனென்பவன், ஸ்திதஃ - இருக்கிறான், அநந்தம் - அனந்தனென்கிற பெயரையுடையவனும், அவ்யயம் - நாசமில்லாதவனும், கவிம் - எல்லாச்சப்தங்களையும் உச்சரிக்கிறவனும், ஸமுத்ரேந்தம் - சமுத்திரத்தில் வஸிப்பவனும், விஶ்வஶம்புவம் - ஸகலத்திற்கும் நன்மையை விளைக்கிறவனும், நாராயணஃ - நாராயணனே. நிஷ்ட்யா - கழுத்தின் மூலத்திற்கு, அதஃ - கீழும், நாப்யாம் - கொப்பூழுக்கு, உபரி - மேலும், விதஸ்த்யாம் - கட்டை விரலளவில், பத்மகோஶப்ரதீகாஶம் - தாமரை மொக்குப்போன்ற, அதோமுகம் - தலைகீழாக, ஹ்ருதயம் சாபி - ஹிருதயமும், திஷ்டதி - இருக்கிறது, தத் - அந்த, ஹ்ருதயம் - ஹிருதயத்தை, விஶ்வஸ்ய - உலகத்தினாத்மாவான நாராயணனுக்கு, மஹத் - பெரிதான, ஆயதநம் - இருப்பிடமாக, விஜாநீயாத் - அறியவேண்டும், ஆகோஶஸந்நிபம் - கொஞ்சம் மலர்ந்த தாமரை மொக்குக்குச் சரிசமானமான அந்தஹிருதயமானது, ஸந்ததம் - எக்காலத்திலும், ஶிராபிஃ - நரம்புகளோடு, லம்பதி - தொங்குகிறது, தஸ்ய - அந்த ஹிருதயத்தினுடைய, அந்தே - நடுவில், ஸூக்ஷ்மம் - நுட்பமான, ஸுஷிரம் - துவாரமானது, அஸ்தி - இருக்கிறது, தஸ்மிந் - அந்த

த்துவாரத்தில், ஸர்வஸ்ய - எல்லாவற்றிற்கும் ஈசனானவன், ப்ரதிஷ்டிதம் - இருக்கிறான். விஶ்வாசிஷ: - எவ்விடத்திலும் பரவின ஜ்வாலையுடனும், விஶ்வதோமுக: - எல்லாவிடத்திலும் பரவியும், மஹாந் - பெரிதுமான, அக்நி: - ஜாடராக்கினியானது, தஸ்ய - அந்த ஹிருதயத்தினுடைய, மத்யே - நடுவில், திஷ்டதி - இருக்கிறது, ஸ: - அந்த அக்கினியானது, அஜர: - அழியாததாகவும், கவி: - ஒலித்துக்கொண்டும், ஆஹாரம் - சாப்பிடப்பட்டதை, விபஜந் "அணு ஸ்தூல த்ரேதா வியமதே" - என்கிறபடியே மூன்றுவிதமாகப் பிரித்துக்கொண்டு, அக்ரபுக் - சாப்பிடப்பட்டதை முன்னடி தான் சாப்பிடுகிறது. ஸ்வம் - தன்னுடைய, தேஹம் - சரீரத்தை, ஆபாதத லமஸ்தகம் - உள்ளங்கால் முதல் தலைவரைக்கும், ஸந்தாபயதி - சூட்டையுண்டாக்குகிறது, தஸ்ய - அந்த அக்கினியினுடைய, மத்யே - நடுவில், அணீயோர்த்வா - மெல்லியதாயும் மேல் நோக்கினதாயும், வஹ்நிஶிகா - ஜ்வாலையானது, வ்யவஸ்தித: - இருக்கிறது. நீலதோயதமத்யஸ்தா - கறுத்த மேகத்தின் நடுவிலிருக்கிற, பாஸ்வரா - ஒளியுடன்கூடிய, வித்யுல்லேகேவ - மின்னல் கொடிபோலவும், நீவாரஶூகவத் - நெல் நுனிபோல, தந்வீ - மெல்லியதாகவும், பீதாபா - ஸ்வயம்பிரகாசமாயும், அணூபமா - சமானமில்லாததாகவும், ஸ்யாத் - இருக்கிறது. தஸ்யா: - அந்த, ஶிகாயா: - அக்கிஜ்வாலையினுடைய, மத்யே - நடுவில், பரமாத்மா - பரமாத்மாவானவன், வ்யவஸ்தித: - இருக்கிறான், ஸ: - அந்தப் பரமாத்மாவானவன், ப்ரஹ்மா - ப்ரஹ்மாவுக் கந்தர்யாமி; ஸ: - அவன், ஶிவ: - சிவனுக் கந்தர்யாமி; ஸ: - அவன், இந்த்ர: - இந்திரனுக் கந்தர்யாமி; ஸ: - அவன், அக்ஷர: - பாவமில்லாதவன்; பரம: - உயர்ந்தவன்; ஸ்வராட் - கர்மத்திற்கு வசப்படாதவன்.

ருதꣳ ஸத்யம் பரம் ப்ரஹ்ம புருஷம் க்ருஷ்ணபிங்களம் । ஊர்த்வரேதம் விரூபாக்ஷம் விஶ்வரூபாய வை நம: । இதி ஷஷ்ட்யாம் ப்ரஶ்நோ தஶாநுவாக: ॥

ருதம் - எல்லாவிடத்திலுமிருக்கிற, ஸத்யம் - விகாரமில்லாமலிருக்கிற, பரம்ப்ரஹ்ம - பரப்ரஹ்மமென்றும், புருஷம் - புருஷனென்றும் சொல்லப்பட்ட, க்ருஷ்ணபிங்களம் - மஞ்சளும் கறுப்பும் கலந்த வர்ணமான, ஊர்த்வரேதம் - உயர்ந்த வீர்யத்தோடுகூடிய, விரூபாக்ஷம் "தஸ்ய விஷமாணி நேத்ராணி தேஜஸ்ஸஹஸ்ர | தக்ஷிணம் வஹ்நிஸங்காஶம் வாமம் சந்த்ரநிபம்" - என்கிறபடியே வெவ்வேறு குணமுள்ள கண்களையுடைய, விஶ்வரூபாய வை - எல்லாப் பொருளின் உருவத்துடன்கூடிய பரமாத்மாவின் பொருட்டு, நம: - நமஸ்கரிக்கிறேன்.

ப்ரதிபதத்தில் எழுதியிருக்கிற அர்த்தங்களே பாஷ்யத்தில் அநேகமாயிருக்கிறதுகள் - அதிலுள்ள சிலவிசேஷங்கள் எழுதப்படுகின்றன. ஜகத்காரணமான வஸ்துவை மோக்ஷப்ராப்திக்காக உபாஸனை செய்யவேண்டுமென்று சொல்லி அந்தந்த வித்யைகளில், சம்பு, இந்திரன், நாராயணன், அக்ஷரம். இந்தவிதமான சப்தங்களினால் உபாஸிக்க வேண்டியவஸ்துவைச் சொன்னபடியால் இவர்களில் ஜகத்துக்குக் காரணமானவர் யார்; யாரை உபாஸிக்கவேண்டும் என்றால், சம்புஇந்திரன் முதலிய சப்தங்களினால் சொல்லப் பட்டவன் நாராயணனே; அவனே ஜகத்துக்குக் காரணம்; அவனையே மோக்ஷகாமர்கள் உபாஸநம் செய்யக்கடவர்கள். அந்தந்த வித்யைகளில் நாமாந்தரங்களினால் நாராயணனே ப்ரதிபாதிக் கப்பட்டான். என்று இந்த அநுவாகத்தில சொல்லுகிறது. நாராயணனை விச்வமென்று சொல்லுகிறபடி யென்னெனில்; விச்வம் இவனால் ஸ்ருஷ்டிக்கப்பட்டு இவனால் ரக்ஷிக்கப் படுகிறபடியால் இவனை விஶ்வ மென்று சொல்லுகிறது. இவனே ப்ரஹ்மா இந்திரன் முதலிய ஸகல தேவர்களுக்கும் காரணமாய் அவர்களுக்கு அந்தர்யாமியாய், அவர்களுக்கும் பரமப்ராப்யனாய் ப்ராபகனுமாயிருக்கிற படியால் இந்த ஸ்ரீமந் நாராயணனே ஸர்வோத்தமனென்றதாயிற்று.

நாராயணஸூக்தம் ஸம்பூர்ணம்.

